# கல்கி

KALKI
15.7.2001
ரூ. 5.00



# கமலைக் காப்பியடிப்பது ஏன்?

–அஜித்துடன் உரசல்!

உ

ஸ்ரீராமஜெயம்

ஸ்ரீ விகனஸ மஹா குருவே நம:





# ஸ்ரீ மஹா சுதர்ஸன ஜெயந்தியை முன்னிட்டு ஸ்ரீ சுதர்ஸன மஹா யக்ஞ்யம் (ஒரு லக்ஷ்க்ஷம் ஆவர்த்தி)

## (2.8.2001 வியாழன் முதல் 5.8.2001 ஞாயிறு முடிய)

பேரன்புடையீர்,

இப்பவும் நாளது வருஷம் ஆடி மாதம் 17ஆம் தேதி முதல் 20ம் தேதி முடிய **2.8.2001** வியாழன் முதல் **5.8.2001** ஞாயிறு முடிய **ஸ்ரீ மஹா சுதர்ஸன யாகமும்** 5.8.2001 மாலை 4.00 மணி அளவில் ***ஸ்ரீ சுதர்ஸனலக்ஷ்மி ஸ்ரீ சுதர்ஸனமூர்த்தி*** திருகல்யாண உற்சவமும் மிக விமரிசையாக நடைபெறும். பக்தர்கள் அனைவரும் கலந்து கொண்டு ஸ்ரீ சுதர்ஸன லக்ஷ்மி சமேத ஸ்ரீ மஹா சுதர்ஸன மூர்த்தி பரிபூரண திரு அருள் பெற வேண்டுகிறோம்.

கட்டணம் ரூ. 100/- ரூ. 250/- ரூ.500/- ரூ. 1000/- ரூ. 2000/- ரூ. 5000/-

**ஸ்ரீ சுதர்ஸன மஹா யக்ஞயம் T.V.R. சுப்புசெட்டி வசந்த மண்டபம், நெ.14, மேற்கு சித்திரகுளம் தெரு, மைலாப்பூர், சென்னை – 4. என்ற இடத்தில் நடைபெறும்.**

குறிப்பு:

- ☞ ரூ. 100/- செலுத்தும் பக்தர்களுக்கு ஸ்ரீ சுதர்ஸன காப்பர் டாலர் வழங்கப்படும்.
- ☞ ரூ. 250/- செலுத்தும் பக்தர்களுக்கு ஸ்ரீ சுதர்ஸன வெள்ளி டாலர் வழங்கப்படும்.
- ☞ ரூ. 500/- செலுத்தும் பக்தர்களுக்கு ஸ்ரீ சுதர்ஸன யந்திரம், ஸ்ரீ சுதர்ஸன ரக்ஷைஷ வைத்த வெள்ளி தாயத்து வழங்கப்படும்.
- ☞ ரூ. 1000/- செலுத்தும் பக்தர்களுக்கு ஸ்ரீ சுதர்ஸனயந்திரம், ஸ்ரீ சுதர்ஸன ரக்ஷைஷ வைத்த வெள்ளி தாயத்து மற்றும் திருகல்யாண உற்சவத்திலும் பங்கு கொள்ளலாம்.
- ☞ ரூ. 2000/- செலுத்தும் பக்தர்களுக்கு யாக சாலையில் உள் விசேஷசங்கல்பம், ஸ்ரீ மஹா சுதர்ஸன யந்திரம், ஸ்ரீ சுதர்ஸன ரக்ஷைஷ வைத்த 1 கிராம் தங்க தாயத்தில் வைத்து கொடுக்கப்படும். திருகல்யாண உற்சவத்திலும் கலந்து கொள்ளலாம்.
- ☞ ரூ. 5000/- செலுத்தும் பக்தர்களுக்கு யாக சாலையில் உள் விசேஷசங்கல்பம், ஸ்ரீ மஹா சுதர்ஸன யந்திரம், ஸ்ரீ சுதர்ஸன ரக்ஷைஷ வைத்த 1 கிராம் தங்க தாயத்தும் 5.8.2001 பூர்ணாதி முடிந்தவுடன் ஒரு தம்பதிக்கு கும்பஸ்நானமும், யாகத்தில் வைத்த ஒரு கலசம் (குடம்) கொடுக்கப்படும். திருகல்யாண உற்சவத்திலும், விசேஷசங்கல்பம், மாலை மரியாதை வழங்கப்படும்.

**மேற்கண்ட அனைத்தும் ஸ்ரீ சுதர்ஸன மஹா யக்ஞய பூஜையில் வைத்து கொடுக்கப்படும். மேலும் கலந்து கொள்ளும் பக்தர்கள் அனைவருக்கும் தனி தனியாக சங்கல்பம், ரக்ஷாபந்தனம் செய்து, ஸ்ரீ சுதர்ஸனமூர்த்தி படம் வழங்கப்படும்.**

ஸ்ரீ சுதர்ஸன மஹாயக்ஞ்யம் (1 லக்ஷ்க்ஷம் ஆவர்த்தி) டிக்கட் கிடைக்கும் இடம்:

S. ஸ்ரீ ரங்கராஜபட்டாசாரியார், பழைய எண்: 5, புதிய எண்: 32, கேசவபெருமாள் சன்னதி தெரு, மைலாப்பூர், சென்னை - 4. ஃபோன்: 4610179. (நேரம்: காலை 11 மணி முதல் இரவு 8 மணி வரை)

**M.O/ D.D. அனுப்பும் பக்தர்கள் கீழ்கண்ட விலாசத்திற்கு அனுப்பவும்**
**(காசோலை ஏற்று கொள்ளபட மாட்டாது)**

ஸ்ரீ சுதர்ஸன மஹா யக்ஞ்ய கமிட்டி.
S. ஸ்ரீ ரங்கராஜபட்டாசாரியார், பழைய எண்: 5, புதிய எண்:
32, கேசவபெருமாள் சன்னதி தெரு, மைலாப்பூர்,
சென்னை - 4. ஃபோன்: 4610179



## களைப்புடன் கர்ஜித்த கலைஞர்!

# "நாடு தாங்காது!"

பிற்பகல் 1.30 மணி. அவசர அவசரமாக சில முக்கிய சாலைகளுக்கு சீல் வைத்தனர் போக்குவரத்துப் போலீசார். இதற்குள் கலைஞர் விடுதலை செய்யப்படுகிறார் என்கிற செய்தி காட்டுத் தீயாகப் பரவ, கையில் தி.மு.க. கொடிகள் சகிதம், சிறை நோக்கித் திரளத் தொடங்கியிருந்தனர் தொண்டர்கள். அத்தனை பேர் முகத்திலும், ஆர்ட்டீசியன் ஊற்று மாதிரி மகிழ்ச்சி பொங்கியது.

"நல்லா தூங்கி நாலு நாள் ஆச்சு சார்... இப்போதான் ரொம்ப ரிலீஃப்பா இருக்கு" என்று ஆனந்தமாய்க் கண் கலங்கியபடி சொன்னார் ஒரு தொண்டர்.

சிறையின் பிரதான நுழைவாயிலுக்குள் முக்கிய கட்சிப் பிரமுகர்களை மட்டுமே அனுமதித்தனர் போலீசார். மீடியாகாரர்களை, பல்லவன் மேம்பாலத்திலேயே தடுத்து நிறுத்திவிட்டதால், கேமராவும் கையுமாக, பிராதன நுழைவாயிலின் சப்கேட் நோக்கித் தயாராய் போக்கஸ் செய்தபடி நின்றிருந்தனர். இதற்குள் நிற்க இடமில்லாமல் மேம்பாலம் தொண்டர்களால் நிரம்ப, தண்ணீர் பீரங்கி வண்டிக்கு ஒயர்லெஸ் மூலம் உத்தரவு பிறப்பித்தார் ஓர் அதிகாரி. தொண்டர்கள் கூட்டம் "பீரங்கியே வந்தாலும் இனிமே பயப்பட மாட்டோம். கலைஞர் வாழ்க!" என்று உற்சாக குரல் எழுப்ப... ராயபுரத்திலிருந்து வந்த சில தொண்டர்கள், கொண்டு வந்த குழாய் ஒலி பெருக்கிகளை மேம்பாலத்தின் நடுவிலிருந்த சோடியம் விளக்கு கம்பத்தில் கட்டி.... உடனடியாக உயிரூட்டி... அடுத்த கணம், அங்கே ஒரு மாபெரும் விடுதலைத் திருவிழா! ஒலிபெருக்கியில் கலைஞரை வாழ்த்தியும், ஜெயலலிதா, முத்துக்கருப்பன், ரவீந்தரநாத் ஆகியோருக்கு எதிராகவும் கோஷங்களை எழுப்ப, அங்கே திரண்டிருந்த ஐயாயிரம் தொண்டர்களும் அதற்குப் பதிலுரைத்த போது, அந்தப் பகுதியே கிடுகிடுத்தது.

பிற்பகல் 4 மணி. மதியம் தொடங்கிய

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

காத்திருப்பு... நீண்டு கொண்டே போக அங்கிருந்த அத்தனை பேரின் இதயத் துடிப்பும், சிறைச்சாலையின் இருமடங்கிலும் ஓடிய மின்சார ரயில் வண்டிகளைப் போல் தடதடத்தன.

மீடியாவினர் மேம்பாலத்துக்குக் கீழே இறங்கி, ரயில் தண்டவாளங்கள் வழியாக கூவத்தைக் கடந்து, சிறைச்சாலையின் பிரதான வாயிலுக்குள் மெள்ள ஊடுருவியதை போலீசார் கண்டு கொள்ளவில்லை.

கலைஞரை எதிர்பார்த்து மத்திய அமைச்சர் மாறனில் தொடங்கி, தயாளு அம்மாள், கனிமொழி, அரவிந்தன் முன்னாள் மாநில அமைச்சர்கள், டாக்டர் கிருஷ்ணசாமி, கலைஞரின் குடும்ப டாக்டர் கோபால் என்று அங்கே மட்டும் ஐந்நூறு பேர்.

"நீதிமன்ற உத்தரவு இன்னும் வந்து சேரவில்லை. அதற்காகத்தான் ஜெயிலர் காத்திருக்கிறார்" என்றார் துரைமுருகன்.

கணவருக்காக மணிக்கணக்கில் காத்திருந்ததில் தொண்டை வரண்டு போன தயாளு அம்மாள், "தாகமாய் இருக்கு" என்றதும் அருகில் நின்று கொண்டிருந்த உறவினர் ஒருவர் ஓடிப் போய் மினரல் வாட்டர் பாட்டிலை எடுத்து வந்து கொடுக்க குடித்துக் கொண்டே இருந்தார். கேமராக்கள் கிளிக்கிக் கொண்டே இருந்தன.

"நிம்மதியாக இருக்கு. ஆனால், தலைவரைக் கைது செஞ்ச இழுத்துட்டுப் போன முறையை நினைச்சுப் பார்த்தாலே 'பகீர்'ன்னு இருக்கு. அவ்வளவு சீக்கிரம் அதை மறக்க முடியுமா? தலைவர் மறுபிறவி எடுத்திருக்காருங்கிறது, நம்ம நாட்டுக்கு மட்டுமில்ல, உலகத்துக்கே தெரியும். இதுக்கு மேலே நான் என்னத்தச் சொல்ல" என்று வேதனையின் வலியை முகத்தில் காட்டினார் தயாளு அம்மாள்.

அங்கிருந்து மாறன் அமர்ந்திருந்த புங்க மரத்தடிக்கு நகர்ந்தோம். ஸ்டார் செய்தி தொலைக்காட்சியின் நிருபர் செல்போனில் கேட்ட கேள்விகளுக்குப் பதில் சொல்லிக் கொண்டிருந்தார்.

"கலைஞர் மிகவும் களைப்புற்றும், பலவீனமாகவும் இருப்பதால், அனேகமாக அவரை அப்பல்லோ மருத்துவமனைக்கு அழைத்துச் செல்வதாக இருக்கிறோம்" என்றார் குடும்ப டாக்டர் கோபால். இதற்கிடையே மேம்பாலத்தில் திரண்டிருந்த தொண்டர்களின் கோஷம் வானைக் குடைந்தது.

சரியாக 5.15 மணி. அவசர அவசரமாக நீதிமன்ற உத்தரவின் நகலோடு உள்ளே நுழைந்த கோர்ட் ஊழியரை கேமராக் காரர்களின் ஆக்கிரமிப்பில் இருந்து பிதுக்கி உள்ளே இழுத்துக் கொண்டனர் சிறைச் சாலை போலீசார்.



அடுத்த பத்தாவது நிமிடம், சக்கர நாற்காலியில் சப்கேட் வழியாக கலைஞரைத் தள்ளி வந்தனர். அவரது முகத்தைப் பார்த்த அடுத்த வினாடி "தலைவா" என்ற உற்சாக கூவலும் கோஷங்களும் செவிப் பறைக்கு சவால் விடுத்தன.

மாலை நேரத்துச் சூரியன் போல் விடுதலையாகி வெளிவந்த கலைஞரின் முகத்தில் உற்சாகத்தையும் மீறிய களைப்பு. சிறைச்சாலை

வளாகத்திலிருந்து அவரை வெளியே அழைத்துவர படாதபாடு பட்டனர் போலீசார். திடீரெனத் தோன்றிய மு.க. அழகிரி, சக்கர நாற்காலிக்கருகே தரையில் அமர்ந்து, கலைஞரின் கைகளைப் பற்றிக் கொள்ள... அங்கே நடந்த தள்ளு முள்ளுவில் அவரது மூக்குக் கண்ணாடி மிஸ்ஸிங். கலைஞரின் டாடா சுமோ ஜீப்பிற்குள் அவரை ஏற்றுவதற்குச் சரியாக பத்து நிமிடம் பிடித்தது. அந்த ஜீப்பின் கூரையில் பாய்ந்து ஏறிய எழும்பூர் எம்.எல்.ஏ. பரிதி இளம் வழுதி, ஒரு அடி மட்டத் தொண்டனாக மாறி, புதையலைக் கண்ட உற்சாகத்தோடு கோஷம் எழுப்ப ஆரம்பித்துவிட்டார்.

போலீஸ் காவலோடு சிறைச்சாலை வளாகப் பாலத்தைக் கடந்து, பிரதான வாயிலுக்குக் கலைஞர் வந்தபோது, மணி 5.30. அங்கே கூடியிருந்த தொண்டர்கள், தலைவர் பேசியே தீர வேண்டும் என்று தொண்டை கிழியக் கத்தியதையடுத்து, களைப்புடன் இருந்த கலைஞர் ஒலி வாங்கியை பிடித்துப் பேசினார்.

"என் உயிரினும் மேலான அன்பு உடன் பிறப்புகளே... இந்த விடுதலை யார் தயவாலும் கிடைத்ததல்ல. உலகம் முழுவதும் உள்ள உங்களைப் போன்றவர்கள், மனித உரிமையை மதிக்க நினைப்பவர்களால் கிடைத்தது..."

**5.50** மணிக்கு கோபாலபுரம் வீட்டிற்குக் கலைஞர் வந்தபோது அங்கே இல. கணேசன், வைரமுத்து, விஜயகாந்த், உறவினர்கள், நண்பர்கள் தொண்டர்கள் என்று கூட்டம் அலைமோதியது. 7.05 மணிக்கு அறிவாலயம் வந்தார் கலைஞர். குழுமியிருந்த பத்திரிகையாளர்கள் மத்தியில் தம்மைக் கைது செய்த தினத்தன்று நடந்த உண்மை நிலவரத்தின் ஒவ்வொரு நிமிடத்தையும் உணர்ச்சி பொங்க, விவரித்த படியே வந்தார். முரசொலியில் பல ஆயிரம் கடிதங்கள் எழுதிய வலது கையால் இன்று மத்திய உள்துறைச் செயலருக்கு ஒரு கடிதம் எழுத முடியவில்லை" என்று உணர்ச்சிப் பெருக்கில் அவர் கண் கலங்கியபோது, பத்திரிகையாளர்கள்கூட பாகுபாடு இல்லாமல் ஒரு கணம் துடித்துப் போனார்கள்.

"நான் தாக்கப்பட்டதை அரசியல் ஆக்காமல், இந்தியாவில் இருக்கிற நூறு கோடி ஜனங்களின் மனித உரிமை மீறலாகக் கருதி, எனக்கு ஆதரவு குரல் கொடுத்த அத்தனை பேருக்கும் நன்றி."

பத்திரிகையாளர்களின் கேள்விகளுக்குக் காரம் குறையாமல் பதில் சொன்னார் கலைஞர்.

"இன்னொரு எமர்ஜென்சியை நாடு தாங்காது" என்று களைப்பும் வலியும் கலந்து எச்சரித்தார். அது மிகையான எச்சரிக்கை அல்ல என்பதை நிரூபிக்கும் விதமாகத்தானே இருக்கிறது ஜெயலலிதாவின் ஐம்பதுநாள் ஆட்சி!

**சக்கரத்தாழ்வார்**

படங்கள் : **கே.வி. சீனிவாசன்**

## இது ஒரு தாயின் மனக் குமுறல்!

**என் மகன் கிருஷ்ணசாமி மதுரையில் 'வைசியா வங்கி'யில் பணி புரிகிறார்.**

**30.6.2001 சனிக்கிழமை இரவு கோயம்புத்தூர் வந்துவிட்டு, ஞாயிற்றுக் கிழமை மாலை, மதுரை திரும்பினார். பேருந்தும் மதுரை வரை சென்று விட்டது. மதுரை நெருங்கியவுடன் வேகமாகப் பறந்து வந்த கல், பேருந்தின் கண்ணாடியை உடைத்துக் கொண்டு சரியாக என் மகனின் கண் அருகே அடித்துக் கீழே விழுந்தது.**

**கண் வலியில் துடித்த என் மகன் பக்கத்திலிருந்த மருத்துவமனைக்குச் சென்று காட்டி, பிறகு மதுரை அரவிந்த் கண் மருத்துவமனைக்கு அழைத்துச் செல்லப்பட்டு...**

**என்ன எழுதி என்ன? என்ன அழுது என்ன? இதோ இதை எழுதும் மாலை மூன்று மணிக்கு என் மகனின் இடது கண்ணையே அப்புறப்படுத்திவிட்டார்கள். 35 வயதே ஆனவனுக்கு நண்டும் சிண்டுமாக இரண்டு குழந்தைகள்.**

**மாறி மாறி டீ.வி.யில் காட்சிகளைக் காட்டி என்ன பயன்? இவர்களால் என் மகனுக்குக் கண்ணைத் திருப்பித் தர முடியுமா? அரசியல் வன்மங்கள் பொதுமக்களின் துன்பமாக மாறும் இந்த நிலைமை என்று மாறும்?**

**கோவை, மீனாட்சி.**

# 'ஜெ'வைக் காப்பாற்றியது விஜயசாந்தியா?...

கலைஞர் மீது தமிழ்நாடு போலீஸ் அத்து மீறலைக் கட்டவிழ்த்து விட்டதைக் கண்டிக்கும் வகையில் 'சன்' தொலைக்காட்சியில் பிரபல நடிக, நடிகைகளின் அறிக்கைகள் படிக்கப்பட்டன. இதைக் கண்ணுற்ற ஜெயா தொலைக்காட்சி, தன் பங்குக்குத் திரைப்படத் துறையில் சிலரைப் பிடித்து கலைஞரைக் கண்டிக்கும் வகையில் அறிக்கைகள் வாங்க அலையோ அலை என்று அலைந்தது. அ.இ.அ.தி.மு.க.வைச் சேர்ந்த, அதிகமாக பிரபலமாகாத குண்டு கல்யாணம், தாமு, எஸ்.எஸ். சந்திரன் போன்றவர்களும்தான் அகப்பட்டனர். அப்படிப் பட்ட நிலையில் பா.ஜ.க.வைச் சேர்ந்த நடிகை விஜயசாந்தி, தாமாகவே முன் வந்து கலைஞரைக் கண்டித்தும், அ.இ.அ.தி.மு.க ஆட்சியைக் கவிழ்த்தால் தெருவில் இறங்கிப் போராடுவதாகவும் அறிவித்தார். ஜெயா தொலைக்காட்சி அலுவலகத்துக்கு நேரடியாக வந்து பேட்டியளித்தார் விஜயசாந்தி. அவருக்கு ஜெயலலிதா மீது அப்படியென்ன கரிசனம்?

1998ம் ஆண்டு பா.ஜ.க - அ.இ.அ.தி.மு.க கூட்டணி இருந்தபோது அந்தக் கூட்டணி வெற்றி பெறுவதற்காக தமிழகமெங்கும் அலைந்து வோட்டு வேட்டை ஆடியவர் விஜயசாந்திதான். ஜெயலலிதாவை, விஜயசாந்திக்குத் தெரிந்திருந்தாலும் அ.இ.அ.தி.மு.க.வுக்குப் பிரசாரம் செய்த காரணத்தால், இருவரிடையே நட்பு மேலும் இறுகியது. இந்த முறை ஜெயலலிதா ஆட்சிக்கு வந்ததும் உடனே நேரில் சென்று வாழ்த்திவிட்டு வந்தார் விஜயசாந்தி. கிருஷ்ணாநதிநீர் விவகாரத்தில், ஜெயலலிதா கேட்டுக் கொண்டதால் கலைஞரைத் தாக்கி கடுமையான அறிக்கை விட்டார். இதற்குப் பதிலளிக்கும் விவகாரத்தில், 'எனக்குப் பேசுவதற்கு அருகதை கிடையாது என்று ஜெயலலிதா சொல்கிறார். ஆட்டோ சங்கருக்குத்தான் அருகதை உள்ளது என மற்றொரு நடிகை (விஜயசாந்தி) சொல்கிறார்' என்று கிண்டலாக அறிக்கை விட்டார் கலைஞர்.

கலைஞரைக் கண்டித்துப் பேசியதோடு நிற்காமல் "உங்க ஆட்சியை யாராலும் கவிழ்க்க முடியாது: அதற்கு நான் கியாரண்டி" என்றும் ஜெயாவிடம் சொன்னாராம் விஜயசாந்தி. அவர் அப்படி பந்தாவாகச் சொல்வதற்குக் காரணம் இருக்கிறது என்கிறார்கள் பா.ஜ.க பிரமுகர்கள். 'தமிழக அரசை ஒன்றும் செய்யக்கூடாது' என்று தம் தரப்பிலிருந்து பா.ஜ.க.வில் சொல்ல வேண்டிய நபருக்குச் சொல்லிவிட்டாராம் விஜயசாந்தி. அதன் காரணமாகத்தான் ஆட்சிக் கவிழ்ப்பு நடவடிக்கை புஸ்வாணமாகிவிட்டதாம்.

"விஜயசாந்தியை உடனடியாக கட்சியிலிருந்து நீக்க வேண்டும்" என்று தி.மு.க.வினர் இப்போது பா.ஜ.க.வுக்கு அழுத்தம் கொடுக்கத் துவங்கியிருக்கிறார்கள். ஆனால் தமிழக பா.ஜ.க கொஞ்சம் தர்ம சங்கடமான நிலையில் இருக்கிறது. விஜயசாந்தி சென்னையில் வசித்தாலும் தமிழக பா.ஜ.க அவரை நீக்க முடியாது. காரணம் அவர் ஆந்திர பா.ஜ.கவைச் சேர்ந்தவர்! இந்தக் குழப்பம் காரணமாக கட்சியின் மத்திய யூனிட் விஜயசாந்தியை நீக்க வேண்டும் என்று சொல்கிறார்கள் தமிழக பா.ஜ.கவினர். சோனியா காந்தி கடப்பா பகுதியில் இருந்து பாராளுமன்றத்துக்குப் போட்டியிட திட்டமிட்டபோது அவரை எதிர்த்து நிற்க பா.ஜ.க.வால் தயார் செய்யப்பட்டவர் விஜயசாந்திதான். விஜயசாந்தியைக் கண்டித்துக் கடுமையான அறிக்கை விட்டிருக்கிறார் நடிகர் நெப்போலியன் ''என்னை நீக்கினாலும் கவலையில்லை. நான் தொடர்ந்து ஜெயலலிதா ஆதரவாளராகத்தான் இருப்பேன்" என்று சொல்கிறாராம் விஜயசாந்தி.

— சஞ்சயன்





* அம்மாவும் பாட்டியும்

# கடைசி மூணு ரூபாய்!

"இன்னைக்கு பஸ்சுக்குன்னு ஆறு ரூபாயெல்லாம் தர வேணாம்மா. மூணு ரூபா மட்டும் கொடு போதும். நாளைலேர்ந்து அதுவும் நீ தர வேண்டாம்மா!" என்று பத்து வயது பள்ளி மாணவி தன் தாயிடம் சொன்ன வாக்கு அப்படியே பலித்துவிடும் என்று யாரும் நினைக்கவில்லை.

"ஏம்மா... மாரி மூணு ரூபா போதும்ங்கறே. வரும்போது பஸ்சுக்கு என்ன செய்வே?" எனக் கேட்டிருக்கிறார் தாய்.

"நேற்றே பஸ் பாஸ் வந்திடுச்சுன்னு சொன்னாங்கம்மா. இன்னைக்குக் கொடுத்துடுவாங்க. சாயந்திரம் நா ஃப்ரீ பஸ் பாஸ்லதான் வீடு வந்து சேருவேன்." என்று சொல்லிவிட்டுச் சென்ற சிறுமி, உயிரற்ற உடலாக இரவு வீடு வந்து சேர்ந்தபோது அந்தத் தெருவே அதிர்ச்சியில் உறைந்து போனது.

அரசு பஸ் டிரைவர்கள் மற்றும் கண்டக்டர்கள், இலவச பஸ் பாஸ் வைத்துள்ள மாணவ மாணவிகள் மீது காட்டி வரும் அலட்சியப் போக்கினால், கடந்த ஒரு வாரத்திற்குள் திருச்சியில் இரண்டு மாணவிகள் அநியாயமாக பலியாகி இருக்கிறார்கள்.

அதில் ஒருவர்தான் இந்த ஆறாம் வகுப்பு மாணவி மாரியம்மாள்.

திருச்சி, எடமலைப்பட்டி புதூர் அருகிலிருக்கும் ராமச்சந்திரா நகரில் வசிக்கும் செல்வராஜ் - அஞ்சம்மாள், ஆகியோரின் மூத்த மகள்தான் இந்த மாரியம்மாள்.

தந்தை ரெயில்வேயில் கார்ப்பெண்ட்டர். திருச்சி மேலப்புதூரில் இருக்கும் ஒரு பள்ளியில் மாரியம்மாளை ஆறாம் வகுப்பில் சேர்த்திருக்கிறார் செல்வராஜ்.

பள்ளியில் சேர்த்த பத்து நாட்கள் கழித்து அவளுக்குப் பஸ் பாஸ் கிடைத்த அன்றைய தினமே அந்தச் சோகம் நிகழ்ந்ததுதான் கொடுமை. இலவச பஸ் பாஸ் கிடைத்த மகிழ்ச்சியில் மேலப்புதூர் பஸ் ஸ்டாப்பில் வந்து நின்ற அரசு டவுன் பஸ் ஒன்றில் சக மாணவிகளுடன் முண்டியடித்துக் கொண்டு ஏறியிருக்கிறாள் மாரியம்மாள். (குறிப்பிட்ட இந்தப் பகுதியில் மட்டும் மூன்று பெண்கள் பள்ளிகள் இருப்பதால் நெருக்கடிக்குச் சொல்லவே வேண்டாம்.) இத்தனை மாணவிகளிலும் பாதிபேர் பஸ்ஸிற்குள் ஏறுவதற்குள், டிரைவர் சட்டென பஸ்ஸை எடுக்க, படிக்கட்டுகளில் தொத்திக் கொண்டிருந்தவர்களில் மூவர் சாலையில் வந்து விழுந்தனர். விழுந்தவர்களுள் ஒருவர் மாரியம்மாள். இருவர் கொஞ்சம் தள்ளிப் போய் விழுந்து விட, மாரியம்மாள் மட்டும் அந்த பஸ்ஸின் பின் சக்கரத்தில் சிக்கி பிணமாகிப் போனாள்.

"என்னோட பேத்தி நல்லா படிப்பா. அவ்வளவு நல்லா டான்ஸ் ஆடும். வீட்டு உள்ளே போய்ப் பாருங்க, ஸ்கூல்ல டான்சுக்குன்னு அவ வாங்குன பரிசெல்லாம். சித்திரமா ஆடும் என் சிங்கார மலரை இனி எங்க போயி பாக்கப்போறேன்"னு சொல்லிவிட்டுக் கதறுகிறார் சிறுமியின் பாட்டி.

"ஜூன் பதிமூணாம் தேதி ஸ்கூல்ல சேத்து வுட்டோம். பத்து நாளா பஸ்சுக்குப் பணம் கொடுத்து வந்தோம். இப்படி நடக்கும்ன்னு யாருக்குத் தெரியும்? நாளைலேர்ந்து பஸ்சுக்குன்னு உங்கள்ட்ட பணமே வாங்க மாட்டேன்னு சொன்னா எம் பொண்ணு. இப்படி ஒரேயடியா போய்ச் சேரும்ன்னு நாங்க நெனைக்கவே இல்லையே!" குரல் உடைந்து போய்க் கதறுகிறார் அச்சிறுமியின் அம்மா!

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

காதில் விழுந்தவை

# 'ராஜகுரு'வின் வருத்தம்!

● சென்னையிலுள்ள ஒட்டு மொத்த பத்திரிகையாளர்களும் தனக்கு எதிராகப் போய்விட்டதாகக் கருதுகிறார் ஜெயலலிதா. அவர்கள் ஆதரவை மீண்டும் பெறுவதற்காகப் பல யோசனைகள் பரிசீலிக்கப்பட்டு வருகின்றன. சமீபத்தில் ஒரு தொலைக்காட்சியின் பெண் நிருபரை தினகரனின் மனைவி அனு (ஜெயா தொலைக் காட்சி) கூப்பிட்டுப் பேசினாராம். அந்த நிருபர்தான் பத்திரிகையாளர் போராட்டத்தை ஒருங்கிணைத்தவர்... ''உங்களுக்கு என்ன பிரச்னை இருந்தாலும் என்னிடம் வந்து சொல்லுங்கள்; நான் நடவடிக்கை எடுக்கிறேன்'' என்று தமது பிரத்யேக செல் நம்பரை அந்த நிருபரிடம் கொடுத்திருக்கிறார் அனு. இதற்கிடையில் புதிய கவர்னர் பதவிப் பிரமாணத்துக்கு ராஜ்பவனுக்கு வந்திருந்த ஜெயலலிதா, பத்திரிகையாளர்களிடம் பேசுவதற்காக கிளம்பும் முன் ஒரு நிமிடம் தயங்கி தமது கார் அருகே நின்றார். ஆனால் பத்திரிகையாளர்கள் யாரும் அவரை நெருங்கவில்லை. புறக்கணிப்பது போல தொலைவில் நின்று விட்டார்கள். கோபத்தில் முகம் சிவக்க வண்டியேறி விட்டார் ஜெ.



● ஆட்சிக் கலைப்பு, சட்டசபை முடக்கம் என்று செய்திகள் வந்த நிலையில் அ.இ-அ.தி.மு.க ஆட்சியின் ராஜகுருவாக கருதப்படும் கி. வீரமணி ரொம்பவே பதற்றப்பட்டு, மூப்பனார் வீட்டில் தோழமை கட்சித் தலைவர்களின் கூட்டத்தைக் கூட்டினார். அந்தக் கூட்டத்தில் கலைஞரைக் கண்டித்தும் தமிழக போலீஸாரின் 'பொறுப்புணர்வை'ப் பாராட்டியும் தீர்மானம் நிறைவேற்ற முயற்சி செய்தாராம். ஆனால் கூட்டணித் தலைவர்கள், குறிப்பாக நல்லகண்ணு, ''அப்படியெல்லாம் தீர்மானம் நிறைவேற்றவே முடியாது'' என்று சொல்லிவிட்டதில் வீரமணிக்கு ரொம்பவும் வருத்தம். போராடியும் ஒப்புக் கொள்ளவில்லை. கடைசியில் மத்திய அமைச்சரவை தீர்மானம் போட்டதைக் கண்டித்து மட்டுமே தீர்மானம் நிறைவேற்ற முடிந்தது. இந்த நிலையில் கூட்டணி கட்சித் தலைவர்கள் மகிழ்ச்சியாக இருக்கிறார்கள். காரணம் உள்ளாட்சித் தேர்தலில் கணிசமான ஸீட்டுகளைப் பெற போராட வேண்டிய நிலையிலிருந்த அவர்களுக்கு, மாறிவிட்ட அரசியல் சூழல் சாதகமாக அமைந்துவிட்டது. குறிப்பாக காங்கிரஸ் கட்சி அம்மாவை 'மிரட்டி' அதிக இடங்களைப் பெறும் வாய்ப்பு இருக்கிறது. இதற்குக் காரணம் 356ன் கீழ் ஜெ ஆட்சிக் கவிழ்ப்பு பற்றிப் பேச்சு அடிபட்டபோது காங்கிரஸ் கடுமையாக எதிர்த்ததுதான். "இந்த ஆட்சி தொடர்வதற்குக் காரணம் காங்கிரஸ்தான். எங்கள் அம்மா அவசரப்பட்டு 'கூட்டணி முடிந்துவிட்டது' என்று சொல்லி விட்டார். அது மிகவும் தவறு. ஆனால் காங்கிரஸ் பெருந்தன்மையாக ஆதரித்தது. எனவே அவர்களுக்கு உள்ளாட்சியில் கணிசமான ஸீட்டுகள் கொடுக்கலாம்" என்கிறார்கள் அ.இ-அ.தி.மு.க பிரமுகர்கள்.

● எடுத்த எடுப்பிலேயே கலைஞர், ஸ்டாலின் மற்றும் பலர் மீது போடப்பட்ட மேம்பால வழக்கு ஆட்டம் கண்டுவிட்ட நிலையில், அடுத்து எந்த விவகாரத்தைக் கையில் எடுக்கலாம் என்று போயஸ் தோட்டத்தில் தீவிர ஆலோசனை நடந்து வருகிறதாம். தி.மு.க ஆட்சியில் திருப்பத்தூரில் சந்தன மரக் கிடங்கு எரிந்து சாம்பலானது. அரசுக்குப் பல கோடி ரூபாய் நஷ்டம். அந்த வழக்கைத் தீவிரமாக மீண்டும் விசாரித்து, கலைஞரைச் சங்கடப்படுத்த திட்டம் தீட்டுகிறாராம் ஜெ. இதற்கிடையில் ஐந்து நாள் சிறை வாழ்க்கை கலைஞர் உடல் நலத்தை நன்றாகவே பாதித்து விட்டதாகச் சொல்கிறார்கள். குறிப்பாக கால்களில் உள்ள வடியாத வீக்கம் சிறுநீரக கோளாறுகளின் அடையாளமாக இருக்குமோ என்று டாக்டர்கள் கவலைப்படுகிறார்கள்.

— சஞ்சயன்

அமரர் **கல்கி** எழுதிய



# சிவகாமியின் சபதம்

## சிக்கல்-65

(பக்கா வெஜிடேரியன் தொடர்!)





பாஸ்கர் சக்தி எழுதும்

# பூவரசம் வீடு

– இளமைத் தொடர் ஆரம்பம்!

**புதிய பக்கங்கள்**







2001 ஜூலை 15
விஷு ஆனி 31
மலர் : 59
இதழ் : 50

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




## வென்றார் 'ஜெ'; தோற்றது மத்திய அரசு!

மேம்பாலங்கள் வழக்கில் பதினான்கு பேர் மீது குற்றம் சாட்டப்பட்டது. முன்னாள் முதல்வர், நள்ளிரவில் கேவலமான முறையில் கைது செய்யப்பட்டு ரிமாண்டில் வைக்கப்பட்டார். ஆனால், நீதிமன்றத்தில் டாக்டர் சீனிவாசனின் ஜாமீன் மனு தாக்கல் செய்யப்பட்ட நேரத்தில், விசாரணை அதிகாரி பத்மநாபன், நீதிபதியின் கேள்விகளுக்குப் பதிலளிக்கையில் பதினான்கு பேரில் ஒருவர்கூட இந்த வழக்கில் பொருளாதார ஆதாயம் பெறவில்லை என்றார்!

லஞ்ச - ஊழல் நடைபெறவில்லை என்று பிரதம விசாரணை அதிகாரியே நீதிமன்றத்தில் கூறுகிறார். அப்படியானால், தமிழக அரசின் காவல்துறை, கருணாநிதியையும் ஸ்டாலினையும் நம்பியாரையும் மற்றவர்களையும் அவசர அவசரமாகவும் விதிமுறைகளைப் புறக்கணித்தும் ரிமாண்ட் கைதிகளாக்கியது ஏன்?

- இதைத் தட்டிக் கேட்க மூப்பனாருக்கோ ராமதாசுக்கோ வைகோவுக்கோ திராணி இல்லை. மத்திய அரசும் முன்வரவில்லை.

இதைக் காட்டிலும் தலைகுனிவு தமிழ்நாட்டுக்கு என்ன இருக்க முடியும்...?

கலைஞரைச் சிறை வைக்கும் முன் மருத்துவமனைக்கு அழைத்துச் செல்லும்படி நீதிபதி




அளித்த உத்தரவை காவல் துறை மீறியிருக்கிறது. இதைத் தட்டிக் கேட்ட நீதிபதிக்குச் சரியான பதில் தரப்படவில்லை.

ஸ்டாலினைச் சென்னையிலேயே சிறை வைக்கும்படி நீதிபதி போட்ட உத்தரவையும் காவல் துறை மீறியிருக்கிறது. இதற்கும் விளக்கமளிக்கவில்லை. என்ன கேட்டாலும் 'மேலிடத்து உத்தரவின் பேரில் செயல்பட்டோம்' என்றே பதில் வருகிறது.

இதையெல்லாம் பார்க்கும்போது, தமிழக அரசு நீதியையும் நீதித் துறையையும் மதிக்கத் தயாராயில்லை என்பது தெரிகிறது. உண்மையை மதிக்கத் தயாராயில்லை என்பதும் புரிகிறது.

நீதித்துறையை மதியாமல், அரசியல் சாசனத்தையே கேவலப்படுத்துகிற விதத்தில் நடந்து கொள்ளும் ஜெயலலிதா, தமிழ்நாட்டு நிர்வாகத்தைத் தமது சொந்த விருப்பு வெறுப்புகளின் அடிப்படையில் நடத்தி வருகிறார்.

தேர்தல் மேடைகளில், 'கருணாநிதியைச் சிறைவாசம் அனுபவிக்கச் செய்வேன்' என்று சூளுரைத்தவர், அதை நிறைவேற்றிக் கொண்ட கையோடு குருவாயூர் கோயிலில் நேர்த்திக் கடனும் செலுத்தி விட்டார்!

'இவ்வளவு வெளிப்படையான பழிவாங்கல் நடவடிக்கையில் ஈடுபடுகிறோமே... நமது இமேஜ் பாதிக்கப்படாதா? நமது கட்சியைப் பற்றி மக்கள் என்ன நினைப்பார்கள்? தமிழ்நாட்டின் இமேஜ்தான் என்ன ஆகும்?' என்ற அடிப்படை கவலைகள்கூட ஜெயலலிதாவுக்கு இல்லை! வன்மமும் ஆங்காரமும் அவர் அகக் கண்களையும் புறக் கண்களையும் மறைத்துவிட்டன. அவரது ஆணைக்கு இணங்கி, தமிழக காவல் துறையும், தொடுவதற்கு முன்பே தூள் தூளாகிப் பிசுபிசுத்து விடக் கூடிய ஒரு போலி கிரிமினல் வழக்கை அவசர அவசரமாக ஜோடிக்க முற்பட்டிருக்கிறது.

மாநகராட்சி கமிஷனர் ஆசார்யலு புகாரை வழங்கினார்; சி.பி.சி.ஐ.டி வழக்கை ஜோடித்தது. ஆனால் பின்னணியில் இருந்து அவர்களை வற்புறுத்தியவர், மாண்புமிகு




தமிழக முதல்வர் ஜெயலலிதாதான். அந்த மேலிடத்தின் ஆணையும் ஆசியும்தான் காவல் துறையை கேவலத் துறையாக நடந்து கொள்ள வைத்தது என்பதை மீண்டும் மீண்டும் சொல்லித்தான் ஆக வேண்டியிருக்கிறது.

இத்தனை நடந்த பிறகும், மத்திய அரசின் அமைச்சரவைக் கூட்டம் புதுடெல்லியில் மூன்று முறை கூடிப் பேசியதேயொழிய, கடுமையான நடவடிக்கை எடுக்க முன்வரவில்லை. 356 பிரயோகிப்பதில் பல சிக்கல்கள் இருக்கலாம். ஆனால் குறைந்தபட்சம் தமிழக முதல்வரை, நடந்த நிகழ்ச்சிகளுக்குப் பொறுப்பாக்கி ஓர் அறிக்கை தரக்கூடாதா...? இத்தனைக்கும் மத்திய அரசின் உள்துறை அமைச்சகப் பிரதிநிதிகள் தங்கள் ஆய்வு அறிக்கையில் 'ஜெ'யின் பழிவாங்கும் நடவடிக்கையைப் பிட்டுப் பிட்டு வைத்திருக்கிறார்களே!

தமிழக அரசை எச்சரித்து, சட்ட மீறல்களைச் சீர் செய்யவும் அத்துமீறி நடந்துகொண்ட அதிகாரிகளைத் தண்டிக்கவும் அறிவுறுத்தப்பட்டுள்ளதேயொழிய, அரசு இயந்திரத்தை தன் கைப்பாவையாக்கிக் கொண்டிருக்கும் ஜெயலலிதா பற்றி மத்திய அரசு மூச்சே விடவில்லை. எய்தவர் இருக்க, புண்படுத்திய அம்புகளையே பழிக்கிறது மத்திய அரசு!

தமிழ்நாட்டு வாக்காளர்கள் தங்கள் வாக்குப்பதிவின் விளைவுகளை அனுபவிக்கிறார்கள் என்பது உண்மையே. ஆனால், அறியாமையில் உழலும் மக்களை வழி நடத்த வேண்டிய தலைவர்களான மூப்பனார், ராமதாஸ் போன்றவர்கள் தேர்தல் சமயத்தில் தங்கள் கடமையில் தவறி விட்டார்கள் என்பதும் உண்மை.

எல்லாம் நடந்த பிறகு, ராமதாஸ் சென்று சிறையில் கலைஞரைப் பார்க்கிறார். மூப்பனார் சென்று கருணாநிதியை விடுவிக்க வேண்டுகிறார். நான்கு தினங்கள் சிறைவாசத்துக்குப் பிறகு மருத்துவக் காரணங்களுக்காக கலைஞர் விடுதலையாகியிருப்பது ராமதாசுக்கோ மூப்பனாருக்கோ பெருமையல்ல.

ஜெயலலிதா தாம் நினைத்ததைச் சாதித்துக் கொண்டார். ஆனால் மத்திய அரசு தம்மை இவ்வளவு கலபமாக விட்டுவிடும் என்று அவரேகூட எதிர்பார்த்திருக்க மாட்டார்!

# மும்பை மசாலா

வரலாறு காணாத தீர்ப்பை மஹாராஷ்ட்ரா விலுள்ள நீதிமன்றம் வழங்கியுள்ளது. கடந்த 52 வருடங்களில், முதன் முறையாக, இரண்டு பெண்களைத் தூக்கி லிடும்படியாக நீதி வழங்கப்பட்டிருக்கிறது.

பத்து வருடங்களாக நடந்து கொண்டிருந்த வழக்கு, ரேணுகா ஷிண்டே (27), ஸீமா கவிட் (25) என்ற ராட்சத சகோதரிகளையும், வழக்கு நடந்து கொண்டிருந்தபோதே மண்டையைப் போட்டுவிட்ட அவர்களது பயங்கரத் தாயாரையும் சுற்றிப் பிணைந்தது. சின்னக் குழந்தைகளைத் திருடி, அவர்களைப் பிச்சை எடுக்கப் பழக்கி, அவர்கள் பெரியவர்களாகி அனுதாபத்தை இழக்கக் கூடிய பருவத்தை அடைந்ததும், சித்திரவதை செய்து கொன்றுவிடுவதே இவர்களது வாழ்க்கை. 13 குழந்தைகளை கிட்நாப்பி, அறுவரைச் சதக்கிய இந்த ரத்தக் காட்டேரிகள், கொலைகளை அணு அணுவாக மிகக் குரூரமாகச் செய்ததாக, மூத்தவளின் கணவனே அப்ரூவராக மாறி, சாட்சி சொல்லியுள்ளான். வழக்கு அப்பீலுக்குப் போய், ஆயுள் தண்டனையாக மாறக்கூடிய அபாயம் ஒரு புறமிருக்க, கொலை வெறி பிடித்த இந்தக் கிராதகிகளைத் தூக்கிலிட ஆளில்லாமல் தவிக்கிறது மராத்திய அரசு! 1995ல் ஜாதவ் என்ற தூக்கு மனிதன் ரிடையரான பிறகு, இந்தத் தொழிலுக்கு ஆளே கிடைக்கவில்லையாம்; ஒருமுறை தூக்கிலிட, சம்பளம் ரூபாய் நூற்று ஐம்பதுதானாம்!

அந்த வழக்கில் குற்றவாளிகளுக்குத் தண்டனை என்றால், இந்த வழக்கில் சம்பந்தப்பட்டவர்களுக்கு விடுதலை – இது அரசியல் வழக்காயிற்றே? சத்ரபதி சிவாஜியின் வம்சத்தினரான உதயன் போஸ்லே, 1999ல் தேர்தலின்போது என்சிபிக்காரரான சரத் லிலேவைத் தீர்த்துக் கட்டிவிட்டதாக, இவர் மீது குற்றம் சாட்டப்பட்டு கேஸ் நடந்து கொண்டிருந்தது. கடைசியில் இது குடும்பச் சண்டையாம்; அவர் மீது காழ்ப்புணர்ச்சி கொண்டிருந்த அவரது மாமா அபய்ஸிங் ராஜே, சமயம் பார்த்து மருமகனைச் சாய்த்து விட்டாராம். இருவரும் அரசியலில் எதிர்க்கட்சிக்காரர்கள்! "ஐயோ நினைத்தாலே குலை நடுங்கிறது; எவ்வளவு கஷ்டப்பட்டு விட்டேன்; இத்தனைக்கும் அப்போது நான் பிஜேபி எம்.எல்.ஏ; எங்கள் கட்சிதான் அன்று ஆட்சியிலிருந்தது; இருந்தும் எனக்கிந்த கதி என்றால் ஒரு சாதாரணனின் நிலையை என்னால் எண்ணிப் பார்க்கவே முடியவில்லை!" என்று அங்கலாய்க்கிறார் உதயன்! (ம்...ம்... சென்னையில் ஆவிவர்ரோடு இல்லத்தில் சூரிய உதயத்துக்கு முன் நடந்த நிகழ்ச்சிகளை உதயன் அப்போது அறிந்திருக்கவில்லையே...!)

சரி... இதெல்லாம் விட்டுத் தள்ளுங்கள். கிரிமினல் கேசுகளில் ரெக்கார்டுகளை உருவாக்கியிருக்கும், மும்பை



• 'நாயக்' நாயகி

குண்டு வெடிப்பு வழக்குகளுக்கு வாருங்கள்; ஆறு வருடங்களாக தொடர்கதையாகியிருக்கும் இந்த வழக்கில்தான், உலகத்திலேயே அதிக அளவிலான சாட்சிகளாம். (648!) இது வரை 22,000 பக்கங்களுக்குச் சாட்சியம்



• நோ பாகிஸ்தான்! - லதா மங்கேஷ்கர்!

பதிவாகியுள்ளது; அதில் 14,000 பக்கம் 'ஓரல் எவிடென்ஸ்'! இந்த வழக்கில் சம்பந்தப்பட்டுதான், தாடா கோர்ட்டுக்கு அலையோ





# ராட்சத சகோதரிகள்!

அலை என்று அலைந்து கொண்டிருக்கிறார் சஞ்சய் தத்!

"போலீஸ் டெபுடி கமிஷனர் பிஷ்னாய் என் மீது பொய் வழக்குத் தொடுத்திருக்கிறார். என்னிடம் ஏ.கே - 56 ரைஃபிள் எதுவுமே இல்லை! எல்லாம் பச்சைப் புளுகு! 'நான் சொல்வதற்கெல்லாம் தலையாட்டி கையெழுத்துப் போட்டுக் கொடுத்தால் உன்னை விட்டு விடுகிறேன்' என்று என்னை ஏமாற்றி விட்டார்! காங்கிரஸ்காரரான என் தந்தை மீது இருந்த அரசியல் விரோதத்தைத் தீர்த்துக் கொள்ள நான் பகடைக்காயாக்கப் பட்டேன்" என அரற்றுகிறார். இதுவரை இவரிடம் கேட்கப்பட்டிருக்கும் கேள்விகளின் எண்ணிக்கை 396. இன்னும் இந்த ராமாயணத்தில் எத்தனை காண்டங்கள் பாக்கியோ?

சில கேஸ்கள் இப்படித்தான் இழுத்தடிக்கும்; சில எதிரே பாராத விதத்தில் சட்டென்று முடிந்துவிடும். ஹைதராபாத்திலிருந்து மும்பை வந்த ஹுஸைன் ஸாகர் எக்ஸ்பிரஸில், ஹரியானாவைச் சேர்ந்த பல நாள் திருடன் ராஜன் சர்மா திடீரென்று மாட்டுவான் என யார் கண்டார்கள்? பாவம்... செயற்கைக் காலைப் பொருத்திக்கொண்டு, கம்பார்ட்மெண்ட்டுக்குள் அதிகாலை 3 மணிக்கு அங்கும் இங்கும் அலைந்து கொண்டிருந்தவனை, பிச்சைக்காரன் என்றுதான் நினைத்திருப்பார்கள்... அவன் தன் பெட்டியில் கை வைப்பதை, தூக்கக் கலக்கத்திலிருந்த திருமதி ரோஸலின் பார்க்காதிருந்திருந்தால்...! உடனே அடித்துப் பிடித்து, தாதர் ஸ்டேஷனில் போலீசிடம் ஒப்படைத்தால்... தோண்டித் துருவியதில் ரூ 27980 இந்திய கரன்சியும், யு.எஸ்.டாலர் 1658ம் கிடைத்தன... அதுவும், செயற்கையான ஜெய்ப்பூர் காலின் உட்பகுதியிலிருந்து! தொலைத்தவர், மறுநாள் புகார் கொடுக்க வந்தபோது, மகிழ்ச்சியில் மூர்ச்சையே ஆகிவிட்டார்! இந்த ராஜன் வர்மா ஹரியானா போலீசால் தேடப்பட்டு வந்த பலே திருடனாம்!

அது சரி... என்ன இந்த வாரம் ஒரே போலீஸ், கோர்ட் கேஸ், கொலை, கொள்ளை மயமாகவே இருக்கிறதே என்கிறீர்களா? என்ன செய்வது? கிளைகள் இங்கே இருந்தாலும் எங்கள் வேர்கள் தமிழகத்தில்தானே உள்ளன? தாய் மண்ணில் ஒரே வழக்கு, விவகாரம், போலீஸ், தடியடி, அரெஸ்ட், ரிலீஸ் என்று அமர்க்களப் படுகையில் நாம் இங்கே சேகர் சுமன் 'மூவர்ஸ் அண்ட் ஷேகர்ஸ்'ஸிலிருந்து விலகியது பற்றியும், லதா மங்கேஷ்கர் பாகிஸ்தான் சென்று நூர்ஜஹான் விழாவில் பாட மறுத்தது பற்றியும், 'நாயக்' படத்தில் ராணி முகர்ஜியின் டான்ஸ் பற்றியுமா எழுதிக் கொண்டிருக்க முடியும்?

— ஜெயஸ்ரீ ராஜ்

## ஆறாவது அறிவைக் கழற்றி வைத்துவிட்டுப் பார்க்கலாம்!

ஆதாம்-ஏவாள் காலத்துக் கதை! அதை ஆக்ஷன் ப்ளஸ் சென்டிமென்ட் கலந்து தரமுடிவு செய்த இயக்குனர், இடைவேளை வரை இழுவை இல்லாமல் கொண்டு செல்லவேண்டும் என்பதில் குறியாய் இருந்து, கொடி நாட்டுகிறார். அதன்பிறகு வரும் காட்சிகளை ரசிகர்களே வரிசையாய் ஒப்பிக்கிற அளவுக்கு நொண்டியடிக்கிறது படம்.

நடுக்கடலில், ரகுவரனும் சரத்குமாரும் வார்த்தைப் போர் நடத்தும் காட்சியில், தியேட்டரே உணர்ச்சி கொந்தளிப்பால் உறைந்து போகிறது.

வித்தியாசமான பாத்திரங்களில் தோன்றி, தனது வில்லன் இமேஜை கிட்டதட்ட மறந்துவிட்ட ரகுவரனை, மறுபடியும் ஒரு அசல் தமிழ் சினிமா வில்லனாகச் சித்திரித்து புண்ணியம் கட்டிக் கொண்டதைத்தான் பொறுக்க முடியவில்லை.

குறைந்தது மூன்று பாடல்களிலாவது அபிராமியை ஆட வைத்துவிடுவது என்று திட்டமிட்டே, அவரை நடனமணியாகக் காட்டுகிறார்கள். மற்றபடி அவரை டான்சராகக் காட்டுவதற்கும் படத்திற்கும் பெரிசாய்த் தொடர்பில்லை.

குறிப்பாக இலட்சிய வெறியோடு சிறையிலிருந்து தப்பி வரும் சரத், அதை மறந்து விட்டு, அபிராமியுடன் ஹாயாக டூயட் பாடுவது, மோசமான ரசனைக்குப் போடும் தீனி.




இடைவேளைக்குப் பிறகு, பிரகாஷ்ராஜ் மாதிரி சரத் முகமூடி போட்டாலும் போட்டார், யார் எப்போது முகமூடியைக் கழற்றுவார்கள் என்று, நமது முகத்தையும் கூட தடவிப்பார்க்க வேண்டிய பரிதாபம் நேர்ந்துவிடுகிறது நமக்கு.

படத்தில் ரசிகர்களுக்கு 'தோஸ்த்தாக'த் தெரிபவர், போலீஸ் அதிகாரியாக வரும் பிரகாஷ்ராஜ்தான். 'என்கௌண்டர்' என்ற பெயரில் குற்றவாளிகளைக் குருவி மாதிரி சுட்டுத் தள்ளி, மிகையில்லாத நடிப்பால் அப்ளாஸ்களை அள்ளிக் கொள்கிறார்.

ஒளிப்பதிவைக் குறிப்பிட்டுச் சொல்லாவிட்டால் நமது கண்களுக்கு நிறமாலை வந்துவிடக் கூடும்! வெல்டன் விஜய் மில்டன்!

ஆஹா... குறிப்பிட்டுச் சொல்ல வேண்டியது படத்தின் பஞ்சரான சாரி... 'பஞ்ச்'சான க்ளைமாக்ஸ்தான். இந்த விஷயத்தில் ரசிகர்களின் ஆறாவது அறிவு பற்றி கடுகளவும் கவலைப்படாமல் ஆனந்தக் கண்ணீர் வரவழைத்து விடுகிறார் இயக்குனர் எஸ்.ஏ. சந்திரசேகர்.

— விஷ்வல்தாசன்

• அவெரெஜ்

## தமிழ் மொழிக்கு முற்றிலும் புதுமையான புத்தகம்

★ 5000 வருட முக்கிய செய்திகள் – இத்துடன் மேலும்

★ கி.மு. 140 லட்சம் ஆண்டுகளிலிருந்து கி.பி. 1995 வரை உலக வரலாறு சுருக்கம்

★ 350 வருட காலண்டர் ★ உலக நாடுகள் ★ உலக நகரங்களில் நேரம்

★ ஐ.நா. சபை உறுப்பு நாடுகள் ★ ஐ. நா. சபையும் துணை அமைப்புகளும்

★ காமன்வெல்த் ★ முக்கிய நாட்கள் ★ தேசிய தினங்கள்

★ ஐ.நா. சபை அறிவித்த சர்வதேச ஆண்டுகள்

★ உலக வரலாற்றில் மாறிய பெயர்கள்

★ இந்திய நாட்டு ஜனாதிபதி, உப ஜனாதிபதி, பிரதமர்கள்

★ தலைமை நீதிபதிகள் ★ தலைமைத் தேர்தல் அதிகாரிகள்

★ பாரத் ரத்னா விருது பெற்றவர்கள் ★ இந்தியாவில் முதன் முதலாக நடந்தவை

★ உலக நாடுகள் பாராளுமன்றத்தின் பெயர்கள்

இப்படி ஏராளமான தகவல்களுடன் கூடியது

**இது போன்ற விரிவானதொரு நூல் இதுவரை இந்தியாவில் எந்த மொழியிலும் வெளிவரவில்லை**

இன்றைக்கும் பெரும்பாலான பத்திரிகைகள் – இதுபோன்ற தகவல்களை வெளியிடுவதற்கு இதுதான் முன்னோடி

# இந்த நாளில் அன்று

தொகுப்பு – என். ஸ்ரீநிவாஸன்

ஒவ்வொரு நாளுக்கும் தனித்தனியாக – மொத்தம் – 20,000 தகவல்கள்

ஆறு தொகுதிகள் விலை – ரூ.800/-

சிறியவர் முதல் பெரியவர் வரை அனைவருக்கும் உதவும் நூல்

இன்றும் பல கல்லூரிகள், பள்ளிகள் மற்றும் பொது இடங்களில் இந்நூலிலிருந்து தகவல்களைத் தெரியப்படுத்துகின்றனர்.

## மிகவும் உபயோகமான புத்தகம்.

அல்லயன்ஸ்

## அல்லயன்ஸ் கம்பெனி

(நூற்றாண்டு காணும் முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்)

244, ராமகிருஷ்ணா மடம் சாலை, மயிலாப்பூர், சென்னை–600 004

போன் : 494 13 14 – www.alliancebook.com.

✉ ஒவ்வொரு வீட்டுக் கதவையும் தட்டி 'சித்தி' எப்படி என்று சர்வே எடுத்ததெல்லாம் சரி! 'சித்தி' யூனிட்டைப் பற்றி, ஒரு மெகா பேட்டி எடுத்திருக்கக் கூடாதா?

ஈரோடு-10, பன்னிபாளையம்
ரஞ்சனிப்ரியன்.

✉ 'தேன்கூடு' பகுதி படிப்பதற்கு மட்டுமல்ல, பார்ப்பதற்கும் அழகாக உள்ளது. பொதுஅறிவைத் தூண்டும்






படியும் அமைந்து விட்டது ஒரு ப்ளஸ் பாயிண்ட்.

நாகூர்,
எஸ். அப்துல்லா அஹ்மது.

✉ விற்பனைப் பிரதிநிதிகள் பற்றிய தவறான உணர்வு பெரும்பாலான மக்களிடையே உண்டு. அதை அகற்றிவிடும் நோக்கில் எழுதப்பட்ட புதுவை சந்திர ஹரியின் 'மனசு' சிறுகதை என் மனத்தைத் தொட்டது.

சென்னை - 26, சி. மகேஷ்.

✉ 'லகான்' படத்தின் அருமையான சிறப்புகளை 'வரிக்கு வரி' புகழ்ந்து 'அமீர் அடித்த சிக்ஸர்' என்ற தலைப்பில் எழுதப்பட்ட கட்டுரை மகத்தானது. மறக்க முடியாததும்கூட.

அயன்புரம்,
த. சத்தியநாராயணன்.

✉ சில ஆண்டுகளுக்குப் பிறகு தற்போது, கல்கியைப் படித்தேன். பல புதிய பகுதிகளைச் சேர்த்து, காலத்திற்கேற்ற கருத்துகளை, நடுநிலைமையோடு வெளியிடுவது கண்டு மகிழ்கிறேன். வாசக எழுத்தாளர்களுக்குப் போட்டி தனிச் சிறப்பு.

அம்மாப்பேட்டை,
அ. சின்னசாமி.

✉'புண்ணாக்கு அரசியல்!' படித்தேன். ஆட்சியாளரின் கவனம் நம் பக்கம் திரும்புமே; அவர்களின் கோபத்திற்கும், சாபத்திற்கும் உட்படுவோமே என்று கவலைப்படாமல் உள்ளதை உள்ளபடியே, ஆதாரபூர்வமாக எழுதி இருக்கிறீர்கள். இதைப் படித்த பிறகாவது நமது முதல்வர் நிதானத்துடன் செயல்படுவாரா?

கும்பகோணம்,
டி.எஸ். சீதாராமன்.

✉ பாரம்பரியம் மிக்க மூப்பனாரும், வீரம் பேசும் ராமதாசும் ராஜ்ய சபாவின் ஒரு இடத்திற்கு 'ஜெ' முன் நிற்பது சிரிப்பை மட்டும் வரவழைக்கவில்லை - நெஞ்சை கடுக்கிறது.

திருப்பத்தூர்-1,
புதூர். சு. முருகையன்.

✉ கோல்கத்தா சென்று ரசகுல்லாவை ருசித்த அனுபவத்தை உணர்ந்தேன். நகைச்சுவையை வழங்குவதில் கல்கியின் ரசனை அறிந்ததே. பாராட்டு!

மத்தூர், வி.சி. ஜெயமணி.

✉ 'போகிற போக்கைப் பார்த்தால் இந்திய கிரிக்கெட்டில் இருந்து இந்திய கிரிக்கெட் அணியையே நீக்க வேண்டும் போலிருக்கிறது!' என்ற 'தராசு'வின் பதில் வருத்தப்பட வைக்கிறது. அப்படி என்ன தவறு செய்துவிட்டது இந்திய அணி? தொடர்ச்சியாக 16 டெஸ்டுகளை வென்ற ஆஸ்திரேலியாவை வென்று தொடரைக் கைப்பற்றியது தவறா...? அல்லது கடல் கடந்து 16 வருடம் கழித்து முதன்முறையாக ஒரு டெஸ்ட்டை வென்றது தவறா...?

திருச்செங்கோடு,
டி.ஏ.சி. பிரகாஷ்.

✉ 'புண்ணாக்கு அரசியல்' தலையங்கம் ஏ ஒன்! நிர்வாகப் பிரச்னையாக நலப் பணிகளில் நேரும் முறைகேடுகளுக்கும், அரசு பதவியிலிருப்போர், அதிகார துஷ்பிரயோகத்தால் ஊரைக் கொள்ளை அடிப்பதற்கும் உள்ள வேறுபாடுகளைத் துல்லியமாக உணரச் செய்துள்ளீர்கள்.

தூத்துக்குடி - 4,
சி. கஸ்தூரி ரத்தினம்

✉ நெல்லை ஜெயந்தாவின் 'க(ாத)ல் வெட்டுக்கள்' கவிதையில் 'நீயும் நானுமான நினைவுகளை நீ யாரிடம் கொடுப்பாய்?' அற்புதமான வரிகள்.

சேத்துப்பட்டு, பா. குணா

# பரபரப்பான விற்பனையில்...

## இலவசம்!

# ஓம்

## சரவணபவ

மாதமிருமுறை வெளிவரும்
ஒரே ஆன்மிக இதழ்

உங்கள்
இல்லத்தில்
செல்வம் பொங்க
மச்ச- வாஸ்து
யந்திரங்கள்!

+

வீட்டு வாசலில் மாட்ட
பிரேம் செய்யப்பட்ட
வாஸ்து பகவான்
வண்ணப்படம்



மேலும்

தவத்திரு குன்றக்குடி
**பொன்னம்பல அடிகளார்**

எழுத்துச்சித்தர்
**பாலகுமாரன்**

எழுதும் தொடர்கள்!

**இந்துக்கலாச்சாரத்தின் அத்தனை பக்கங்களையும் பக்தியோடு படம்பிடித்துக்காட்டும் காலப்பெட்டகம்!**

இது படிக்க மட்டுமல்ல; பாதுகாக்கவுமான இதழ்

"டாக்டர், எமர்ஜென்ஸி" ரத்னச் சுருக்கமாக நர்ஸ் கோகிலவாணி அறிவிக்க, சிவப்ரியா வேகமாக அவசர சிகிச்சை பிரிவுக்கு விரைந்தாள்.

"ப்ளீஸ், என்னை ஏமாத்திடாதேம்மா, டியர், ஐ லவ் யூடா, உனக்கொண்ணும் இல்லேடா" என்றெல்லாம் விதவிதமாக அரற்றிக் கொண்டிருந்தான் அந்த இளம் கணவன்.

ஸ்ட்ரெச்சரில் படுக்க வைக்கப்பட்டிருந்த அவன் மனைவிக்கு உடல் வியர்த்திருந்தது. எழுந்து உட்கார முயற்சி செய்த அவள் முகத்தில் சில மாறுதல்கள்.

"சிஸ்டர், அவங்களுக்கு வாந்தி வருதுன்னு நினைக்கிறேன்."

கோகிலவாணி அனுசரணையாக 'ஸ்பிட்ட்ரே'வை அவள் வாயருகே நீட்டினாள்.

"இப்படி நிறைய தடவை வாந்தி எடுத்துட்டா டாக்டர்" என்றவன் மீண்டும் தன் மனைவியைப் பார்த்து "என்னம்மா செய்யுது?" என்று அழும் குரலில் கேட்டான்.

"சார், நீங்க வெளியிலே இருங்க" என்றாள் கோகிலவாணி.

"பரவாயில்ல சிஸ்டர். அவர் இங்கேயே இருக்கட்டும். சார், நீங்க அந்த மூலையிலே இருக்கிற நாற்காலியிலே உட்காருங்க. எப்போதுலேயிருந்து அவங்களுக்கு இந்த வாந்தியும், வியர்த்துக் கொட்டலும்?"

பேசிக் கொண்டே அவள் ரத்த அழுத்தத்தைச் சோதித்தாள். பிறகு வேறு சில கேள்விகளை அந்தப் பெண்ணிடம் கேட்டாள்.

"ஈ.ஸி.ஜி. அறை தயாராக இருக்கு" என்றாள் கோகிலவாணி. நீண்ட அனுபவம் கொண்டவள் என்பதால் தன்னையே ஒரு டாக்டராக அவ்வப்போது நினைத்துக் கொள்ளும் போக்கு அவளிடம் இருப்பதை சிவப்ரியா இந்த நான்கு நாட்களிலேயே உணர்ந்திருந்தாள்.

வேறு சில சோதனைகளையும் செய்து முடித்தபின், "அதற்கெல்லாம் இப்போ தேவையிருக்காது சிஸ்டர். கொஞ்ச நேரத்தில் வாந்தியெல்லாம் நின்னுடும்னு நினைக்கிறேன். க்ளுக்கோஸ் கொடுங்க. இந்த மாத்திரையைக் கொடுங்க. அரை மணி நேரம் அப்சர்வேஷனில இருக்கட்டும். அப்புறம் அவங்களைக் கூட்டிட்டுப் போயிடலாம்."

"ஒன்றுமில்லையா? இவ்வளவுதானா?" அந்த இளைஞனால் நம்பவே முடியவில்லை பொங்கிய வியர்வை என்ற ஒரே காரணத்தை வைத்துக் கொண்டு மாரடைப்பு என்ற முடிவுக்கு வந்து 'ஆஞ்சியோகிராம், பைபாஸ், தீவிர சிகிச்சைப் பிரிவு, இதய மாற்று' என்று தனக்குத் தெரிந்த எல்லா இதய சிக்கல் சிகிச்சைகளையும் மனத்தில் கொண்டு வந்து பதறிக் கொண்டிருந்தான் அவன்.

பத்து நிமிடம் கழித்து அந்த இளைஞனிடம் சிவப்ரியா விளக்கத் தொடங்கினாள். "உங்க மனைவிக்கு கார்ப் பயணம் ஒத்துக்கலைன்னு நினைக்கிறேன். அதுவும் நிறைய நேரம் இன்னிக்குக் காரிலே பயணம் செய்திருக்காங்க."

"என்ன டாக்டர் இது? பஸ் ஜர்னிதான் சிலருக்கு ஒத்துக்காதுன்னு கேள்விப்பட்டிருக்கேன்" என்று அவன் வியக்க, பொறுமையாக விளக்கினாள் சிவப்ரியா.



அருண் சரண்யா

"பஸ்ஸோ, கப்பலோ, ரயிலோ, காரோ அது பிரச்னையில்லை. வேகமான பயணங்கிறதுதான் முக்கியம். நம்ம காதுக்குள்ளே நம் உடம்பை பாலன்ஸ் செய்யும் மையம் இருக்குது. வேகமான பயணத்தின்போது சிலருக்கு இந்த மையம் பாதிக்கப்படுது. உடனே அங்கேயிருக்கிற நரம்புகள் மூளையிலே இருக்கும் ஒரு குறிப்பிட்ட பகுதியைத் தூண்டி விடுது. இதனாலேதான் வாந்தி. அந்தச் சமயத்திலே என்னவோ ஏதோன்னு பயந்து போனா இன்னும் காம்ப்ளிகேட் ஆயிடுது."

"அப்ப இனிமே காரிலேயே அவ போகக் கூடாதா டாக்டர்?" என்று பரிதாபமாகக் கேட்டான் அவன்.

"போகலாம். ஆனால் சில முன்னெச்சரிக்கைகளை எடுத்துக்கணும்." கூறியபடியே சிவப்ரியா ஒரு தாளில் தனது விளக்கத்தைப் பாயிண்ட்டுகளாக எழுதத் தொடங்கினாள்.

"காரிலே போவதற்கு ஒரு மணி நேரத்துக்கு முன்னே இலேசான உணவுதான் சாப்பிடணும். பயணத்தின்போது தண்ணீர், ஜூஸ், இந்த மாதிரி திரவத்தைத்தான் குடிக்கணும். அப்பப்போ சின்ன ப்ரேக் கொடுத்து காரிலிருந்து வெளியேறி நல்ல காற்றை சுவாசிக்கணும். காரிலே போகும்போது பக்கத்திலே இருக்கிற விஷயங்களை உற்றுப் பார்ப்பதைவிட ஆகாயம், மலை இந்த மாதிரி தூரத்திலே இருக்கிற காட்சிகளைப்

# தாமரிய ஆவல்...



பார்க்கப் பழகிக்கணும். காதுகளிலே பஞ்சை அடைச்சுக்கலாம். தலைக்குக் கீழே ஏதாவது துண்டையோ சின்னத் தலையணையையோ வச்சுக்கலாம்.''

அந்தத் தாளை அவனிடம் நீட்டிவிட்டு, சில மாத்திரைகளை எழுதிக் கொடுத்தாள். ''இன்னும் ரெண்டு நாளைக்கு இதை சாப்பிடச் சொல்லுங்க.''

அடுத்தடுத்து நோயாளிகளைப் பார்த்து விட்டு இடையில் சற்று நேரம் கிடைத்த போது வீட்டுக்கு போன் செய்தாள். மாமி தான் எடுத்தாள்.

"என்ன ப்ரியா, குரல் ஏன் சோர்வா இருக்கு? இதுக்குதான் ஃப்ளாஸ்க்கிலே ஹார்லிக்ஸோ போர்ன்விடாவோ தரேன்னு சொன்னேன். நீ கேட்கல" கரிசனத்துடன் ஆதங்கப்பட்டாள் மாமி.

"மாமா என்ன செய்யறார்?" என்று கேட்டாள் தொடர்ந்து.

"ஆறாம் ரூமிலே இருக்கிற பேஷண்ட்டுக்கு போரடிக்குதுன்னார். அவரோட கேரம் ஆடிக்கிட்டிருக்கார்'' என்றாள் சிவப்ரியா குரலில் புன்னகை வெளிப்பட்டு விடாதபடி.

"என்னது?" முதலில் திகைத்தாலும் மாமி புரிந்து கொண்டுவிட்டாள். "கிண்டல் செய்யறியா?"

"பின்ன என்ன மாமி? அவருக்கு இங்கே ஓய்வு ஏது? இன்னும் கால் மணியிலே ரவுண்ட்ஸ் கிளம்பிடுவார். நானும் கூடப் போகணும். அதுக்குள்ளே அம்மாகிட்ட கொஞ்சம் பேசலாம்னுதான் போன் செய்தேன்.''

''உங்கம்மா இங்கதான் இருக்காங்க. இதோ தரேன்.''

சற்று நேரம் மௌனம். அருகிலேயே உள்ள அம்மா ஏன் ஹலோ சொல்ல இவ்வளவு நேரமாகிறது? சற்றே யோசித்த சிவப்ரியாவுக்குப் புரிந்தது. கோபத்தை வெளிப்படுத்துகிறாள். தன்னோடு ஊருக்கு வர சம்மதிக்காமல் டாக்டர் ராம்ஷேகரின் கிளினிக்கிலேயே அவள் வேலைக்கு சேர்ந்ததில் கருத்து வேறுபாடு.

''சரி, லைன் சரியில்ல போலிருக்கு வச்சிடலாம்'' என்று அவள் வேண்டுமென்றே மெள்ள முணுமுணுக்க, மறுமுனையிலிருந்து "ஹலோ, நான் பேசறேன்" என்ற அம்மாவின் குரல் கேட்டது.

"என்னம்மா யோசிச்சியா? இன்னும் பத்து நாள் தங்கிட்டுப் போயேன்."

"வாழை மரத்துக்கெல்லாம் யார் தண்ணி விடுவாங்களாம்? லட்சுமிக்கு வேறே புண்ணாக்கு வைக்கணும். துளசிச் செடி வாடிடும். இதையெல்லாம் தினம் செய்யணும்ங்கிறது லலிதாவுக்குத் தலையெழுத்தா என்ன?"

ஊரில், அவர்களது பக்கத்து வீட்டுப் பெண்மணி லலிதா அலுத்துக் கொள்ளாமல் இந்த வேலைகளைச் செய்பவள்தான். ஆனால் அம்மாவுக்கு இங்கே தங்கப் பிடிக்கவில்லை. 'டாக்டர் படிப்பு என்றாள். சந்தோஷமாகப் படிக்க வைத்தோம். 'எவனையோ கல்யாணம் செய்து கொள்ளட்டுமா' என்றாள். இந்தப் பெரிய டாக்டர் ராம்ஷேகர் ரொம்ப அவனைப் பற்றி உசத்தியாகச் சொன்னதால் அதற்கும் தலையாட்டினோம். இப்போது அவன் வேறு எவளையோ கல்யாணம் செய்து கொண்டு

---

**''நீயும் ஸ்கூலுக்குப் போனதில்லை. அந்தாளும் ஸ்கூலுக்குப் போனதில்லை. அப்புறம் எப்படி ரெண்டு பேரும் ஒரே 'ரூம் மேட்'டாக இருக்க முடியும்?''**

**''நான் சொன்னது ஜெயிலில்!''**

**— எம். அசோக் ராஜா**






''நம்ம ஹெட்கான்ஸ்டபிள் ஏன் தொப்பையைக் குறைக்க முழு முயற்சி பண்ணறார்?''

''எல்லாரும் அவரை 'காஸ் ட்ரபிள்'னு கூப்பிடறாங்களாம்!

— சாயம். வெ. ராஜாராமன்.

விட்டான். இந்தப் பெண் யாருடைய பேச்சையும் கேட்காமல் ஒரு சினிமாவில் வேறு நடித்துவிட்டு வந்திருக்கிறது. இவளைத் தன் கண்காணிப்பில் ஊரில் வைத்துக் கொண்டால்தானே நல்லது. ஆனால் பிடி கொடுக்க மாட்டேன் என்கிறாளே.'

"சரிம்மா, உனக்கு எது சரின்னு படுதோ அதைச் செய்" என்றபடி சிவப்ரியா தன் தரப்பைத் துண்டித்தாள்.

"அவங்கவங்களுக்குச் சரின்னு படுவதை அவங்கவங்க செய்துக்கிட்டே போனா இந்த சமுதாயம் எதுக்கு? பாச பந்தம்தான் எதுக்கு?" டங்கென்று ரிஸீவரை வைத்தாள் அம்மா. தன்னையே மாமி உறுத்துப் பார்ப்பதைக் கண்டதும் "மன்னிச்சுக்குங்க. உங்க போனை நான் இப்படி வேகமாக வச்சிருக்கக் கூடாது.'' என்றாள் தலையைக் குனிந்தபடி.

மாமி சிரித்தாள். "அது இருக்கட்டும். ஆனா நான் வேறு ஒண்ணைச் சொன்னால் தப்பா எடுத்துக்காதீங்க. சிவப்ரியா மகா புத்திசாலி. அற்புதமான டாக்டரா அவ கட்டாயம் வருவான்னு இவர் அடிக்கடி என் கிட்டே சொல்லுவார். நீங்க அவளாலே ரொம்ப பெருமைப்படுவீங்க."

''அவ புத்திசாலிதான்னு எனக்குத் தெரியாதா? ஆனா யானை, தன் தலையிலேயே மண்ணை வாரிப் போட்டுண்ட மாதிரி... சரி, சரி விடுங்கோ'' என்றபடி பேச்சை முடித்துக் கொண்டாள் அம்மா.

'அம்மாவால் இங்கு அதிக நாட்கள் தங்க முடியாது' என்பது அவள் ஏற்கெனவே எதிர்பார்த்ததுதான். ஒரு விதத்தில் அதுவும் நல்லது. இரவு சற்று தாமதமாகக் கூட கிளினிக்கிலிருந்து செல்லலாம். அவசர கேஸ்கள் எந்த நேரத்தில் வந்தாலும் கவனிக்கலாம். அம்மா கவலைப்படுவாளே என்ற உறுத்தலின்றி.

சற்றுத் தொலைவில் அந்தக் குரல் கேட்டது. அவளை மயக்கி உருக வைத்த குரல். ஆனந்தின் குரல் நெருங்கியது.

அவளுக்கெதிரே உட்கார்ந்து கொண்டான். ஓரிரு நிமிடங்களுக்குப் பிறகு "ஷிவ், இன்னிக்குதான் நான் நாலு நாள் கழிச்சு ஜாயின் பண்ணினேன். நீ இங்க சேர்ந்து நாலஞ்சு நாளாச்சாமே?"

சிவப்ரியா அவனை உறுத்துப் பார்த்தாள். அதில் குற்றம் சாட்டும் தொனி மட்டுமே இருந்தது.

''என்னைக் குற்றம் சொல்வதில் அர்த்தமில்லே ஷிவ்."

"டாக்டர் ஆனந்த், பழைய அனாவசியங்கங்ளெல்லாம் வேணாம் இங்கே.'' சிவப்ரியாவின் குரல் நறுக்கென்றிருந்தது.

"ஓக்கே, டாக்டர் சிவப்ரியா."

"இது சரியான அப்ரோச். சொல்லுங்க டாக்டர்."

"நாலாம் அறை பேஷண்ட்டை பரிசோதிக்கணும். உங்களையும் அழைச்சுக்கிட்டுப் போய் அந்த கேஸ் ஹிஸ்டரியைச் சொல்லச் சொன்னார் சீஃப்."

"ஷ்யூர்'' இருவரும் இணையாக அந்த அறையை நோக்கி நடந்தார்கள். அவர்களில் சிவப்ரியாவின் நடையில் சிறுதுளி தடுமாற்றமும் இல்லை.

(தொடரும்)

"நேத்து என் மனைவியைத் திட்டு திட்டுனு திட்டித் தீர்த்துட்டேன்!"

"சரி... சரி... எப்ப கண் முழிச்சீங்க?"

- எஸ். தமிழ்மணி





''போலீஸ் ஸ்டேஷன்ல எதுக்கு கம்ப்யூட்டர்?''

''மாமூல் விஷயத்துல குளறுபடி வரக்கூடாதுன்னு கபாலியே உபயம் பண்ணியிருக்கான்!''

– அம்பை தேவா

**சென்னையின் முன்னணி ஆடிட்டர்களில் ஒருவர் ஆர். ராமன். அவரது காலடியில் எப்போதும் ஒரு 'கேமிரா பேக்' தயாராக இருக்கிறது. இன்று தமிழ்நாட்டில் புகழ்பெற்ற ஆடிட்டராக இருந்து கொண்டு அரிய பல முன் னனுபவங்களைப் பெற்றிருக்கும் - பத்திரிகை புகைப்படக் காரராகவும் இருப்பவர் அநேகமாக ராமன் ஒருவராகத்தான் இருப் பார். அந்தக் காலத்தில் அப்பா ரங்கநாதன் தன் 'பன்னி' கேமி ராவில் ஒவ்வொரு போட்டோ எடுத்த பின்பும் ஃபிளாஷ் பல்பை மாற்றிக் கொண்டிருப்பதை வியந்து பார்த்து, பின்னர் விவேகா னந்தாவில் பி.எஸ்.ஸி. படிக்கும்போது அதே 'பன்னி' காமிராவில் படங்கள் எடுத்து கல்லூரியின் 'போட்டோகிராபிக் கிளப்'பில் சக உறுப்பினர்கள் விலையுயர்ந்த காமிராக்களில் எடுத்த படங் களைவிட 'சபாஷ்' என்று பெயர் வாங்கியதிலிருந்து இன்று வரை ராமனுக்குதான் எத்தனை அனுபவங்கள்!**





• நூற்றாண்டு விழா

●காஞ்சி பெரியவாளை (மகா பெரி யவர்) படம் எடுக்க வேண்டும் என்பதற் காகக் காலையிலேயே கிளம்பிப் போய் விட்டேன். கையில் அப்போதைய நவீன 'கானன் ஏ1' என்ற காமிரா. அதில் நான் எடுத்த படங்கள் தோல்வியடைந்ததேயில்லை.

# ராமன் எத்தனை ராமனடி!

பெரியவர் தியானத்தில் இருந்தார். என் அதிர்ஷ்டம் அன்று கூட்டமே இல்லை. ஃப்ளாஷ் பட்டால் தொந்தரவாக இருக்குமே என்று பயந்து ஒன்றரை மணி நேரம் காத்திருந்தேன். தியானம் முடிந்து எழுந்ததும் நான் என் காமிராவைத் திறந்து தயாரானேன். கையை உயர்த்தி என்னை ஆசீர்வதிப்பதுபோல் காட்டிக் கொண்டே அவர் எழுந்ததிலிருந்து சரமாரியாக 'சுட்டுத்' தள்ளி னேன். என்னுடையது மோட்டாரைஸ்டு காமிரா என்பதால் இயங்கிக் கொண்டே இருந்தது. எடுத்து முடித்ததும் மடத்துப் பிரமுகர்கள் என்னை நோக்கி வேகமாக வந்து 'பெரியவா வேண்டாம் என்று கை காட்டியும் ஏன் எடுத்தீர்கள்?' என்று கோபித்துக்கொண்டார்கள். அவர் 'ஆசீர்வாதம்தானே செய்தார்' என்றேன். 'போட்டோ எடுக்காதே என்று கை காட்டியதை 'ஆசிர்வாதம்' என்று எடுத்துக் கொண்டாயாக்கும். போ... போ... நீ எடுத்த படங்கள் வரவா போகுது' என்று ஏளனமாகச் சொல்லிவிட்டுப் போனார்கள். எனக்கு ரோஷம். 'என்ன மாதிரி கேமிரா இது. இது சயன்ஸ் சாமி. உங்களுக்கு எங்கே தெரியப் போகுது. அதெப்படி எடுத்த படங்கள் வராமல் போகும்? பார்த்து விடுவோம்' என்று மனத்துக்குள் சவால் விட்டு சென்னை வந்ததும் முதல் வேலையாகக் கழுவிப் பார்த்தேன். 'திக்' என்றது.

பெரியவாளை எடுத்த படங்கள் ஒன்றுகூட வரவில்லை! அந்த நிமிடமே அவர்மீது நான் கொண்டிருந்த மரியாதை பக்தியாகி விட்டது. பின்னர் ஸ்ரீஜெயேந் திரிடம் அறிமுகம் கிடைத்து, அவர் மூலம் அனுமதி பெற்று காஞ்சி பெரிய வாளை அவரது நூற்றாண் டின் போது ஆசை தீர படம் எடுத்தேன்.

● காமராஜர் அரங்கில் ஒரு பிரபல புள்ளி யின் இல்லத் திருமணம். முதல் வரிசையில் எம்.எஸ். சதாசிவம், டி.கே. பட் டம்மாள், செம்மங்குடி என்று ஜாம்பவான்களின் கூட்டம். மேடையில் நிச் சயதார்த்தம் நடந்து கொண்டிருந்தது. தற் செயலாக ஆடியன்ஸ் பக்கம் பார்த்தேன். செம்மங்



* அபூர்வ சிரிப்பு

குடி, சதாசிவம் காதில் ஏதோ ஜோக் சொல்ல, அதை அவர் எம்.எஸ். காதில் கிசுகிசுக்க, எம்.எஸ். ஒரு சிரிப்பு சிரித்தார் பாருங்கள். அந்த அழகைப் பார்த்துதான் அனுபவிக்க முடியும். அந்தச் சிரிப்புடன் அவரை 'கிளிக்' செய்ய வேண்டும் என்று 'டக்' கென்று மேடையிலிருந்து குதித்தேன். என்னையும் காமிராவையும் பார்த்துவிட்ட எம்.எஸ். சட் டென்று தன் கையால் சிரிப்பை மறைக்க முயன்றார். அவர் அதில் வெற்றி பெறு வதற்குள் நான் வெற்றி பெற்று விட்டேன்!

● "கலைஞரை வித்தியாசமான பின்னணியில் ஒரு படம் எடுக்க வேண்டும்" என்றார் சாவி. "சூரியன் உதயமாகும் போது - உதயசூரியனின் பின்னணியில் கலைஞரை வித்தியாசமாக நிற்க வைத்து படமெடுக்கலாம்'' என்றேன். ''அவ்வளவு சீக்கிரம் கிளம்புங்கள் என்று எப்படியப்பா கலைஞரைக் கேட்பது?'' என்று சாவி தயங்கினார்.

பின்னர் ஒருவழியாக அவரிடம் கேட்டபோது "அதற்கென்ன. காலை நாலு மணிக்கு வந்துடுங்க. போயிடலாம்" என்றார்.

கார் மெரீனா வழியே போய்க் கொண்டிருந்து "இங்கேயே எடுத்துக்கலாமே. இங்கேயும் சூரியன் உதிக்குமே" என்றார் கலைஞர். நான் பெசன்ட் நகரிலேயே குறியாக இருந்தேன். "போட்டோ கிராபருக்கு பெசன்ட் நகர் பீச் மேலே என்னமோ ஒரு காதல்'' என்று சாவி சொல்லவும் ''சரிப்பா... பெசன்ட் நகருக்குக் காரை விடு" என்றார் கலைஞர். கையில் ஒரு 'பேடை'க் கொடுத்து நிற்க வைத்து சரியாக சூரியன் உதயம் ஆன போது அதன் பின்னணியில் படம் எடுத்தேன்.



* உதயசூரியன்

இதற்குள் வெளிச்சம் வந்துவிடவும், கூட்டம் சேர்ந்துவிட்டது. அவர்களோடு வைத்தும் ஒரு போட்டோ எடுத்து விட்டேன்!



* "கலைஞர்... கலைஞர்..."



• ஆர். ராமன்



• அலமாரியில் பிரசவம்

• ஒரு முறை ஆடிட் விஷயமாக திருவனந்தபுரம் போக வேண்டியிருந்தது. என் ரூமைப் பூட்டிவிட்டுப் போனேன். ஒரு வாரம் கழித்து கதவைத் திறந்தால்... என் அறை ஒரு பூனைக்குப் பிரசவ ஆஸ்பத்திரியாய்ப் பயன்பட்டிருந்தது தெரிய வந்தது! அலமாரியில் என் ஃபைல்கள் மீது குட்டிகள். அவற்றைத் துரத்தத் தோன்றவில்லை. காமிராவை எடுக்கத்தான் தோன்றியது.

• 1986ல் சென்னையில் சேப்பாக்கம் மைதானத்தில் இந்தியா - ஆஸ்திரேலியா கிரிக்கெட் டெஸ்ட். ஒரு விளம்பர நிறுவனத்திற்காக நான் புகைப்படம் எடுத்தேன். மேட்ச் ஆரம்பிக்கப் போகும் நேரத்தில் மைதானத்தின் நடுவில் பரபரப்பு. ஆஸ்திரேலியா காப்டன் ஆலன் பார்டர் அவசரம் அவசரமாக ஓடி வந்தார். 'சைட் ஸ்க்ரீன்' அருகே நின்று கொண்டிருந்த நான் 'என்ன விஷயம்?' என்று கேட்டேன். 'டு யூ ஹேவ் எ காய்ன்?'' என்றார். உடனே ஒரு ரூபாய் நாணயம் ஒன்றை பாக்கெட்டிலிருந்து எடுத்துக் கொடுத்தேன்.

இரண்டாம் நாள் ஆட்ட இடைவேளையின்போது பிளேயர்ஸ் அருகே ஸைடு ஸ்கிரீன் பக்கத்தில் நான் நின்று கொண்டிருந்தபோது ஒரு கை என் தோள் மீது பலமாக விழவும் நான் ஆடிப் போய் விட்டேன். 'சரி, யாரோ போலீஸ்காரர் தான்' என்று திரும்பிப் பார்த்தபோது அங்கே ஆலன் பார்டர். ''எங்கேயெல்லாம் உங்களைத் தேடுவது? இந்தாருங்கள், நேற்று நீங்கள் கொடுத்த காய்ன். தேங்க்ஸ்'' என்றார்!

ஆலன் பார்டர் திருப்பித் தந்த அந்த ஒரு ரூபாய் நாணயத்தை இன்னும் பாதுகாத்துக் கொண்டிருக்கிறேன்.

ஆடிட்டர் ராமன் பற்றிய இன்னும் சில கொசுறு தகவல்கள் : வீணை பிச்சுமணியின் சீடர். கச்சேரிகள் செய்கிறார். மேஜிக் கலையிலும் வல்லவர். பொழுது போக்காக நிகழ்ச்சிகள் நடத்துகிறார். ஆடிட்டிங் புகைப்படம், வீணை, மேஜிக்... ராமன் எத்தனை ராமனடி!

சந்திப்பு : **ராணிமைந்தன்**

## திடீர்ப் பரிசுப் போட்டி – 12 முடிவு

சின்னத் திரை ஹீரோ விஜய் ஆதிராஜ்- ரசனா திருமணம் பற்றிய கட்டுரைக்குப் பொருத்தமான தலைப்பு எழுதும் வேலை வாசகர்களிடம் விடப்பட்டது. ஏராளமான கற்பனைக் குதிரைகள் ரேஸில் கலந்து கொண்டாலும் வின்னிங் போஸ்ட்டைத் தொட்டது சுப. சுப்பிரமணியனின் குதிரைதான். கொள்ளு வாங்க ரூ.100/- அனுப்பி வைக்கப்படுகிறது. வாழ்த்துகள்!

பரிசு பெறும் தலைப்பு...

**''இரட்டைத் தாழ்ப்பாள்''**



**சுப. சுப்பிரமணியன்,**
**123 அரிமழம் சாலை,**
**சொக்கலிங்கபுரம்,**
**ராயவரம் – 622 506**
**புதுக்கோட்டை மாவட்டம்**

# கமலைக் காப்பியடிப்பது

—அஜித்துடன் உரசல்

‘சிட்டிசன்’ பட வெற்றியின் சந்தோஷ ரேகை எதுவும், அஜித்தின்









முகத்தில் இல்லாதது ஆச்சர்யம் தான். ஒரு வாரத்து கருகரு தாடியோடு; அருணாசலம் ஸ்டூடியோவில், தனது அடுத்த படத்திற்கான படப்பிடிப்பில் பரபரப்பாக இயங்கிக் கொண்டிருந்தார். ‘சிட்டிசன்’ முடிந்து போய்விட்டது. அது பற்றியே இன்னும் அசை போட்டுக் கொண்டிருந்தால்... அதை விடவும் ஒரு பெரிய பாய்ச்சலுக்கு எப்

# என்?

படித் தயாராவது என்று நம் கண்களை ஊடுருவிக் கேட்கிற அஜித்திடம் நம் முதல் கேள்வியே வத்திக்குச்சியைப்





பற்ற வைத்தது.

**'தீனா' படத்தில் ரஜினி போல் செய்திருக்கிறீர்கள் என்றார்கள். இப்போது 'சிட்டிசனை'ப் பார்த்துவிட்டு கமல் என்கிறார்கள். அப்படியானால் அஜித் யார்?**

எனது ரசிகர்களில் ஒருவராவது, என்னிடம் வந்து, நான் ரஜினியையோ, கமலையோ இமிடேட் செய்து நடிப்பதாகச் சொன்னதில்லை. வெளிப்புறப் படப்பிடிப்பில் நேரடியாகவும் கடிதங்கள் மூலமும் ரசிகர்களின் உடனடி ஃபீட்பேக்கை எதிர்கொள்கிற நடிகன் நான். 'தீனா'வை ரஜினி படம் மாதிரி இருக்கிறது என்றும், 'சிட்டிசன்' கமல் படம் மாதிரி இருக்கிறது என்றும் சொன்னார்கள். அது உண்மை. அதற்குக் காரணம் இந்த இரண்டு படங்களுமே, ரஜினி, கமல் பாணி பார்முலா படங்கள். வளரும் கலைஞன் ஒருவன் வளர்ந்து விட்ட கலைஞர்களின் பாதிப்பை உள்வாங்கிக் கொள்வது என்பது இயல்பு. அப்படித்தான் கமலும், ரஜினியும் எனக்குள்ளும் பிம்பமாய்ப் பதிந்திருக்கிறார்கள். ஆனால் அவர்களை அப்படியே பிரதிபலிக்கிற கண்ணாடியாக நான்



இருந்திருந்தால் அஜித் எப்படி உருவாகியிருக்க முடியும்... சினிமா என்பதே இங்கே பார்முலா தான். 'தீனா', 'சிட்டிசன்' எனது சினிமா வாழ்க்கையில் இரண்டு பார்முலா படங்கள், அவ்வளவுதான். இதே மாதிரி



"தலைவருக்கு முன்னாடி.... யாரையும் 'பொறம்போக்கு'ன்னு திட்டக்கூட பயம்மா இருக்கு..."
"ஏன்?"
"எங்க? எங்க இருக்கு...ன்னு உடனே பரபரக்கிறாரு!"
— எஸ். சக்தி குணசீலன்

இன்னும் இரண்டு படமெடுத்தால் இங்கே யார் பார்ப்பது... இந்த யதார்த்தத்தை நான் நான்கு உணர்ந்திருக்கிறேன்.

**'அமர்க்களம்' படத்தில் தொடங்கிய அதே, அதிரடி ஆக்ஷன்தானே, 'தீனா', 'சிட்டிசன்' படங்களிலும் தொடர்கிறது? ஆக்ஷன் படங்கள்தான் நமக்குப் பாதுகாப்பு என்று நீங்கள் முடிவு செய்து விட்டதைத்தானே இது காட்டுகிறது?**

நிச்சயமாக இல்லை... 'வாலி'யில், ஏக்கமும் கனவுகளும் நிறைந்த ஒரு ஹோம்லி வில்லனாக நான் நடித்ததை எப்படி மறந்து போனீர்கள். 'முகவரி'யில் லட்சியத்திற்காக காதலை தியாகம் செய்கிற மிடில்கிளாஸ் இளைஞனாக நடித்தேனே? இப்போது 'நியூ' படத்தில் முழுக்க முழுக்க காமெடி செய்து கொண்டிருக்கிறேன். 'பூவெல்லாம் உன் வாச'த்தில் குடும்ப பாசம், காதல் என்று சிக்கிக்கொள்கிற ஒரு சராசரி இளைஞனாக நடித்திருக்கிறேன். வெரைட்டியான படங்களைக் கொடுக்க வேண்டும்... அது வெற்றிப் படமாக இருக்க வேண்டும் என்பதுதான் எனது நிரந்தர நிலைப்பாடு. மற்றபடி ஆக்ஷன் ஓர் அம்சம். அதுவே முழுப் படத்தையும் தீர்மானிப்பதில்லை.

**எப்படியிருந்தாலும் ஹீரோயிசத்தை விரும்பாத ஹீரோ என்று சொல்லிக் கொள்ளும் தைரியம் உங்களுக்கு இருக்கிறதா?**

இது எப்படியிருக்கிறது என்றால் ரெஸ்டாரெண்டுக்கு வந்தவர்களை, 'சாப்பிட வந்தீர்களா?' என்று கேட்பதைப் போல் இருக்கிறது. தமிழ் சினிமாவில் ஹீரோயிசம் இருக்கிறது ஒப்புக் கொள்கிறேன். ஹீரோயிசத்தால் நிறைய பார்வையாளர்கள் ஈர்க்கப்படுகிறார்கள். உண்மை. எனக்கும் கூட நிறைய ரசிகர்கள் கிடைக்க அதுவும் காரணமாக இருக்கலாம். ஆனால் சினிமாவில், வெற்றியை அது மட்டுமே நிர்ணயிக்கிற காரணி என்று நான் சொன்னால் அது நல்ல நகைச்சுவையாக இருக்கும். இது டீம் ஒர்க். அதை நான் மதிக்கிறேன். அதே நேரம் எனக்காக கதையை உருவாக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பவன் அல்ல நான். இன்றைய சூழலுக்கு அப்படி எதிர்பார்த்தால் தாக்குப் பிடிப்பது கடினம். அதனால்தான் இமேஜ் பற்றிக் கவலைப்படாமல் மீனவன் சுப்ரமணியாக என்னால் மாற முடிந்தது. தலை முடியை ஒட்டவெட்டி, முடிக்கு டை அடிக்காமல், ப்ளீச் செய்துகொண்டேன். உடம்பிலிருக்கிற ஒவ்வொரு முடியையும் ப்ளீச் செய்தேன். இந்த மஞ்சள் நிறம் நீங்க இன்னும் ஒரு வருடம்கூட ஆகலாம். ரசிகர்களுக்காக நான் எந்த வலியையும் ஏற்கத் தயார். அஜித் படத்திற்குக் கொடுக்கிற காசு வீண் இல்லையென்று அவர்கள் சொல்ல வேண்டும். அதே நேரம் இமேஜ் பற்றிக் கவலைப்படாமல் பல்வேறு பாத்திரங்களில் முகம் மாற்றுகிற நடிகன், என்கிற முத்திரையும் எனக்கு வேண்டும். இதற்கு இமேஜை, நான் ஒரு இஷ்யூவாக நினைக்கவில்லை.

'பாரதி' படத்தில் பாரதியாகவே வாழ்ந்து காட்டிய சாயாஜி ஷிண்டேவுக்குப் பெரிய மரியாதை கிடைத்திருக்கிறது. ஆனால் அடுத்து அவர், நடிக்கும் 'அழகி' படத்தில் பீடி புகைக்கும் மீன் வியாபாரியாக நடிக்கிறார். இப்படி இவர் நடிக்கலாமா என்று ரசிகன் பதறுவான் என்பதற்காக, அவர் நடிக்காமல் இருக்க முடியுமா? கலைஞனுக்குப் பல முகங்கள்... அவனை வளர்க்கக் கூடியது அதுதானே... அப்படித்தான் நானும் வளர விரும்புகிறேன்.

**மிகவும் நல்லது. ஆனால் சண்டைக் காட்சிகளையும் டூயட் கலாசாரத்தையும், வலிந்து திணித்துக் கொள்கிறபோது, நீங்கள் புதிதாக செய்யும், சோதனை முயற்**

சிக்கு, திருஷ்டிப் பரிகாரம் மாதிரி இந்த கமர்ஷியல் விஷயங்கள் ஆகி விடுவது பற்றிக் கவலை இல்லையா?

நியாயமாகக் கேட்கிறீர்கள். ஆனால் சினிமா, இங்கே வாழ்க்கைப் பிரச்னையாகவும், வயிற்றுப் பிரச்னையாகவும் இருக்கிறதே? தொண்ணூற்று ஏழில், ஐந்து தோல்விப் படங்கள் கொடுத்தேன். என்னை வைத்துப் படமெடுத்த தயாரிப்பாளர்கள் பாதிக்கப் பட்டார்கள். அதன் பிறகு அவர்களுக்கு நான் படம் கொடுத்து தூக்கி விட வேண்டி வந்தது. அதேபோல் நடனக் காட்சியையும், சண்டைக்காட்சியையும் நம்பி, பல நூறு குடும்பங்கள் இங்கே வாழ்ந்துகொண்டிருக்கின்றன. அவர்களை பட்டினிப் போட முடியுமா? சினிமாவுக்குப் போவது என்பதே, நடுத்தர மக்களுக்கு காஸ்ட்லியான விஷயமாகிவிட்ட நிலையிலும், பொழுது போக்கைத் தேடி வரும் அவர்களை ஏமாற்ற முடியுமா? அஜித் படம் பார்க்கிற ஒவ்வொருத்தரும், கொடுத்த காசுக்கு விசில், அடித்துக்கொண்டே படம் பார்க்க வேண்டும். என்னைக் கேட்டால், சமூக நோக்குள்ள ஒரு சீரியஸ் கதையை, பொழுதுபோக்கு அம்சமும் கலந்து கொடுத்தால் எந்தத் தவறும் இல்லை. அப்படிக் கொடுத்ததால் தான் சிட்டிசனை ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். நான் இப்படிப் பேசுவதால் பேரலல் சினிமாவுக்கு எதிரானவன் என்று நினைத்துவிடக்கூடாது... அது போன்ற முயற்சிகளிலும் இறங்க வேண்டும் என்கிற ஆர்வம் இன்னுமொரு ஐம்பது படங்களில் நடித்த பிறகு எனக்கு வரலாம். இப்போதைக்கு என்னை நம்பிப் படமெடுக்கிற தயாரிப்பாளர், அதில் வேலை கிடைக்கும் என்று நம்பிக்கையோடு இருக்கிற கலைஞர்கள், என் படத்தை நம்பிக்கையோடு வாங்குகிற விநியோகஸ்தர், தியேட்டர் காரர், டிக்கெட் கிழிப்பவர், பாப்கார்ன் விற்பவர் முக்கியமாக ரசிகர்கள் என்று எந்தத் தரப்பும் என்னால் ஏமாந்து போகக் கூடாது. அஜித் ஒரு எண்டர்டெயினர். இப்போதைக்கு நான் பயணம் செய்து கொண்டிருக்கும் கம்பார்ட்மெண்ட் இதுதான்.



## நூலகம்

அடையாறில் உள்ள ஒரு நூலகத்தில், நான் கண்டு ரசித்த வாசகம்:

"ஒரு முட்டாள், கடலின் மீது ஒரு கல்லை எறிகிறான். ஆனால் உழைப்பாளியோ அதே கடலில் மூழ்கி, முத்துக்களை எடுக்கிறான்...!

– டி.எஸ். பாலு

**அதிக ஈடுபாட்டையும், உழைப்பையும் கொட்டி, நீங்கள் உருவாக்கிய 'சிட்டிசன்' படம் பெரும் எதிர்பார்ப்பை உருவாக்கியது. ஆனால் படத்தின் நிறைகளைச் சுட்டிக் காட்டிய பத்திரிகைகள், நிறைய குறைகளையும் சுட்டிக்காட்டின. இந்த விமர்சனங்களை நீங்கள் எப்படிப் பார்க்கிறீர்கள்? படம் வெளிவரும் முன்பே இந்தக் குறைகளை உணர்ந்தீர்களா?**

இந்தப் படத்திற்காக நிறைய கஷ்டப்பட்டேன். ஒருமுறை மேக்அப் செய்து முடிக்கவே ஆறு மணி நேரம் தேவைப்பட்டது. 'சிட்டிசன்' வலி இன்னும் எனக்குள் மிச்சமிருக்கிறது. படத்தின் வெற்றிக்குப் பிறகே அந்த வலி அர்த்தமுடையதாக எனக்குப் படுகிறது. இது என்னுடைய பக்கம்.

மீடியாவின் விமர்சனம் தொண்ணூற்று ஒன்பது சதவிகிதம் நடுநிலையாக இருந்தது. அந்த விமர்சனத்தை நான் ஏற்றுக் கொள்கிறேன். விமர்சனங்களை ஏற்றுக் கொண்டதால்தான் நான் வளர்ந்திருக்கிறேன். இன்னும் சொல்லப் போனால் விமர்சனங்களில் இருந்து நான் கற்றுக்கொள்கிறேன். சிட்டிசனைப் பொறுத்தவரை, எனது பங்கை நான்

ஒழுங்காகவே செய்திருக்கிறேன். படம் வெளி வரும் முன்பே குறைகள் உங்கள் கண்ணுக்குத் தெரியவில்லையா என்கிறீர்கள். தயாரிப்பில் இருக்கும் ஒரு படத்தின் குறைகளை களையத்தான் நான் முயற்சிக்க வேண்டுமே தவிர, குறைகளை வெளியே சொல்லிக் கொண்டிருந்தால் அது தயாரிப்பாளரைப் பாதிக்கும்... முடிந்தவரை குறைகளைக் களைந்தோம். அதை மீறித் தெரிகிற குறைகள் பற்றி நீங்கள் இயக்குனரிடம்தான் கேட்க வேண்டும். அதற்கு நான் பொறுப்பல்ல.



“இதுவரை பத்துமுறை எனது முதுகெலும்பில் அறுவை சிகிச்சை செய்து நிமிர்ந்து எழுந்திருக்கிறேன். சினிமாவில் நடிப்பது ஏதோ ஏசி வேனில் உட்கார்ந்துகொண்டு ஜூஸ் குடிப்பது என்று நான் நினைக்கவில்லை.”

**தோற்றத்தில் முதிர்ச்சி பெறாத அஜித், தோற்றத்திற்குப் பொருந்தாத வேடங்களையும், பாத்திரங்களையும் செய்யத்துடிப்பது, அவரின் அவசரத்தையே காட்டுகிறது என்ற பரவலான விமர்சனம் குறித்து என்ன நினைக்கிறீர்கள்?**

இந்த அவசரம் இன்றைய அவசியமாகி விட்டது. ரஜினியும், கமலும் கடந்த இருபத்தைந்து வருடங்களா சினிமாவில் நின்று நிலைத்திருக்கிறார்கள் என்றால் அது பெரிய சாதனை. சாட்டிலைட் தொலைகாட்சியும், இண்டர்நெட்டும், பொழுதுபோக்கு பூங்காவும் வந்து சினிமா தியேட்டருக்கு வரும் ரசிகர் கூட்டத்தையே பாதியாகக் குறைத்து விட்ட கால கட்டத்தில், வாழ்ந்து கொண்டிருக்கிற நான், பதினைந்து வருடம் தாக்குப் பிடிக்க முடியுமா என்பது கேள்விக்குறிதான். இதனால்தான் அவசர அவசரமாக நம்மை நிரூபிக்க வேண்டியிருக்கிறது.

ரொமான்ஸ் பண்ணுவதற்கு மட்டும்தான் அஜித் என்று ஒரே நாற்காலியைப் பிடித்துக்கொண்டிருந்தால் முயல், ஆமை ஓட்டப் பந்தயம் மாதிரி ஆகிவிடும். மாறாக இங்கே ரொமான்ஸ் செய்ய பிரசாந்த் இருக்கிறார். மாதவன் வந்திருக்கிறார். ஒவ்வொரு நாளும் ஒரு புது ஹீரோ வந்து கொண்டிருக்கிற ஆரோக்கியமான சினிமாவில் ரசிகர்கள் தூக்கி எரியும் முன்பு, என்னை நான் பதிவு செய்து கொள்ள விரும்புகிறேன்.

இன்னொரு காரணம், வாழ்க்கையின் நிலையாமை. திருப்பதிசாமி என்றொரு இளம் இயக்குனர், சினிமாவிலும், யதார்த்தத்திலும் ஒரு நிஜமான மனிதர், விபத்தில் இறந்துவிட்டார். இது வரை பத்துமுறை எனது முதுகெலும்பில் அறுவை சிகிச்சை செய்து நிமிர்ந்து எழுந்திருக்கிறேன். சினிமாவில் நடிப்பது ஏதோ ஏசி வேனில் உட்கார்ந்து கொண்டு ஜூஸ் குடிப்பது என்று நான் நினைக்கவில்லை. ஒவ்வொரு ஷாட்டிலும் ரிஸ்க் எடுக்கிற, இருக்கிற ஒரு கலையாகத்தான் இதைப் பார்க்கிறேன்.

இங்கே எந்த நேரத்திலும் எதுவும் நடக்கலாம். எனவே எதற்காகவும் காத்திருக்க எனக்கு விருப்பமில்லை.

**அஜித் என்கிற மனிதன், அஜித் என்கிற நடிகன் இருவரில் உங்களை இயக்குவது யார்?**

அது கேள்விக்குறியாகவே இருக்கட்டும். அது எனக்கு மட்டுமே தெரிந்த ரகசியம். எனது குடும்பத்திற்கேகூட அது தெரியக்கூடாது என்கிற எண்ணம் எனக்குண்டு. அது நம்மிடமே ரகசியமாக இருக்கிறவரை நாம் நாமாகவே இருப்போம். எல்லோரும்கூட இப்படி அடை காத்துக் கொள்வது அவசியம். இதனால் நம்மைப் பற்றிய எதிர்பார்ப்பு மற்றவர்களிடம் இருந்து கொண்டே இருக்கும். அதில் கிடைக்கிற த்ரில்தான் நம்மைக் கட்டுப் படுத்தி வைக்கிற அங்குசம்.

சந்திப்பு: **ஜெயந்தன்**
படங்கள்: **ஐரிஸ்**

# வழி வழி...

உரக்கச் சிரிப்பதற்குமுன்
உற்றுப் பார்த்துக் கொள்வேன்
அம்மாவை.

சத்தம் போட்டுச் சிரித்தால்
அதட்டுவார் அப்பா.

'அதரம் மீறிய சிரிப்பு
ஆபத்து' என்பார்
அடுத்தவீட்டு மாமா.

பாஞ்சாலியின் கணநேர சிரிப்பு
துகிலுரியானதாம்
பாட்டி சொல்வாள்.

எப்படி எங்கு எந்தநேரம்
சிரித்துத் தொலைக்கணும் என்று
யோசித்து யோசித்து அழுததுண்டு.

இவ்வளவும் மறந்து போகும்
வாசலில்
சத்தம் போட்டுச் சிரிக்கிற
என் மகளை
அதட்டி அழைக்கையில்!



நா.வே. அருள்

ஓவியம்: பி.ஆர். ராஜன்



● வீதியில் குளியல்



● கோயில்

# தத்தளிக்கும்

வழிபாட்டுத்தல வரிசையில் தமிழக வரைபடத்தில் முக்கிய இடம் பெற்றிருப்பது சமயபுரம் மாரியம்மன் கோயில். இங்கு பெருகி வரும் கூட்டம் மற்றும் கோயிலுக்கு உள்ளேயும் வெளியேயும் நிலவி வரும் சுகாதாரச் சீர்கேடு ஆகியவை பக்தர்களின் மனசுக்குள் வெறுப்பையே உற்பத்தி செய்கின்றன.

கோயிலின் சன்னதி வாசலிலும், அதன் சுற்றுப் புறங்களிலும் அபிஷேக ஆராதனைப் பொருட்கள் விற்கப்படும் கடைகள் ஏறத்தாழ ஐந்நூறாவது இருக்கும். பஸ்ஸை விட்டிறங்கும் பக்தர்களை வலுக்கட்டாயமாக (வழிப்பறி) கையைப் பிடித்து இழுத்துச் சொல்லாதக் குறையாகத் தங்கள் கடைகளில் காலணிகளை விட்டுவிட்டு கற்பூரம் வாங்குமாறு நிர்ப்பந்தம் செய்கிறார்கள் இந்தக் கடைக்காரர்கள்.

இருபதிலிருந்து ஐம்பது ரூபாய் (பன்னீர் பாட்டிலும் சேர்த்து!) மட்டுமே பெறுமான முள்ள அர்ச்சனைத் தட்டுகளை ஆட்கள் தரம் பார்த்து, ரூபாய் இருபதிலிருந்து இருநூறு ரூபாய் வரைக்கும் வெகு சாமர்த்தியமாய்க் கட்டி விடுகிறார்கள். 'அப்பாடா' என அர்ச்சனைத் தட்டுடன் நீங்கள் நகர்ந்தால் போதும். கண்ணடக்கம், காலடக்கம், விற்பவர்கள் சூழ்ந்து விடுகிறார்கள். "ஒரு கண்ணடக்கம்... ஒரு காலடக்கம், ஏதாச்சும் ஒண்ணு வாங்கிக்குங்க சார். உங்களைப் போல ஒரு பத்துப் பேர் வாங்கினாத்தான் கஞ்சி குடிக்க முடியும் சார்." இவற்றை விற்கும் பத்து வயதுச் சிறுமிகளின் வாயிலிருந்து வரும் வார்த்தைகள் வியாபாரத் தந்திரமா? அல்லது வாழ்வின் நிஜமா? என்பது புரியவில்லை.

முடி காணிக்கை செலுத்துவதற்காக கோயில் நிர்வாகத்தால் நபர் ஒன்றுக்குப் பத்து ரூபாய்ச் சீட்டு வழங்கப்படுகின்றது. அந்தப் பத்து ரூபாயில் கோயில் நிர்வாகத்திற்கு ஐந்து

# சமயபுரம்!

ரூபாயும், முடி திருத்தும் தொழிலாளிக்கு ஐந்து ரூபாயும் போய்ச் சேர்வதாகக் கூறுகிறார்கள். முடி திருத்தும் தொழிலாளர்கள் மொட்டையடித்துக் கொள்ளும் ஒவ்வொருவரிடமிருந்தும் ரூபாய் பத்திலிருந்து முப்பது வரை சற்று மிரட்டலுடனே பெற்றுக் கொள்கின்றனர்.

முடி காணிக்கை செலுத்திவிட்டு வெளி வந்த சிலரைச் சந்தித்தோம். "ரூல்ஸ் எல்லாம் இங்கே பேசிட்டு இருக்க முடியாது. சட்டம் பேசினா நம்ம மொட்டைத் தலைய அவுங்க பிளேடு பதம் பாத்துடும். இருவது ரூவாக் கொடுக்கவும் இப்பப் பாருங்க காயம் படாம வழிச்சு வுட்டுட்டாங்க!" என்கிறார் ஒருவர்!

முடி காணிக்கை செலுத்தியவர்கள் குளித்துவிட்டு வேறு உடை மாற்றிக் கொள்வது வெகு சிரமம். பேரூராட்சி சார்பாக இரண்டு இடங்களில் குளியலறை, கழிவறை வசதிகள் இருந்தாலும் பெரும் எண்ணிக்கையில் அவை இல்லை. அதனால் வந்து செல்லும் கூட்டத்திற்கு இவை போதாது என்பதற்கு அடையாளமாகக் கோயிலின் வடபுறத்தில் அமைந்திருக்கும் ஒரு பத்தடி அகலப் பாதையை பக்தர்கள் திறந்த வெளிக் கழிப்பிடமாகத் தினந்தோறும் பயன்படுத்தி வருகிறார்கள். அதிக அளவில் குளியலறை மற்றும் கழிப்பறை வசதிகள், பெண்களுக்கெனத் தனியாக உடைமாற்று அறைகளோ இல்லாதது மிகப் பெரிய அவலம்.

கோயிலின் உள்ளே நுழைந்தால் கைலி கட்டிய அங்கீகாரமில்லாத ஏழெட்டு இடைத்தரகு பூசாரிகள்! பதினைந்திலிருந்து இருபத்தைந்து வயது இளைஞர்கள். அவர்களின் ஒரே அடையாளம் நெற்றியில் விபூதி ப்ளஸ் குங்குமம். தேங்காய்ப் பழத் தட்டுடன் வரும் கிராமத்துப் பக்தர்களை இவர்கள் சூழ்ந்து விடுகிறார்கள். பாவை விளக்குச் சிலையின் பாதத்தில் தேங்காய் உடைத்து, கற்பூரம் ஏற்றுகிறார்கள். அந்த அப்பாவி பக்தர்களை மூலஸ்தானத்திலிருந்து நூறடிக்கு அப்பால் நின்று கும்பிட வைத்து விடுகிறார்கள். தேங்காய் உடைத்த திருப்பணிக்காக அவர்களிடமிருந்து ரூபாய் பத்தோ இருபதோ பறித்துக் கொள்கிறார்கள் இந்த இடைத்தரகர்கள்.

பெருமளவில் வருமானம் உடைய தமிழகத் திருக்கோயில்களில் சமயபுரமும் ஒன்று. இருப்பினும் சுகாதாரம் என்பது மருந்துக்கும் கிடையாது. கொடி மரம் அருகிலும், மூலஸ்தானத்து வெளிப் பிராகாரத்திலும் எந்த நேரமும் சதசதவென்று ஈரமாகவே இருக்கின்றது. பக்தர்கள் அங்கப்பிரதட்சணம் செய்து நகரும் பிராகாரத்தில் ஆங்காங்கே கூட்டமாய் வெளியூர் பக்தர்கள் அமர்ந்து உணவருந்துகிறார்கள். அது அங்கப் பிரதட்சணம் செய்யும் பக்தர்களுக்குப் பெரும் இடையூறாக உள்ளது. கோயில் நிர்வாகம் இதையெல்லாம் கண்டு கொண்டதாகத் தெரியவில்லை.



கோயிலுக்குள் துப்புறவுப் பணியாளர்கள் என்று எவரும் இல்லாததால் அபிஷேக திரவங்கள் அனைத்தும் சுற்றுப் பிரகாரத்தில் உள்ள சாக்கடையில் அளவுக்கதிகமாக தேங்கி நிற்கின்றன. கோயிலின் அனைத்துப் பகுதிகளிலும் சாக்கடை நீர் தேங்கி துர்நாற்றம் வீசுகிறது. கோயிலுக்கு உள்ளே தான் இந்த தத்தளிப்பு என்றால் வெளியேயும் அதே நிலைதான்.

இத்தனைப் பிரச்னைகளுக்கும் தீர்வுதான் என்ன? என்பதற்காக கோயில் நிர்வாக அலுவலகம் சென்றோம். கோயிலுக்கு உள்ளே நிலவும் சுகாதாரக் கேடு, இடைத் தரகர்களின் ஆதிக்கம் குறித்துப் பேசினோம்.

"இப்ப கோயில் நிர்வாகத்துல ஈ.ஓ. (நிர்வாக அதிகாரி) போஸ்டிங்ல இல்லைங்க. அதனால உங்களோட கேள்விகளுக்கு நிர்வாக ரீதியா என்னால பதில் சொல்ல முடியாது. கோயிலுக்குள்ளே இடைத்தரகு பூசாரிங்க இருக்கறதா சொல்றீங்க. இப்ப நான் போயி அந்த ஆளுங்கள வெளியே வெரட்டி வுடுறேன் சார்!" எனச் சொல்லிவிட்டு எழுந்து போனார் சமயபுரம் கோயில் நிர்வாக அலுவலக மேலாளர்.

**- இருள்நீக்கியான்**



• ஆர்.கே. மூர்த்தி



• சக்கரவர்த்தி

# ‘ஜோரான்’ மூர்த்தி,

‘பீகாரில் வெள்ளம்’ என்ற கனமான சில்லிட வைக்கும் குரலிலிருந்து, ‘செம ஜாலி... இல்லே?’ என்று கொப்பளிக்கும் டீனேஜ் துள்ளல் குரல் வரை, பல குரல்கள் நமக்குப் பரிச்சயம். ஆனால் முகங்கள்?

இதோ... சில மும்பை டப்பிங் முகங்கள்:

**சக்கரவர்த்தி:** ‘ரிஷிமூலம்’ படத்தில் சிவாஜி-கே.ஆர்.விஜயாவின் மகனாக நடித்தவர். இப்போது மும்பையில் டப்பிங் துறையின் சக்கரவர்த்தி! கடந்த நான்கு வருடங்களில் நாலாயிரத்துக்கும் மேற்பட்ட விளம்பரப் படங்களுக்குக் குரல் கொடுத்திருக்கிறார். பிரபல ஹிந்தி மெகா தொடரான ஸ்வாபிமானில் (சுயமரியாதை) கதாநாயகன் ரிஷிப் மல்ஹோத்ராவுக்குக் குரல் கொடுத்து, நட்சத்திர அந்தஸ்து பெற்றிருக்கிறார். ‘சந்திரகாந்தா’, ‘அடைக்கலம்’ (பனாஹ்), ‘இப்ப சந்தோஷம் தானா? (க்யா ஆப் குஷ் ஹை) போன்ற பல தொடர்களில் சக்கரவர்த்தியின் கம்பீரமான குரல்தான்.



• ராமு



• சாயிநாத்

‘‘சென்னையில் உள்ள சிலர், ‘மும்பை தமிழ் கலைஞர்களுக்குத் தமிழ் பேசத் தெரியாது’ என்று பொய்ப் பிரசாரம் செய்து, குறைந்த பட்ஜெட்டில் குரல் பதிவு செய்து தருவதாக பேரம் பேசி, பாதி தொடர் நடந்து கொண்டிருக்கும்போதே, மும்பைக் கலைஞர்களை விலக்கி, குள்ள நரித்தனம் செய்கிறார்கள். இது நியாயமா?’’ என்று குமுறுகிறார் சக்கரவர்த்தி.

**ஜெயமீரா ஜகந்நாத்:** கலகலப்பு ப்ளஸ் சுறுசுறுப்பு ப்ளஸ் இளமை!

ஜெயமீராவின் வெற்றிக்கு காரணம் இந்த த்ரீ-இன்-ஒன் குரல்! காலை ஏழரை மணி முதல் மதியம் பன்னிரண்டு வரை, பள்ளி ஆசிரியையாக வேலை. பகல் ஒரு மணிக்கு மேல் டப்பிங்!

ஜெயமீராவின் ஸ்பெஷாலிடி என்ன தெரியுமா?.. காலேஜ் பெண்ணுக்கும் குரல் கொடுக்கிறார்; 'பழைய நினைப்புடா பேராண்டி' என்று பாட்டிக்கும் குரல் கொடுக்கிறார்.

டாடா அக்னி டீ, பாண்ட்ஸ், சன் சில்க், ஹமாம், லைஃபோலா என குரல் கொடுத்திருக்கும் மீரா, பரத நாட்டியக் கலைஞரும் கூட. தமிழ் நாடகங்களில் நடிக்கிறார்.



• மூர்த்தி



• வித்யா



• ஜெயமீரா



• பிரபா

# ஹமாம் மீரா!'

**மூர்த்தி குடும்பம்:** அப்பா மூர்த்தி, அம்மா திருமதி மூர்த்தி, பெண்கள் வித்யா, பிரபா என குடும்பமே டப்பிங் ஆர்டிஸ்டுகள். சவலைக் குழந்தையாக இருந்த தமிழ் டப்பிங் கலைத் துறைக்கு, ஊட்டம் அளித்து, 'க்ஷக் முஷக்' குழந்தையாக்கியவர், ஜாம்பவான் மூர்த்தி. 'மூர்த்தி பேனரில்' குரல் கொடுக்காத டப்பிங் கலைஞரே இல்லை' என்று சொல்லும் அளவுக்கு ப்ரொஃப்பஷனல் டச் கொடுத்தவர்.

ஐந்து வருடங்களாக இழுத்தடித்த ஜுனூன் தொடரின் தமிழாக்கத்தில், பின்னணிக்குரல் அமைக்க, படாத பாடு பட்டதால் 'ஜுனூன் மூர்த்தி' என்றே மும்பை வட்டாரத்தில் பிரபலமாகி விட்டாராம்.

**ல**க்ஷ்மி மூர்த்திக்கோ சிலோன் ரேடியோவில் வெள்ளிவிழா கண்ட அனுபவம். மேகி, ஏரியல் (மாமியார்), டாபர் வாடிகா போன்ற பல விளம்பரப் படங்களில் குரல் கொடுத்தவர். "நீ சின்னக் குழந்தையா இருக்கறச்சே, வுட்வர்ட்ஸ்தான் கொடுத்தேன்" என்று குரல் நடுங்கப் பேசியது இவர்தான்!

அம்மா, அப்பா இருவருமே டப்பிங் துறையில் இருப்பதால், மகள்கள் வித்யா, பிரபா இருவருக்கும் பாண்டி ஆடும் பருவத்திலிருந்தே சப்பாத்தி சப்ஜியுடன் 'டப்பிங்' கலையையும் ஊட்டி வளர்த்து விட்டார்களாம்!

க்ளினிக் ப்ளஸ் விளம்பரத்தில் 'தருமா வா... பீமா வா' என் பஞ்ச பாண்டவர்களை அழைத்துக் குரல் கொடுப்பவர் வித்யா.

ஜூனியர் ஹார்லிக்ஸில் வரும் அம்மா குரலும் வித்யாவுடையது.



• பிச்சை

"பிறருக்காக பேசிப்பேசி, சொந்தக் குரலில் பேசுவதே மறந்துடுச்சு" என்கிறார்கள் இந்த டப்பிங் உ.பி.ச.கள்!

**சிவகுமார்:** 'சிவா' என செல்லமாக நட்பு வட்டாரத்தில் அறியப்படும் இவர் 'ஸ்டார் ப்ளஸ்'ஸில் வந்த முதல் தமிழ்க் கலைஞர். நாடகக் கலைஞர், மாடலிங் கலைஞர், டப்பிங் ஆர்டிஸ்ட், பாடகர், டாகுமெண்டரி தொகுப்பாளர் என நிறைய முகங்கள் இவருக்கு.

'ஜுனூன்' தமிழாக்கத்தில் வில்லன் கேசவ் கல்ஸிக்கும், புனித் இஸ்ஸாருக்கும் குரல் தந்ததால் இவருக்கு ரசிகர் கூட்டத்தில் பெரும் புகழ். 'இம்திஹான்', 'ந்யாய்', 'ஜயஹனுமான்', 'அஜ்னபி', 'நுக்கட்', 'ஓம் நமசிவாய', 'சிவபுராணம்' என சிவா பங்குபெற்ற டி.வி. தொடர்கள் பட்டியல் ரொம்ப நீளம்!



• லக்ஷ்மி

**ஆர். பிச்சை:** பதினைந்து வருடங்களாக மும்பையில் பின்னணிக் குரல் கொடுத்து வருபவர். 'நுக்கட்' (தெருமுனை) தொடரில் வந்த குடிகார கோபிக்கு அச்சு அசலாய்ப் பொருந்தியது இவர் குரலேதான்.

'சந்திரகாந்தா', 'ஸ்ரீமான் ஸ்ரீமதி', 'பார்ஜ்', 'ஸ்வாபிமான்' போன்ற ஹிந்தி தொடர்களின் தமிழாக்கத்தில் குரல் கொடுத்திருக்கிறார். 'சரியான சமயத்தில் பணப் பட்டுவாடா செய்யப்படுவதில்லை' என்பதை தவிர இவருக்கு டப்பிங் தொழிலில் எந்தக் குறையுமில்லையாம்!



• விஜயராகவன்

**விஜயராகவன்:** நூற்றுக்கணக்கான விளம்பரப் படங்களில் குரல் கொடுத்திருந்தாலும் விபுல் புடைவைக்கு இவர் கொடுத்த குரல்தான் புகழேணிக்கு ஏற்றிவிட்டது.

"இன்னொரு முறை சொல்லுங்க" என ராகம் போடும் குரல் விஜயராகவனுடையது!

'இழு இழு' என இழுத்தாலும் பல ரசிகர்களைப் பைத்தியமாக அடித்த 'ஜுனூன்' டி.வி. தொடரில், தாத்தா நகர்கரின் கனமான குரல், 'நுக்கட்' டி.வி. தொடரில் பிச்சைக்கார தனுசு குரல் என ஆண்மை தூக்கலாக அமைந்த கரகர குரல் இவருடையது.

"மச்சி... மாம்ஸ்...பந்தா... ஜாலி..." போன்ற வார்த்தைகளைத் தாராளமாக உபயோகிக்கலாம். 'ஹிந்தி விளம்பரப் படத்தில் இதெல்லாம் இல்லையே' என்று தயங்கினால், விஷயம் தமிழில் ரீச் ஆகாது" என்பது விஜயராகவன் அபிப்ராயம்.

**டக்ளா ராமு:** கே. பாலச்சந்தரின் வாட்சுக் கையால் குட்டும், விஜய்காந்த் வாயால் ஷொட்டும் பெற்றவராம். ஆபாவாணன், ராவுத்தர், விஜய்காந்த் மூவரும் 'டக்ளா ராமு' என்று காரணப் பெயர் சூட்ட, வெறும் ராமு 'டக்ளா ராமு' ஆகிவிட்டாராம்.

'பொய்க்கால் குதிரை', 'துர்கா', 'தைப்பூசம்' போன்ற படங்களில் நடித்திருக்கிறார். வீடு பூரா ஷீல்டுகள் அலங்கரிக்கின்றன.

சர்ஃப் எக்ஸெல், கோல்கேட் டூத் பவுடர், ஆல் அவுட் கொசுவத்தி போன்ற விளம்பரப் படங்களில் ஒலிப்பது டக்ளா ராமுவின் டக்கர் குரல்.

கே. பாலச்சந்தரிடம் ஏகலைவ பக்தி வைத்திருக்கும் ராமுவின் ஆசை, நகைச்சுவையாகப் பேசி, சிரித்துக் கொண்டிருக்கும்போதே உயிர் போய்விட வேண்டும் என்பதுதானாம்!

**சாயிநாத்:** ஏர்செல் ஃபோன் அண்ணாச்சி குரல் இவருடையதுதான். பாடகர்; மாடலும் கூட.

"புராணப் படங்கள் எடுக்கும் போது, ஏன் இலக்கண சுத்தமான மொழி பேச வேண்டும்?சிவனும் பார்வதியும் இயல்பான தமிழில் பேசக் கூடாதா?" என்று கேட்கும் சாயிநாத், 'ஜெய்ஹனுமான்' தொடரைத் தமிழாக்கம் செய்து குரலும் கொடுத்திருக்கிறார்.

— சாரதா ஸ்ரீனிவாஸன்

# பொன்னியின் செல்வன்

## தொண்ணூறாம் அத்தியாயம்

## பொன்மழை பொழிந்தது!

அமரர் கல்கி

வந்தியத்தேவன் ஆனைமலைக் காட்டுக்குத் தான் சென்று வந்த வரலாற்றைக் கூறி முடித்ததும், குந்தவை அவனைப் பார்த்து, "ஐயா! நீங்கள் கூறிய வரலாறு மிக அதிசயமாயிருக்கின்றது. உண்மை நிகழ்ச்சிகள்தானா என்று சந்தேகமும் சில சமயம் எனக்கு ஏற்பட்டது. கதை புனைந்து கூறுவதில் தாங்கள் கெட்டிக்காரர் என்பதை அறிவேன். அதிலும் தாங்கள் அடிக்கடி பேச்சை நிறுத்தி மேலும் கீழும் பார்த்து விழித்து விட்டுப் பேச்சைத் தொடங்கியபோது என்னுடைய சந்தேகம் மேலும் அதிகமாயிற்று!" என்றாள்.

வந்தியத்தேவன் மற்றும் ஒருமுறை மேலும் கீழும் பார்த்துவிட்டுக் குந்தவையை நோக்கினான்.

"தேவி! புனைகதை சொல்லுவதற்கு வேறு இடங்கள் இருக்கின்றன. என்னுடைய அந்தச் சாமர்த்தியத்தைத் தங்களிடம் இதுவரையில் நான் காட்டியதில்லை. இடையிடையே என் பேச்சுத் தடைப்பட்டதற்கு வேறொரு காரணம் உண்டு!" என்றான்.

"அதுவும் பெரிய இரகசியமா? பெண்களிடம் சொல்லக் கூடாதா?" என்று கேட்டாள் குந்தவைப் பிராட்டி.

"வேறு யாரிடமும் சொல்லக் கூடாத இரகசியந்தான். ஆனால் தாங்கள் அநுமதி கொடுத்தால் அதையும் சொல்லுகிறேன்!" என்றான் வந்தியத்

தேவன்.

"உண்மையைச் சொல்லுவதற்கு எப்போதும் என்னுடைய அநுமதி உண்டு!" என்றாள் குந்தவை.

"அப்படியானால் சொல்லி விடுகிறேன். பிறகு என்னைக் கோபித்துக் கொள்வதில் பயனில்லை. நான் தங்களிடம் பேசிக்கொண்டிருக்கும்போது சில சமயம் தற்செயலாகத் தங்கள் விழிகளில் என் பார்வை பதிந்து விடுகிறது. தேவியின் கரிய கண்களில் என்ன அரிய மாயம் இருக்கிறதோ, தெரியவில்லை. அது என்னை அப்படித் திகைத்து நிற்கும்படி செய்து விடுகிறது. மறுபடியும் சமாளித்துக் கொண்டு பேச்சைத் தொடங்குகிறேன்!" என்றான்.

குந்தவையின் இதழ்கள் விரிந்தன; கன்னங்கள் குழிந்தன; கண்கள் சிரித்தன.

"ஐயா! என்னுடைய கண்களில் அரிய மாயம் ஒன்றுமில்லை; கரிய மாயமும் இல்லை. சில காலமாக மையிட்டுக் கொள்வதையும் விட்டுவிட்டேன். என்னுடைய கண்களில் தாங்கள் தங்களுடைய உருவத்தைத்தான் பார்த்திருப்பீர்கள். அது தான் தங்களைத் திகைப்படையச் செய்திருக்கும்!" என்றாள்.

"தேவி! என்னுடைய உருவத்தை நான் கண்ணாடிகளில் பார்த்திருக்கிறேன். தெளிந்த நீரில் பிரதிபலிக்கப் பார்த்திருக்கிறேன். அப்போதெல்லாம் நான் எந்தவிதத் திகைப்பும் அடைந்ததில்லை!" என்றான் வல்லவரையன்.

"என் கண்களைக் கண்ணாடிக்கும் தண்ணீருக்கும் ஒப்படுகிறீர்களா? கண்ணாடி மங்கி விடும்; தண்ணீர் கலங்கி விடும்!" என்றாள் இளவரசி.

"கண்ணாடி மங்கினால் துடைத்துச் சுத்தம் செய்வேன். தண்ணீர் கலங்காமல் பார்த்துக்கொள்வேன். தங்கள் கண்களின் இமைகள் மூடித் திரையிட்டு என் உருவத்தை மறைப்பதை நான் தடுத்து நிறுத்த முடியாதல்லவா?" என்றான் வந்தியத்தேவன்.

"கண்ணாடிக்கு எதிரில் நின்றால்தான் உருவம் பிரதிபலிக்கும். தண்ணீர் கலங்காமல் தெளிந்திருந்தால்தான் உருவம் தெரியும். ஆனால் என் கண்கள் திறந்திருந்தாலும் கண்ணிமைகள் மூடியிருந்தாலும் தாங்கள் என் முன் இருந்தாலும் இல்லாவிட்டாலும் தங்கள் உருவம் எப்போதும் என் கண்களில் பொலிகிறது. இந்த அதிசயத்தின் காரணம் என்னவென்று தங்களால் சொல்ல முடியுமா?" என்று குந்தவை கேட்டாள்.

வந்தியத்தேவனின் மெய் சிலிர்த்தது. தழதழத்த குரலில், "தெரியவில்லையே, தேவி!" என்றான்.

"தெரியாவிட்டால் நான் சொல்லுகிறேன். தங்களிடத்திலேதான் அப்படி ஏதோ ஒரு மாய மந்திரசக்தி இருக்கிறது. சோழ குலத்தைப் பழி வாங்க வந்த வயிர நெஞ்சம் கொண்ட நந்தினியின் உள்ளமும் தங்களைக் கண்டு சஞ்சலம் அடைந்து விட்டதல்லவா?"

"சற்று முன் தாங்கள் அமுதினுமினிய வார்த்தை கூறி என்னைப் பரவசப்படுத்தினீர்கள். அதே மூச்சில், அந்தக் கொடிய விஷ நாகத்தின் பெயரை ஏன் சொல்லுகிறீர்கள்?"

"நந்தினியை உள்ளத்தில் நஞ்சுடைய பாம்பு என்று நான் வெறுத்த காலம் உண்டு. இப்போது அவளை நினைக்கும் போது எனக்கு அவள் பேரில் இரக்கந்தான் உண்டாகிறது..."

"நந்தினியிடம் தாங்கள் இரக்கங் கொள்வது சோழ குலத்தை நாசமாக்க வரும் ஆல கால விஷத்திடம் இரக்கங் கொள்வதாகும்."

"ஐயா! சோழ வம்சத்தாருக்குக் குல தெய்வமாகி விட்ட மந்தாகினி தேவியின் மகள் அவள்! என் அருமைச் சகோதரன் அருள்மொழியைப் பலமுறை காப்பாற்றிய தேவியின் மகள் அவள்! என் தந்தையைச் சதிகாரனுடைய வேலுக்கு இரையாகாமல் காப்பாற்றித் தன்னுடைய உயிரைப் பலி கொடுத்த மாதரசியின் மகள் நந்தினி...!

"ஆனால் அந்தச் சதிகாரனுடைய வேலை எறியத் தூண்டியவள் அவள்! ஆதித்த கரிகாலருக்கு யமனாக வந்தவள் அவள்! வீராதி வீரராகிய பெரிய பழுவேட்டரையரின் மதியை மயக்கிப் பொம்மைபோல் ஆட்டி வைத்தவள்..."

"பெரிய பழுவேட்டரையரின் மதியை மட்டுந்தானா மயக்கினாள்? பார்த்திபேந்திர பல்லவன், கந்தமாறன் முதலியவர்களையும் தன் கைக்கருவி ஆக்கிக் கொண்டாள்! இவையெல்லாம் தெரிந்திருந்தும் அவளை என்னால் வெறுக்க முடியவில்லை. வீர பாண்டியனுடைய மரணத்துக்குப் பழி வாங்கவே இவ்வளவும் செய்தாள்! எடுத்த காரியத்தை நிறைவேற்றுவதில் வெற்றி அடைந்தாள்! வீர மறக் குலத்துப் பெண்! அவள் இப்படியெல்லாம் பயங்கரமான செயல்களில் இறங்குவதற்கு நானும் காரணமாயிருந்தேன் என்பதை நினைத்தால் வருத்தமாயிருக்கிறது. அவளுடைய குழந்தைப் பிராயத்தில் பழையாறையிலிருந்து விரட்டியடித்தோம்..."

"நல்ல காரியமே செய்தீர்கள். தேவி! தங்களுடைய நெஞ்சிரக்கத்தின் மிகுதியால் அவள் சோழ குலப் பகைவனுடைய மகள் என்பதை மறந்துவிட வேண்டாம். வீர பாண்டியனுடைய மகன் சோழர் வீட்டில் வளர்ந்து அதனால் விளைந்த அனர்த்தம் போதாதா? வீர பாண்டியனுடைய மகளும் இங்கே வளர்ந்து ஆதித்த கரிகாலரைத் திருமணம் புரிந்து கொள்ள நேர்ந்திருந்தால்..."

"மிக்க நன்மையாக முடிந்திருக்கும். இந்த இரண்டு பெருங் குலங்களின் பகைமை தீர்ந்து இரு குலமும் ஒரு குலமாகியிருக்கும். ஆனால் அந்தச் செய்தி உண்மையாயிருக்குமா?"

"எதைக் கேட்கிறீர்கள், தேவி!"

"நந்தினி வீர பாண்டியனின் மகள் என்பது உண்மையாயிருக்குமா?"

"நந்தினி அவ்வாறு ஆதித்த கரிகாலரிடம் கூறியதை என் காதினால் நானே கேட்டேன். பெரிய பழுவேட்டரையரும் கேட்டார். அதுதான் பெரிய பழுவேட்டரையரின் மனத்தை அடியோடு மாற்றி அவரை ரௌத்ராகாரம் கொள்ளச் செய்தது. அந்தக் கொடிய வார்த்தைதான் இளவரசர் ஆதித்த கரிகாலரின் உயிருக்கும் யமனாக முடிந்தது!"

"சிறிது யோசியுங்கள்! கரிகாலன் மீது பழி முடிப்பதற்காகவே அவள் அவ்விதம் சொல்லியிருக்கலாம் அல்லவா? வீர பாண்டியனைக் கரிகாலன் கோபத்திலிருந்து காப்பாற்ற விரும்பியபோது அவளே வேறு விதமாகக் கூறியிருக்கிறாள். பெற்ற தகப்பனைக் குறித்துக் 'காதலன்' என்று எந்தப் பெண்ணாவது தன் வாயினால் சொல்லியிருப்பாளா?"

"தேவி! கரிகாலர் அப்போது வெறி கொண்டவராயிருந்தார். அவள் என்ன சொன்னாளோ, இவர் என்னவென்று பொருள் செய்து கொண்டாரோ, யாருக்குத் தெரியும்? கரிகாலர் சொல்லியது தானே? அவரே பின்னால் நந்தினி 'என் தகப்பன் வீர பாண்டியன்' என்று சொன்னபோது நம்பிவிட்டாரே? மேலும் வீர பாண்டியன் இறந்த பிறகே அவளுக்கு இது தெரிந்திருக்கலாம். தன் பிறப்பைக் குறித்த உண்மையை அறிவதற்காக நந்தினி என்னென்ன பிரயத்தனங்கள் செய்தாள் என்பது தங்களுக்குத் தெரியுமே? நள்ளிரவில் அவளுடைய அன்னையின் ஆவியைப் போல் நடித்துச் சுந்தர சோழரைப் பைத்தியம் பிடிக்க அடிக்கவில்லையா? அதைத் தங்கள் தோழி பார்த்து மூர்ச்சையடைந்து விழவில்லையா...?"

"பாதாளச் சிறையில் மூன்று வருஷமாக அடைபட்டிருந்த தங்களுடன் விடுதலை அடைந்த பைத்தியக்காரனை ஆழ்வார்க்கடியான் பயமுறுத்திக் கேட்டபோது அவன் சொன்னதும் தங்களுக்குத் தெரிந்திருக்கும்..."

"தெரியாமலென்ன? நந்தினிக்கும் அவள் சகோதரனுக்கும் தானே தகப்பன் என்று அவன் கூறினான்..."

"அதுவே உண்மையாகவும் இருக்கலாம் அல்லவா?"

"அப்படியானால், சில சமயம் பொய்யும் மிக்க வலிமையுடையதாகிறது. அரண்மனைக்குள்ளேயே வளர்ந்து சண்டையென்றால் பயந்து கொண்டிருந்த பழைய மதுராந்தகத் தேவர் தாம் வீர பாண்டியனுடைய மகன் என்று அறிந்ததும் எத்தகைய வீர புருஷர் ஆகிவிட்டார் என்பதைத் தாங்கள் பார்த்திருந்தால் பிரமித்துப் போயிருப்பீர்கள். ஒரு முறை சின்னப் பழுவேட்டரையர் தமது

வயிரக் கரத்தால் என் தோளைப் பற்றினார். அதை நினைத்தால் இன்னமும் அவர் பிடித்த இடத்தில் எனக்கு வலியுண்டாகிறது. அத்தகைய மகா வீரருடன் நாமெல்லாரும் 'கோழை' என்று எண்ணிய மதுராந்தகன் சரி சமமாக வாட்போர் இட்ட காட்சியை என்றும் நான் மறக்க முடியாது."

"அதைக் குறித்தே நானும் தங்கள் வார்த்தையில் சந்தேகம் உண்டாகிறது என்று சொன்னேன்."

"நம்புவதற்கு அரிதான சம்பவந்தான். நந்தினியின் மூடு பல்லக்கில் பிரயாணம் செய்துகொண்டிருந்தவனும், பழுவேட்டரையர்களின் பெயரைச் சொன்னாலே நடுநடுங்கியவனுமான நாம் அறிந்த மதுராந்தகன் சின்னப் பழுவேட்டரையருடன் வாட் போர் செய்யத் துணிவான் என்று யார் நம்ப முடியும்? ஆயினும் அது உண்மையில் நடந்தது என்பதை ஆழ்வார்க்கடியான் திரும்பி வந்து தங்களுக்குக் கூறுவான்."

"ஐயா! தாங்கள் நந்தினி தேவியைப் பார்க்க முடியவில்லையா?"

"அந்தப் பெண் உருக்கொண்ட ராட்சஸியை நான் ஏன் பார்க்க வேண்டும்?"

"நந்தினியைப் பற்றி இனி அவ்விதம் சொல்ல வேண்டாம். என்றைக்காவது ஒரு நாள் நானே அவளைச் சந்திப்பேன். உண்மையில் அவளுடைய தந்தை யார் என்னும் இரகசியத்தை அறிவேன். ஆனால் ஒன்று தெரிந்துகொள்ளுங்கள். நந்தினியைப் பற்றி என்னிடம் எதுவும் தவறாகக் கூற வேண்டாம். அவளுடைய தகப்பனார் யாராயிருந்தாலும், அவளுடைய அன்னை யார் என்பதில் சந்தேகமில்லையல்லவா? அவளிடம் நான் அன்பு கொள்வதற்கு அது ஒன்றே போதும். அதற்கு மேலே இன்னொரு முக்கிய காரணமும் இருக்கிறது..."

"அது என்ன காரணம்?"

"நந்தினி தங்களிடம் பிரியம் கொண்டிருந்தாள். அவளுடைய முத்திரை மோதிரத்தைத் தங்களிடம் கொடுத்தாள். தஞ்சைக் கோட்டையிலிருந்து தப்பிச் செல்வதற்கு உதவி செய்தாள். கொள்ளிடக் கரைக் காட்டில் ரவிதாஸன் கூட்டத்தாரிடம் தாங்கள் சிக்கிக் கொண்டிருந்தபோது மறுபடியும் தங்கள் உயிரைக் காப்பாற்றினாள்..."

"கடைசியாக, ஆதித்த கரிகாலரைக் கொன்ற பயங்கரமான பழியை என் பேரில் சுமத்தினாள். அதற்காகவே அத்தனை சூழ்ச்சிகளும் செய்தாள்!"

"ஏன் அப்படிச் செய்தாள் என்று தங்களுக்குத் தெரியவில்லையா?"

"பாம்பு ஏன் கடிக்கிறது என்பதற்குக் காரணம் சொல்ல வேண்டுமா? சிறுத்தை ஏன் பாய்கிறது என்பதற்குக் காரணம் கூற வேண்டுமா?"

"நந்தினி பிறக்கும்போதே பாம்பாகவோ, சிறுத்தையாகவோ பிறக்கவில்லை. நாங்கள்தான் அவளை அப்படிச் செய்துவிட்டோம். சந்தர்ப்பங்கள் அவ்விதம் சதி செய்து விட்டன. தாங்களும் அதற்குக் காரணமாயிருந்தீர்கள்."

"ஐயையோ! என் பேரில் ஏன் வீண் பழி? நான் அவளுக்கு அப்படி என்ன தீங்கு செய்தேன்?"

"தாங்கள் அவளுக்கு ஒரு தீங்கும் செய்யவில்லை; அவள்தான் தங்களிடம் அன்பு கொண்டிருந்தாள்."

"தெய்வமே!"

"புருஷர்கள் சில காரியங்களில் கண்ணிருந்தும் குருடர்களாயிருப்பார்கள் போலிருக்கிறது. ஐயா! இதைக் கேளுங்கள்! நந்தினியின் உள்ளம் தங்களுக்குத் தெரியவில்லை? நான் நன்றாகத் தெரிந்து கொண்டேன். அந்தத் துர்ப்பாக்கியசாலி உண்மையில் வீர பாண்டியனிடம் அன்பு கொண்டிருக்கவில்லை; பெரிய பழுவேட்டரையரிடம் அன்பு கொண்டிருக்கவில்லை; ஆதித்த கரிகாலனிடம் அவளுக்கு உண்மையான நேசம் கிடையாது. அவர்களிடம் அன்பு கொண்டதாக நடித்ததெல்லாம் அவள் அரசு பீடத்தில் அமர்வதற்காகத்தான்!"

"இதை நானும் அறிவேன், தேவி! அவளுடைய கிராதக நெஞ்சில் அன்புக்குச் சிறிதும் இடமே இல்லை!"

"அது தவறு; தங்களைக் கண்டபோது தான் அவள் உள்ளத்தில் உண்மையான அன்பு உதயமாயிற்று. தங்கள் அபிமானத்தைக் கவர்வதற்காக அவள் எதுவும்

செய்யச் சித்தமாயிருந்தாள்..."

"என் பேரில் இளவரசரைக் கொன்ற பழியைச் சுமத்தவும் சித்தமாயிருந்தாள்."

"அது எதற்காக? தங்களை என்றென்னைக்கும் சோழ குலத்தாருடன் நட்பும் உறவும் கொள்ளாமலிருக்கச் செய்வதற்குத்தான்..."

"அதற்காக என்னைத் தஞ்சாவூர் இராஜவீதிகளின் நாற்சந்தியில் கழுவில் ஏற்றச் செய்வதற்கு ஏற்பாடு செய்துவிட்டாள். அதைவிட அவளுடைய கையில் பிடித்திருந்த கத்தியினாலேயே என்னைக் கொன்றிருக்கலாமே?"

"தங்களைக் கொல்ல எண்ணியிருந்தால் அவ்விதம் செய்திருக்கலாம். அல்லது ரவிதாஸன் கூட்டத்தைக் கொண்டு தங்களைக் கொல்லச் செய்திருக்கலாம். பெரிய பழுவேட்டரையர் குற்றத்தைத் தன் பேரில் போட்டுக் கொண்டிராவிட்டால், பொன்னியின் செல்வர் குறுக்கிட்டிராவிட்டால், தங்களை உண்மையிலேயே கழுவில் ஏற்றக் கட்டளை பிறப்பித்திருந்தால், ரவிதாஸன் கூட்டத்தார் வந்து தங்களை விடுவித்துக் கொண்டு போயிருப்பார்கள். தாங்களும் ஒரு வேளை இன்று ஆனைமலையின் மேல் சேர்ந்திருக்கும் கூட்டத்துடன் கலந்து கொண்டிருந்தாலும் இருப்பீர்கள்."

"அத்தகைய விபத்து நேராமல் கடவுள்தான் என்னைக் காப்பாற்றினார்."

"சோழ நாட்டையும் காப்பாற்றினார். தங்களைப் போன்ற ஒரு வீரரின் சேவை சோழ சாம்ராஜ்யத்துக்கு நஷ்டமாகாமல் காப்பாற்றினார்..."

"தேவி! சோழ சாம்ராஜ்யம் மகத்தானது. ஐந்நூறு லட்சம் வீரர்களின் வாள்களும் வேல்களும் இந்த ராஜ்யத்தைக் கண் போலக் காத்து நிற்கின்றன.



நான் ஒருவன் இதன் உதவிக்கு அவ்வளவு அவசியமாயிருக்க முடியாது..."

"சோழ நாட்டை நாலாபுறமும் புதிய அபாயங்கள் சூழ்ந்து கொண்டிருப்பதாகத் தாங்களே சொன்னீர்கள்."

"அது உண்மைதான், தேவி! ரவிதாஸனுடைய சூழ்ச்சித் திறன் அதிசயமானது. பாண்டிய நாட்டுச் சிங்காதனத்துக்கு உரிமையாளர் இரண்டு பேரை உண்டாக்கி விட்டான். முன்னே ஒரு சிறு குழந்தைக்குக் கொள்ளிடக் கரைக் காட்டில் பாண்டிய மன்னன் என்று பட்டம் சூட்டினான். அந்தப் பராங்குசன் நெடுஞ்செழியனுடன் இப்போது அமரபுஜங்கன் நெடுஞ்செழியன் ஒருவனும் சேர்ந்துவிட்டான்...."

"அது யார் அமரபுஜங்கன் நெடுஞ்செழியன்?"

"நம் பழைய மதுராந்தகரின் பெயர் இப்போது அதுதான். பாண்டிய அரசுக்கு உரிமை கொண்டாடுவோன், 'மதுராந்தகன்' என்ற பெயருடன் இருக்க முடியாதல்லவா? சின்னப் பழுவேட்டரையர் அருவிப் பள்ளத்தில் விழுந்ததும், மலை உச்சியில் பாண்டியன் அமரபுஜங்கன் நெடுஞ்செழியன் வாழ்க!' என்று எழுந்த கோஷம் அந்தப் பெரிய அருவி விழும் சத்தத்தையும் அடக்கிக் கொண்டு எழுந்தது."

"இம்மாதிரி இரண்டு உரிமையாளரை ஏற்படுத்தி வைப்பதில் ரவிதாஸனின் கூட்டத்தாருக்கு என்ன லாபம்?"

"ஒருவனுக்கு ஏதாவது நேர்ந்தால் இன்னொருவன் கையில் இருக்கட்டும் என்றுதான். ஒருவனைக் கொண்டு இலங்கை அரசன் மகிந்தன் உதவியைப் பெறவும், இன்னொருவனைக் கொண்டு சேர மன்னனின் கூட்டுறவைப் பெறவும் அக்கூட்டத்தார் முயற்சி செய்வார்கள்..."

"ஐயா! என் சகோதரனும் தாங்களும் சேர்ந்து சதி செய்து உத்தமச் சோழரின் தலையில் மணி மகுடத்தைச் சூட்டினீர்கள். உத்தமச் சோழருக்கு நீங்கள் பெரிய நன்மை செய்துவிட்டதாக நான் கருதவில்லை. தற்சமயம் சோழ சாம்ராஜ்யத்தின் பாரத்தை வகிப்பது அவ்வளவு எளிய காரியமாகத் தோன்றவில்லை..."

"சோழ சாம்ராஜ்ய பாரத்தை வகிப்பது தற்சமயம் மிகப் பிரயாசையான காரியந்தான். ஆனால் அதை உத்தமச் சோழரா தாங்கப் போகிறார்? அவர் தமது அன்னைக்கு உதவியாக ஆலயத்திருப்பணியில் ஈடுபட்டுக் காலங் கழிக்கப் போகிறார். சோழ சாம்ராஜ்யத்தைத் தாங்கப் போகிறவரும் பாதுகாக்கப் போகிறவரும் தங்கள் தம்பி அருள்மொழித் தேவர்தான்!"

"அது உண்மையே. அருள்மொழிக்கு அதற்கு ஆற்றலும் உண்டு. ஆனாலும் அவன் பிராயத்தில் சிறியவன்; அநுபவம் இல்லாதவன். சோழ சாம்ராஜ்யத்தைத் தாங்கி வந்த இரு பெரும் வயிரத் தூண்கள் – பழுவூர் அரசர்கள் – போய் விட்டார்கள். பெரியவர் நம்மை விட்டே சென்று விட்டார்! தாங்கள் சொல்வதைப் பார்த்தால், சின்னப் பழுவேட்டரையர் பிழைத்து வருவதும் துர்லபம் என்று தோன்றுகிறது..."

"அவர் பிழைத்து வந்தாலும் இராஜ்யத்துக்குப் பயன்பட மாட்டார். தமது மகளையும் மருமகனையும் நினைத்து நொந்து கொண்டிருப்பார்..."

"சம்புவரையரும் அதே நிலையை அடைந்துவிட்டார். சில தினங்களில் அவருடைய உள்ளமும் உடலும் சோர்ந்து பலவீனமடைந்து விட்டன. மலையமான் முன்னமே முதுகிழவர். தமது பேரர்களில் ஒருவன் இறந்து இன்னொருவனுக்குப் பட்டமில்லை என்று ஆனதும் அவரும் அடியோடு தளர்ந்து போனார். கொடும்பாளூர்ப் பெரிய வேளாரின் மனம் ஒரு நிலையிலில்லை. அருள்மொழி முடிசூட்டிக் கொள்ளப் போவதாகச் சொல்லிக் கொண்டிருந்து கடைசி நிமிஷத்தில் தம்மை ஏமாற்றி விட்டதை அவரால் மன்னிக்க முடியவில்லை. வானதியை அருள்மொழி மணந்ததில்கூட அவருக்குத் திருப்தி ஏற்படவில்லை. இனிமேல் இராஜ்ய விவகாரங்களில் தாம் தலையிடுவதில்லையென்றும் கொடும்பாளூரில் ஆலயத்திருப்பணி செய்யப் போவதாகவும் கூறிவிட்டுப் போய்விட்டார். கடம்பூர் மாளிகையில் நடந்த சதிக் கூட்டத்தில் கலந்து கொண்ட மற்றச் சிற்றரசர்கள் அனைவரும் அவர்கள் ஒன்று

நினைக்கக் காரியம் வேறாக முடிந்தது பற்றி வெட்கி மனங் குன்றிப் போனார்கள். ஐயா! அருள்மொழிக்கு உதவி செய்யத் துணைவர்கள் வேண்டும். வாள் வலி – தோள் வலியுடன் அறிவுத் திறமையும் வாய்ந்த உற்ற நண்பர்கள் அவனுக்கு வேண்டும்...!"

"நல்லவேளையாகப் பல்லவப் பார்த்திபேந்திரர் இருக்கிறார்!" என்று சொன்னான் வந்தியத்தேவன்.

"அவருடைய துணை வலியும் அருள்மொழிக்குக் கிடைக்கும் என்று சொல்வதிற்கில்லை. அவரை ஊரை விட்டு அனுப்பி விட்டு உத்தமச் சோழருக்கு முடி சூட்டியதில் அவருக்குக் கோபம். அதைக் காட்டிலும், அருள்மொழி தன் அந்தரங்கத் தோழராகத் தங்களைப் பாவிப்பது அவருக்குப் பிடிக்கவில்லை..."

"அவருடைய கோபத்துக்கு நியாயம் இருக்கிறது. சோழ குலத்துக்கு அவர் எவ்வளவோ தொண்டு செய்திருக்கிறார். நானோ புதிதாக வந்தவன். அவரிடம் நான் வேணுமானால் மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன்."

குந்தவை சிறிது யோசித்துவிட்டு, "அது எரிகிற தீயில் எண்ணெய் விட்டது போலாகும்" என்று கூறினாள்.

"பார்த்திபேந்திரர் மகா வீரர். அவரைச் சமாதானப் படுத்துவதற்கு வேறு வழி இல்லையா?" என்றான் வந்தியத்தேவன்.

"அவரே அந்த வழியைக் குறிப்பிட்டார். என் தந்தையிடமும் தமது விருப்பத்தைத் தெரிவித்தார்..."

"பார்த்திபேந்திர பல்லவருடைய விருப்பத்தை நிறைவேற்றச் சக்கரவர்த்தி மறுத்திருக்க மாட்டார்..."

"ஆனால் அது சக்கரவர்த்தியைப் பொறுத்தல்ல. அவருடைய மகளைப் பொறுத்தது. அவருடைய மகள் அதை ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டாள்! ஆம், ஐயா! சிவாலயத்துக்கு மலர் எடுத்துக் கொடுத்துக் கொண்டிருந்தவர் திடீரென்று சிங்காதனம் ஏறி மணி மகுடம் சூடிக் கொண்டதைப் பார்த்துப் பல்லவகுலத் தோன்றலுக்குப் பொறுக்கவில்லை. கடலில் படகு விட்டுக் கொண்டிருந்தவள் சிங்காதனம் ஏறியதும் அவருக்குச் சகிக்கவில்லை. பழைய பல்லவ நாட்டுக்குத் தன்னைச் சுதந்திர மன்னனாக்கிச் சிலா சாஸனம் எழுதும் உரிமை அளிக்க வேண்டும் என்று கேட்டார்..."

"ஆகா! அது எப்படிக் கொடுக்க முடியும்? சோழ ராஜ்யத்தைச் சின்னாபின்னப் படுத்துவதாகுமல்லவா?"

"அந்த உரிமை கொடுக்க என் தந்தை சம்மதித்துவிட்டார். அத்துடன் பல்லவ குமாரர் நிற்கவில்லை. முன்னொரு சமயம் பல்லவ அரச குமாரி சோழ குமாரன் ஒருவனை மணந்து கொண்டாளாம். அதற்கு ஈடாகச் சுந்தர சோழரின் குமாரியைத் தமக்குத் திருமணம் செய்து கொடுக்க வேண்டும் என்று கோரினார்!"

இதைக் கேட்டதும் வந்தியத்தேவனின் முகம் மிக்க மனவேதனையைக் காட்டியது. அதை மறைத்துக் கொள்வதற்காக அவன் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டான்.

குந்தவையின் முகம் புன்சிரிப்பால் மலர்ந்தது. வேண்டுமென்றே அவள் மேலே ஒன்றும் சொல்லாமலிருந்தாள்.

சற்றுப் பொறுத்து வந்தியத்தேவன் "அதற்குச் சக்கரவர்த்தி என்ன விடை கூறினார்?" என்றான்.

"அதற்குச் சக்கரவர்த்தி எப்படிப் பதில் கூற முடியும்? அது அவர் மகள் விருப்பத்தைப் பொறுத்ததல்லவா? சக்கரவர்த்தி தம் மகளைக் கேட்டார்..."

"சக்கரவர்த்தித் திருமகள் அதற்கு என்ன பதில் கூறினார்?"

"பார்த்திபேந்திரனைக் கைப்பிடிக்கச் சம்மதமில்லை என்று சொல்லி விட்டார்!"

"ஏன்? ஏன்?" என்று வந்தியத்தேவன் கேட்ட குரலில் அடங்காத ஆர்வம் ததும்பியது.

"சக்கரவர்த்தித் திருமகள் காரணம் எதற்காகச் சொல்ல வேணும்? இருந்தாலும், ஒரு காரணம் கூறினாள். தெய்வப் பொன்னி நதி பாயும் புனல் நாட்டை

விட்டு, வெளிநாட்டுக்குப் போக விருப்பமில்லை என்று கூறினாள்.

"அது ஒன்றுதானா காரணம்?"

"வேறு காரணமும் இருக்கலாம். அதில் சிரத்தை உள்ளவர்களுக்கு அல்லவா சொல்ல வேணும்? ஏனோ தானோ என்று கேட்பவர்களிடம் எதற்காகச் சொல்ல வேண்டும்?" என்றாள் குந்தவை.

"தேவி! அளவில்லாத சிரத்தையுடனும் ஆர்வத்துடனும் கேட்கிறேன்."

"அவ்வளவு சிரத்தையும் ஆர்வமும் உள்ளவர்கள் தாங்களாகவே அதைத் தெரிந்து கொள்வார்கள். அவர்களுக்குச் சொல்லித் தெரிய வேண்டியதில்லை."

குந்தவையின் முகத்தை அப்போது தான் முதன் முதலில் பார்ப்பவன் போல் வந்தியத்தேவன் பார்த்தான். மின்னலை மின்னல் தாக்கியது. அலையோடு அலை மோதியது. சொர்க்கம் பூமிக்கு வந்தது. மண்ணுலகம் விண்ணுலகம் ஆயிற்று.

விழிக்கோணத்தில் விஷமப் புன்சிரிப்புடன் குந்தவை "ஒரு பெண்ணின் மனத்தில் உள்ளதை அறிய முடியாமல் அவள் வாயினால் சொல்ல வேண்டும் என்று எதிர்பார்க்கும் ஆண் மகனைப் பற்றி என்னவென்று நினைப்பது? சோழ சாம்ராஜ்யத்தின் பகைவர்களுடைய தந்திரச் சூழ்ச்சிகளையெல்லாம் அவர் அறிந்து கொள்ள முடியும் என்று எவ்விதம் எதிர்பார்ப்பது?" என்றாள்.

வந்தியத்தேவன் சற்று நேரம் மேலும் கீழும் பார்த்துவிட்டு, "தேவி! பழம் பெரும் பல்லவ குலத்தில் வந்த பார்த்திபேந்திரன் கோரிய அதே கோரிக்கையைத் தங்குவதற்கு ஒரு குடிசை நிழலும் இல்லாத அநாதை வாலிபன் ஒருவன் வெளியிட்டால், அதைப் பற்றிச் சக்கரவர்த்தி என்ன நினைப்பார்?" என்றான்.

"அவர் என்ன நினைத்தாலும், தம் மகளுடைய விருப்பம் என்னவென்று கேட்பார்; அதன்படியே பதில் சொல்லுவார்."

"தேவி! சக்கரவர்த்தியின் திருக்குமாரி என்ன பதில் சொல்லுவாள்?"

"இப்படிச் சுற்றி வளைத்துக் கேட்டுக் கஷ்டப்படுவானேன்? சக்கரவர்த்தியிடம் நேரில் கேட்டுப் பார்த்து விடலாமே? பதில் உடனே தெரிந்து விடுகிறது!" என்றாள் குந்தவை.

"அது எப்படிக் கேட்க முடியும்? ஈழம் முதல் வேங்கி வரையில் ஒரு குடை நிழலில் ஆளும் மன்னர் மன்னரின் திருமகளைத் தனக்கு மணம் செய்து கொடுக்கும்படி ஊரும் பேருமில்லாத வாலிபன் – உற்றார் உறவினர் அற்ற அநாதைச் சிறுவன் – எப்படித் துணிந்து கேட்க முடியும்?" என்றான் வல்லவரையன்.

"வாணர் குலத்தில் பிறந்த வீரருக்கு இவ்வளவு தன்னடக்கம் எங்கிருந்து வந்தது? முதன் முதலில் தாங்கள் என்னைப் பார்த்தபோது தங்கள் குலப் பெருமை பற்றிக் கூறியதை நான் மறந்து விடவில்லை. சேர சோழ பாண்டியர்களின் அரண்மனைகளில் ஆண் குழந்தைகள் பிறந்தால், அக் குழந்தையின் மார்பு அகலமாயிருந்தால், மாவலிவாணனின் பெயர்கள் எல்லாவற்றையும் 'அந்தக் குழந்தையின் மார்பில் எழுதலாம் என்று அரசிமார்கள் களிப்படைவார்கள் என்றீர்கள். வாணர் குல மன்னரின் அரண்மனை வாசலில் மூவேந்தர்களும் காத்திருப்பார்கள் என்றும், புலவர்கள் அம் மன்னரிடம் பெற்றுப் போகும் பரிசுகளைப் பார்த்து, 'இது என் குதிரை! இது என் யானை. இது என் கிரீடம், இது என் குடை!' என்று அவர்கள் பேசிக் கொள்வார்கள் என்றும் சொன்னீர்கள். அவ்வாறு பெருமையடித்துக் கொண்டவர் இவ்வளவு அடக்கம் கொண்டவரானது ஏன்?"

"தங்கள் தம்பியின் சிநேகந்தான் அதற்குக் காரணம். பழைய குலப் பெருமையைக் கூறிச் சிறப்படையப் பார்ப்பதை அருள்மொழிவர்மர் வெறுக்கிறார். சூரிய குலத்தில் தோன்றியவர்கள் என்றும், கரிகால வளவன் வம்சத்தினர் என்றும், விஜயாலயச் சோழரின் பேரரின் பேரர் என்றும் பெருமையடித்துக் கொள்வதை நினைத்து அவர் சிரிக்கிறார். ஒருநாள் அவர் என்னிடம் சொன்னார் தெரியுமா? 'என் குலத்து முன்னோர்கள் இதுவரையில் செப்புப் பட்டயமும்

சிலாசாஸனமும் எழுதுவிக்கும் போதெல்லாம் சூரிய வம்சத்திலிருந்தும் மனுநீதிச் சோழனிலிருந்தும் சிபிச் சக்கரவர்த்தியிலிருந்து தொடங்கி எழுதச் செய்து வந்திருக்கிறார்கள். நான் அரச பீடம் ஏறினால் இந்த வழக்கத்தை மாற்றி விடுவேன். நான் எழுதுவிக்கும் சிலா சாஸனங்களிலும் செப்புப் பட்டயங்களிலும் நான் சாதனை செய்த காரியங்களை மட்டும் பொறிக்கச் செய்வேன். அப்போது அச்சாஸனங்கள் புனைந்துரைகளோ என்ற ஐயத்துக்கு இடந்தராத மெய்க்கீர்த்தியாக விளங்கும்!' என்றார். தேவி! நானும் அவருடைய கருத்தை ஒப்புக்கொண்டேன். பழைய குலப் பெருமை பேசுவதை விட்டுவிட உறுதி கொண்டேன். தங்கள் தந்தையாரிடம் சென்று என் பழைய குலப் பெருமைகளைக் கூறித் தங்கள் கரம் பிடிக்கும் பாக்கியத்தைக் கோர மாட்டேன். அருள்மொழி வர்மரும் நானும் இந்தச் சோழ சாம்ராஜ்யத்தின் மேன்மைக்கு எங்கள் ஆயுளை அர்ப்பணித்திருக்கிறோம். வடக்கே விந்திய பர்வதத்திலும் தெற்கே திரிகோண மலையிலும் மேற்கே லட்சத் தீவிலும் கிழக்கே கடல்களுக்கு அப்பாலுள்ள சாவகத்திலும் கடாரத்திலும் காம்போஜத்திலும் புலிக்கொடியைப் பறக்கச் செய்யத் தீர்மானித்திருக்கிறோம். நாங்கள் மேற்கொண்ட காரியங்களை ஓரளவேனும் சாதித்த பிறகு சுந்தரசோழ சக்கரவர்த்தியிடம் சென்று ''இதோ நான் அணிந்து வந்திருக்கும் வெற்றி மாலைகளைத் தங்கள் திருக்குமாரியின் கழுத்தில் சூட அனுமதி கொடுங்கள்' என்று விண்ணப்பித்துக் கொள்வேன். இலங்கைக்குச் சென்று மகிந்தனை வென்று பாண்டியன் மகுடத்தையும் இந்திரன் ஹாரத்தையும் கொண்டு வந்து இளவரசியின் முன்னால் வைப்பேன். வைத்துவிட்டு, 'தங்கள் திருக்கரத்தைப் பிடிப்பதற்கு நான் தகுதியுள்ளவனானால் அந்த பாக்கியத்தை எனக்கு அளியுங்கள்!' என்று பெருமையோடு கேட்பேன்...''

''ஐயா! தங்கள் தீர்மானத்தை நான் பாராட்டுகிறேன். தங்களுக்கும் பார்த்திபேந்திரர் மனப் போக்குக்கும் உள்ள வேற்றுமையைக் கண்டு வியந்து மகிழ்கிறேன். ஆனால் ஆண் பிள்ளையாகிய தாங்கள்தான் இவ்வாறெல்லாம் செய்யலாம். வெற்றிகளையும் சாதனைகளையும் கொண்டு வந்து சமர்ப்பிக்கலாம். அவற்றைக் குறித்துப் பெருமையடையலாம். பெண்ணாய்ப் பிறந்தவர்களுக்கு இவை ஒன்றும் சாத்தியமில்லை. அவர்களுக்குத் தேவையும் இல்லை. அரச குலத்துப் பெண்களுக்குச் சுயம்வரம் நடத்தும் வழக்கம் நம் தேசத்தில் வெகு காலம் இருந்து வந்தது. இப்போது ஏனோ மறைந்துவிட்டது. ஐயா! என் தந்தை எனக்கு ஒரு சுயம்வரம் நடத்தி அதற்கு இந்தப் பரந்த பாரத தேசத்திலுள்ள அத்தனை அரசகுமாரர்களையும் அழைத்திருந்தாரானால், என் கையிலுள்ள மாலையை அவர்கள் யாருடைய கழுத்திலும் போட்டிருக்க மாட்டேன். தஞ்சைக் கோட்டையிலிருந்து தப்பி ஓடி வந்து பழையாறை ஆலய பட்டரின் துணையுடன் ஓடமேறி ஓடையைக் கடந்து அரண்மனைத் தோட்டத்துக்குள் புகுந்து என்னைத் தனிமையில் சந்தித்த அநாதை வாலிபர், அத்தனை அரச குமாரர்களுக்கு மத்தியில் எங்கேயாவது இருக்கிறாரா என்று தேடுவேன். அவருடைய கழுத்திலேதான் என் கையிலுள்ள சுயம்வர மாலையைப் போடுவேன்!''

வந்தியத் தேவனுடைய செவிகளில் ஆயிரம் கிண்கிணிகள் ஒலித்தன. வானத்திலிருந்து பொன் மழை பொழிந்தது. தளிர்களும் மலர்களும் குலுங்கிய மரங்களின் உச்சியில் வர்ணப்பட்டுப் பூச்சிகள் இறகுகளை விரித்து நடனம் புரிந்தன.

''நான் கூறியது தங்களுக்குப் பிடிக்கவில்லையா?'' என்றாள் குந்தவை.

''நன்றாய்க் கேட்டீர்கள். நான் விழித்திருக்கிறேனா, என் காதில் விழுந்ததெல்லாம் உண்மையா, அல்லது கனவு காண்கிறேனா என்று சோதித்தேன். கனவு காணவில்லை, உண்மைதான் என்று தெரிந்துகொண்டேன்! பாற்கடலைக் கடைந்து தேவர்கள் அமுதத்தை

அடைந்தார்கள். அதை அருந்தி அமரரானார்கள் என்று கேட்டிருக்கிறேன். தாங்கள் இப்போது கூறிய மொழிகள் என்னை அமுதமுண்டவனாகச் செய்துவிட்டன; எனக்குப் புத்துயிர் அளித்துவிட்டன!''

குந்தவை அப்போது "ஐயா! ஒன்று மாத்திரம் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் போகுமிடங்களில் எத்தனையோ அபாயங்களுக்கு உட்படுவீர்கள். எவ்வளவோ போர்க்களங்களில் போர் செய்வீர்கள். பகைவர்கள் வஞ்சகச் சூழ்ச்சியால் தங்களை மேலுலகம் அனுப்ப முயற்சி செய்வார்கள். அப்படி ஏதாவது தங்கள் உயிருக்கு அபாயம் நேர்ந்து விட்டால், இந்தத் தொல் பெருமை வாய்ந்த சோழ குலத்தில் பிறந்த ஓர் இளவரசி கலியாணமே ஆவதற்கு முன்னாலேயே கைம்பெண் ஆவாள்! இதை மறந்து விடாதீர்கள்!'' என்றாள்.

"தேவி! அப்படி ஒன்றும் நிச்சயமாக நேராது. நான்தான் அமுதமுண்டு அமரனாகி விட்டேனே! எனக்கு இனி மரணம் இல்லை! கன இருள் சூழ்ந்த வனாந்தரங்களில் காற்றும் மழையும் கடுகிப் பெய்து நான் திசை தெரியாமல் தடுமாறும் சமயங்களில், தாங்கள் அக்காட்டு மத்தியில் உள்ள வீட்டில் பல கணிக்கு அருகில் விளக்கேற்றி வைத்துக் கொண்டு எனக்காகக் காத்திருப்பீர்கள். அந்த நினைவு எனக்குத் தைரியமளித்துக் காற்று மழை கனாந்தகாரத்திலிருந்து தப்புவதற்குத் துணை செய்யும். அலை கடலின் நடுவில் மரக்கலத்தில் ஏறி நாளும் வாரமும் மாதமும் கணக்கும் மறந்து திக்குத் தெரியாமல் மதி மயங்கிக் கதி கலங்கி நிற்கும்போது, ஸப்தரிஷி மண்டலத்தின் அடியில் என்றும் நிலைத்து நின்று சுடர் விட்டு வழி காட்டும் துருவ நட்சத்திரமாகத் தாங்கள் ஒளி வீசுவீர்கள். நான் திசை அறிந்து என் மரக்கலத்தைத் திருப்பிக் கொண்டு வருவேன். கடற்கரை ஓரத்துப் பாறைகளில் மாமலைகள் போன்ற பேரலைகள் தாக்கிக் கடல் கொந்தளித்துக் கொண்டிருக்கும் இரவு நேரங்களில் கலங்கரை விளக்கிலிருந்து வரும் உயிர் காக்கும் ஒளியாகத் தாங்கள் பிரகாசிப்பீர்கள். அந்தப் பிரகாசத்தைக் கொண்டு என் படகு பாறையில் மோதாமல் கரையிலே கொண்டு வந்து சேர்ப்பேன். புல்லும் பூண்டும் முளையாத அகண்டமான பாலைவனப் பிரதேசத்தில் வடவைக் கனல் எனக் கொளுத்தும் வெய்யிலில் அனல் பிழம்பெனச் சுட்டுப் பொசுக்கும் மணலில் நான் தாகத்தினால் நா உலர்ந்து வியர்வைக் கால்கள் வறண்டு தவித்துத் தத்தளிக்கும் நேரங்களில் தென்னை மரங்களும் தேன் கதலிகளும் சூழ்ந்த ஜீவநதி ஊற்றாகத் தாங்கள் எனக்கு உதவுவீர்கள். தேவி! இந்த விரிந்து பரந்த உலகத்தில் நான் எங்கே போனாலும் எத்தனை கஷ்டங்களுக்கு உட்பட்டாலும் ஒருநாள் கட்டாயம் திரும்பி வருவேன். திரும்பி வந்து தங்களைக் கரம் பிடித்து மணந்து கொள்வேன். இந்த என் மனோரதம் நிறைவேறும் வரையில் என்னை யமன் நெருங்க மாட்டான். அமுதமுண்ட அமரனாக இருப்பேன்!''

இவ்விதம் வந்தியத்தேவன் தன் வாழ்க்கையில் என்றும் பேசி அறியாதவாறு பேசிவிட்டு உட்கார்ந்தான். இளையபிராட்டி மெய்மறந்து அவன் முகத்தைப் பார்த்த வண்ணமிருந்தாள். இந்த வார்த்தைகளையெல்லாம் இந்த வீரன் முதல் முறையாகத் தன்னிடம் சொல்லவில்லையென்றும், எத்தனை எத்தனையோ ஆண்டுகளுக்கு முற்பட்ட யுகயுகாந்திரங்களில் எவ்வளவோ தடவை இதே சொற்பிரவாகத்தை இவனிடம் கேட்டிருப்பதாகவும் அவளுக்குத் தோன்றியது. இந்தச் சித்தப் பிரமையின் விசித்திரத்தைப் பற்றி அவள் சிந்தித்துக் கொண்டிருந்தபோது "அக்கா! அக்கா!'' என்ற வானதியின் குரல் கேட்டது.

இருவரும் திரும்பிப் பார்த்தார்கள்.

வானதி விரைந்து அவர்கள் அருகில் வந்து, "அக்கா! இவருக்கு ஓர் அவசர ஓலை வந்திருக்கிறது. மணிமேகலையின் தமையன் கந்தமாறனிடமிருந்து வந்திருக்கிறது!'' என்று சொல்லிக் கொண்டே ஓலையை நீட்டினாள்.

(தொடரும்)





“தருமபுரியிலிருந்து சிறுகூடல்பட்டிக்குச் சுற்றுலா வந்த தமிழாசிரியர்கள் சிலர், கவியரசு கண்ணதாசன் பிறந்த இடம் எதுன்னு கேட்டு அங்கே போய் பார்த்து ‘மண்’ எடுத்துக் கொண்டு போனார்களாம். ‘எதற்கு என்று ஊரார் கேட்டபோது ‘மண்ணை, தண்ணீரில் கலந்து வடிகட்டி. பாலில் கலந்து, எங்கள் குழந்தைகளுக்குக் கொடுக்கப் போகிறோம்... கண்ணதாசன் போல, கவிஞர்களாக வரட்டும்...’ என்று சொன்னார்களாம்! இதைக் கேள்விப்பட்டவுடனேயே எனக்குப் புல்லரிச்சுப் போச்சு.. யார் யாரோ வந்து மண் எடுத்துக் கொண்டு போறாங்க.. அந்தக் குடும்பத்திலே உள்ள நாம் ஏன் அந்தக் கவிஞனுக்கு நினைவுச் சின்னம் ஏற்படுத்தக் கூடாதுன்னு தோன்றியது. நான்கே மாதத்தில் பத்து லட்சம் செலவில் ‘கவியரசு கண்ணதாசன் வாழ்ந்த இல்லம்’ கட்டி முடிச்சுட்டோம்” என்று சந்தோஷமாய்ச் சொன்னார் கவியரசு கண்ணதாசனின் அண்ணன் ஏ.எல். சீனிவாசனின் மருமகள் ஜெயந்தி கண்ணப்பன்.

சிவகங்கை மாவட்டம், பிள்ளையார்ப்பட்டிக்கு அருகில்

# கவிஞன் இல்லம்!

மூன்று கி.மீ. தொலைவில் உள்ள கண்ணதாசன் பிறந்த ஊரான சிறுகூடல்பட்டியில் கவியரசுடைய 75வது பிறந்த நாளன்று 'வாழ்ந்த இல்லம்' திறந்து வைக்கப்பட்டது.

கவியரசு கண்ணதாசனின் முதல் கவிதை எழுதப்பட்ட மலை யரசி அம்மன் கோவிலுக்கு அருகில் அவரது மார்பளவு உருவச் சிலையைத் திரைப்பட இயக்குநர் பாரதிராஜா திறந்து வைத்தார். கவியரசு வாழ்ந்த இல்லத்தில் அவர் பிறந்த போது தூங்கிய கட்டில், மெத்தை, ஆரம்பக் கல்வி பயின்ற பள்ளிக் குறிப்பேடுகள் போன்றவற்றைப் பார்வைக்கு வைத்துள்ளனர்.

ஆரம்ப காலத்தில் அவர் வாழ்ந்தபோது வீட்டின் அமைப்பு எப்படி இருந் தது என்பதை அவர் வாழ்ந்த காலத்தில் வாழ்ந்தவர்களிடம் கேட்டு வடி வமைத்துள்ளனர்.



**மா**லையில் நடந்த விழாவில் பேசிய திரைப்பட இயக்குநர் எஸ்.பி. முத்துராமனும், மதுரை மீனாட்சியம்மன் கோவில் முன் னாள் தக்கார் வி.என். சிதம்பரம் செட்டியாரும் சிறுகூடல் பட்டியில் கவியரசு கண்ணதாசன் பெயரில் தமிழ்க் கல்லூரி ஒன்றை அமைக்க அரசைக் கேட்டுக் கொண்டார்கள்.

"கவியரசின் மகன் என்றாலும் அவர் பிறந்த மண் ணில் ஒரு துளி அளவு கூட நான் உரிமை கொண் டாடமுடியாது. ஆயிரக்கணக்கான பார்வையாளர் களில் ஒருவனாகத்தான் இந்த வீட்டினுள் இன்று சென்றேன். ஏனென்றால் என் தந்தை பத்து வயதிலேயே காரைக்குடிக்கு, சுவீகாரம் சென்றவர். அவரது பங்காளி குடும்பம் பரந்த மனப்பான்மையுடன் இந்த நினைவுச் சின்னத்தை ஏற்படுத்தி யிருப்பது பெருமைக்குரியது" என்று நெகிழ்ச்சியுடன் குறிப்பிட்டார் கவி யரசு கண்ணதாசனின் மகன் கண் மணி சுப்பு.

பட்டிமன்ற நிகழ்ச்சி நடத்த வந்தி ருந்த திண்டுக்கல் லியோனி பேசும் போது "கவியரசு பிறந்த இடத்து மண் எடுத்து நெற்றியில் பூசிக் கொண்டேன், இனிமேலாவது நான் நல்ல தமிழ் பேச வேண்டும் என்பதற்காக" என்று கூறி அவை யின் கைதட்டல்களை அள்ளிச் சென்றார்.

**வி**ழாவிற்கு வந்திருந்த வி.ஐ.பி.களை எல் லாம் அசரவைத்து, பார்வையாளர்களிடையே வி.ஐ.பி. ஆனவர், கண்ணதாசனுடன் ஆறு வய திலிருந்தே உடனிருந்த பள்ளித் தோழர் மாணிக் கம் செட்டியார்.

"இப்போதுள்ள பாடல்கள் நமக்குப் புரிவதும் இல்லை. புரிந்தாலும் அது புண்ணியமாகவும் இல்லை. கவிப்பேரரசு கண்ணதாசனின் பாடல்கள் வாழ்க்கையோடு இணைந்துவிட்டன. கண்ணதாசன் பெருங்கடல்.... சமுத்திரம்... அதில் இறங்கி கை நனைக்கலாமே தவிர ஆழத்தில் மூழ்கி முத்து எடுத்து வரமுடியாது"என்று நெகிழ்ந்தார் பாரதிராஜா.

— **கி. சிங்காரவடிவேல்**



# பருந்துக் குஞ்சா?

திருவள்ளூர் என்.சி. ஸ்ரீதரன்

ஒரு குழந்தை நன்றாகப் படிப்பது என்பது, கடவுள் கொடுத்த வரமா? அல்லது visual பெற்றோர்களிடமிருந்து கிடைக்கப் பெற்ற மரபா? அல்லது எந்தக் குழந்தையையும் நன்றாகப் படிக்க வைக்க முடியுமா?

ஒரு குழந்தை நன்றாகப் படிக்கிறதென்றால், சொல்லிக் கொடுத்து, பாடங்களை மனத்தில் பதிய வைத்த பிறகு, தேர்வில் முறையாக நினைவு கூர்ந்து அதை அப்படியே எழுதுவதால் ஏற்படும் விளைவுதான் இது. மனத்தில் பதியாத ஒரு பாடம் நினைவுக்கு வராது. நினைவுக்கு வராத எந்த ஒரு பாடத்தையும் தேர்வில் எழுத முடியாது. இதுதான் உண்மை. ஒரு பாடத்தை மனத்தில் பதிப்பது எப்படி? ஒரு பீரோவில் சரியான முறையில் துணிகள் மாட்டப்பட்டிருந்தால், எந்தத் துணியை வேண்டுமானாலும் கலைக்காமல், எடுத்துக் கொள்ள முடியுமல்லவா? அதே போன்றுதான் பாடங்களைச் சரியான முறையில் பதிப்பதைப் பொருத்து, நினைவு கூர்வதும் அமையும்.

குழந்தைகளைப் பொருத்த வரையில் பாடங்களைக் கிரகித்துக் கொள்வதில் மூன்று விதமாக அமைகிறார்கள்.

படமாகப் பதித்துக் கொள்ளும் குழந்தைகள் (visual) ஓசை மற்றும் சப்தம் மூலமாகப் பதித்துக் கொள்ளும் குழந்தைகள் (auditory), உணர்ச்சி மற்றும் பயிற்சி மூலமாகப் பதித்துக் கொள்ளும் குழந்தைகள் (kinesthetic).

ஒரு பொருளைப் பற்றி பேசும்பொழுது, அந்தப் பொருளின், எந்தப் பரிமாணம் மனத்தில் பதிகிறது என்பதில் குழந்தைகள் மாறுபடுகிறார்கள். உதாரணமாக, இமய மலை என்று சொல்லும் பொழுது, சில குழந்தைகளுக்கு இமயமலையே படமாக நினைவுக்கு வரும். தாஜ்மஹால் என்று சொல்லும்பொழுது, தாஜ்மஹாலின் படம் நினைவுக்கு வரும். இந்தக் குழந்தைகளெல்லாம் எந்தப் பாடத்தைப் படித்தாலும், அந்தப் பாடத்தின் சாராம்சத்தைப் படத்தின் மூலமாக மனத்தில் பதிய வைத்துக்கொள்வார்கள். இந்தக் குழந்தைகளெல்லாம் visual children என்று கொள்ளலாம். அதாவது, இந்தக் குழந்தைகள் ஒரு கேமராவைப் போல ஒரு பாடத்தைப் படம் பிடித்து மனத்தில் தக்க வைத்துக்கொள்வார்கள்.

சில குழந்தைகள் ஒரு பாடத்தைப் பற்றிச் சொல்லும்பொழுது, ஒலி மற்றும் சப்தம் மூலமாக அந்தப் பாடத்தைத் தங்களுக்குள் பதிய வைத்துக் கொள்வார்கள். உதாரணமாக, தாஜ்மஹாலைப் பற்றி படிக்கும்பொழுது, அதைச் சொல்லிக் கொடுத்த ஆசிரியரின் குரல், அவர் உபயோகித்த வார்த்தைகள் போன்றவற்றில் இந்தக் குழந்தைகள் கவனம் செலுத்துவார்கள். அந்தப் பாடத்தைப் பற்றிக் கேட்கும்பொழுது, இந்தக் குழந்தைகள் திரும்பத் திரும்பச் சொல்லி, காதில் கேட்டு, ஒலி மூலமாக அந்தப் பாடத்தைப் பதிவு செய்து கொள்வார்கள். இந்தக் குழந்தைகள், ஒரு டேப் ரிக்கார்டரைப் போல பாடத்தை ஒலிப்பதிவு செய்து வைத்துக் கொள்வார்கள்.

சில குழந்தைகள், உணர்ச்சிப்பூர்வமாகப் பாடத்தை உணர்ந்து பதிய வைத்துக் கொள்வார்கள். உதாரணமாக, தாஜ்மஹாலைப் பற்றிப் பாடம் கேட்கும்பொழுது, இந்தக் குழந்தைகள், தாமே தாஜ்மஹால் முன் நிற்பது

போலவும், அங்கிருக்கும் சூழ்நிலையில் தமக்கு ஏற்படும் மன உணர்ச்சியை அனுபவித்து, இதை மையமாகக் கொண்டு பாடத்தைப் பதிய வைத்துக் கொள்வார்கள்.

இந்த மூன்று விதமான குழந்தைகளும் அவர்களுக்கேற்ற முறையில் பாடத்தைப் படிப்பார்கள். மனத்தில் தக்க வைத்துக் கொள்வார்கள். எனவே இந்தக் குழந்தைகள் எந்த வழிமுறையில் நேர்த்தியாக செயல்படுகிறார்களோ அந்த வழிமுறையில் பாடம் சொல்லிக் கொடுத்தால் மிகவும் சிறந்ததாக இருக்கும்.

படத்தின் மூலமாகப் பாடத்தைத் தக்க வைத்துக் கொள்ளும் குழந்தைகளுக்குப் பாடம் சம்பந்தப்பட்ட படங்களைக் காண்பித்தும், சார்ட்டுகளைக் காண்பித்தும் சொல்லிக் கொடுத்தால், அவர்களுடைய நினைவாற்றல் பெருகும். வார்த்தைகள்

# கோழிக் குஞ்சா?

மூலமாகவும் சப்தங்களின் மூலமாகவும் பாடத்தை மனத்தில் பதிய வைத்துக் கொள்ளும் குழந்தைகளுக்கு அந்தப் பாடத்தைப் பலமுறை படித்துக் காண்பிக்க வேண்டும். குரலை ஏற்றியும் இறக்கியும், சொல்லிக் கொடுத்தால், இந்தக் குழந்தைகள் மிகவும் எளிதாகப் புரிந்துகொள்வார்கள். உணர்ச்சி பூர்வமாக படிக்கும் குழந்தைகளுக்கு எது ஒன்றையும் செய்து காட்ட வேண்டும். தொட்டு உணர வைக்க வேண்டும். ஆராய்ச்சிக் கூடங்கள், தாவர, விலங்கியல் பூங்கா போன்ற இடங்களுக்கு அதிகமாகப் போக வேண்டும் என்ற ஆர்வத்தை வளர்க்க வேண்டும். இந்தக் குழந்தைகள் பாடங்களை எழுதிப் பார்க்க வேண்டும். எழுதுவது என்பது உணர்ச்சி சம்பந்தப்பட்ட ஒரு விஷயம்.

இதைச் சரியாகப் புரிந்து கொள்ளாமல், நம் முன்னே இருக்கும் குழந்தை படம் சம்பந்தப்பட்ட வழிமுறையுள்ள குழந்தை என்று உணராமல், அந்தக் குழந்தைக்கு ஒலி மூலமாகவும், செய்முறை மூலமாகவும் பாடத்தைக் கற்பித்தால் அவர்களுடைய மனத்தில் பாடம் ஏறாது. அதே போன்றுதான், ஒலி மற்றும் சப்தம் மூலமாக பாடம் கற்றுக் கொள்ளும் குழந்தைகளுக்கு, படத்தை மட்டும் காண்பித்துக் கொண்டிருந்தால் பாடம் அவர்களுடைய மனத்தில் பதியாது. அதேபோன்று செய்முறை உணர்ச்சிகள் மூலமாக படிக்கும் குழந்தைகளுக்கு, படங்களைக் காண்பித்தும் சப்தங்கள் மூலமாகவும் பாடங்களைச் சொல்லிக் கொடுத்தால் மூளையில் ஏறாது.

**வ**குப்பில் நல்ல மதிப்பெண் வாங்கக் கூடிய குழந்தைகளையும், மதிப்பெண் வாங்காத குழந்தைகளையும் ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது, ஓர் உண்மை மேலோங்கி நிற்கிறது. எந்தக் குழந்தைகள் வகுப்பிற்குச் சரியான நேரத்தில் வருகிறார்களோ, எந்தக் குழந்தைகள் வீட்டுப் பாடங்களை அக்கறையுடன் செய்கிறார்களோ அந்தக் குழந்தைகளெல்லாம் தேர்விலும் அதிக மார்க்குகளை வாங்குகிறார்கள். இதற்கு மாறாக, இருக்கக் கூடிய குழந்தைகள் அதிக






"மனைவியைப் பார்த்ததும் பயம் வராமல் இருக்க ஏதாவது மருந்து கொடுங்க டாக்டர்..."

"அது தெரியாமல்தானே, நான் இருபத்து நாலு மணி நேர கிளினிக் நடத்திட்டிருக்கேன்...!"

— எஸ். வீமராஜன்

மதிப்பெண்களை எடுப்பதில்லை. எனவே, பெற்றோர்கள் செய்ய வேண்டியது ஒன்றே ஒன்றுதான். ஒழுங்காக நேரம் தவறாமல் குழந்தைகளை, பள்ளிக்கூடம் அனுப்பி, அன்றாடம் அக்கறையுடன் சிறிது நேரமாவது குழந்தைகளோடு தங்கள் நேரத்தை செலவு செய்ய வேண்டும். 'நான் சொன்னால் என் குழந்தை கேட்க மாட்டேன் என்கிறது' பெற்றோர் சொன்னால், அதற்கு இரண்டு காரணங்கள்தான் இருக்க முடியும். ஒன்று, உங்களுக்குச் சொல்லத் தெரியவில்லை. அல்லது, நீங்கள் சொல்வது அந்தக் குழந்தைக்குப் புரியவில்லை. இதில் எது காரணமாக இருந்தாலும், நாம் எதிர்பார்த்த செயல் மாற்றம் நடைபெறாது.

மூளை வளர்ச்சிக்கு ஊட்டச்சத்து அவசியம். ஒன்றிலிருந்து மூன்று வயது வரை சாப்பிடக்கூடிய உணவுகளின் தரம் மூளை வளர்ச்சியை அதிகமாக பாதிக்கும். புரத, கொழுப்புச் சத்துக்கள், கார்போ ஹைட்ரேட்டு நிறைந்த உணவுகள் மூளையின் வளர்ச்சியைத் துரிதப்படுத்துகின்றன. பச்சைத் தாவரங்கள், பழவகைகள் குழந்தைகளின் மூளை வளர்ச்சியை விரிவு செய்யும்.

மூளை 80% தண்ணீரால் ஆனது. எனவே குழந்தைகள் எவ்வளவுக்கெவ்வளவு தண்ணீர் குடிக்கிறார்களோ, அந்த அளவிற்கு மூளை வளர்ச்சி அதிகமாகும்.

உங்கள் குழந்தைகள் மனத்தில் நம்பிக்கையை விதைக்க வேண்டும். 'என்னால் முடியாது, எனக்குத் தெரியாது' என்று சொல்லக் கூடிய மனநிலையை ஆங்கிலத்தில் negativism என்று சொல்வார்கள். இந்த மனநிலை உள்ள குழந்தைகள் எந்த ஒரு புது முயற்சியையும் எடுத்துக் கொள்ள மாட்டார்கள். தங்களுக்குள்ளே இருக்கக்கூடிய ஒரு பிரம்மாண்டமான சக்தியை இவர்கள் உணர மாட்டார்கள்.

இதை எழுதும்போது, எங்கேயோ படித்த, கதை நினைவுக்கு வருகிறது. ஒரு பருந்தின் முட்டை, கோழி முட்டைகளோடு கலந்து விட்டதாம். அந்தக் கோழியும், அது பருந்து முட்டை என்று தெரியாமல் அடை காத்ததாம். மற்ற முட்டைகளோடு இந்த முட்டையும் பொரிந்து, பருந்துக் குஞ்சு வெளி வந்ததாம். பருந்துக் குஞ்சு தன்னோடு இருக்கக் கூடிய கோழிக் குஞ்சுகளைப் பார்த்ததாம். தான் பருந்துக்குஞ்சு என்ற நினைவு, அந்தப் பருந்துக் குஞ்சுக்கு இல்லாததால் கோழிக்குஞ்சுகளைப் போலவே நடந்ததாம். பூச்சி புழுக்களைக் கொத்திச் சாப்பிட்டதாம். இப்படி வளர்ந்து வரும்போது, அந்தப் பருந்துக்குஞ்சு வானத்தைப் பார்த்ததாம். பிரம்மாண்டமான பருந்து ஒன்று ஆகாயத்தில் வட்டமிட்டுக் கொண்டிருந்ததாம். இந்த பருந்துக் குஞ்சு, பிரமித்து, 'அதோ வானத்தில் பறக்கிறதே, அது என்ன பறவை?' என்று கேட்டதாம். "அது ஆகாயத்தைச் சேர்ந்த பறவை, பராக்கிரமமான பறவை. நாமெல்லாம் சாதாரணமான பறவைகள். தரையில் வசிக்கும் பறவைகள். அந்தப் பறவைக்கு பலம் அதிகம். பாம்பு போன்ற உயிரினங்களைக் கவ்விச் சாப்பிட முடியும். ஆனால் நம்மால் பறக்க முடியாது. பலம் இல்லை. சிறிய பூச்சிகளும் புழுக்களும்தான் நமக்கு உணவு' என்று மற்ற கோழிக்குஞ்சுகள் சொன்னதாம்.

பருந்துக்குஞ்சு, தான் ஒரு பருந்துக்குஞ்சு என்று கூட உணராமல், கோழிக்குஞ்சாகவே இருந்து கோழிக்குஞ்சாகவே தன்னுடைய வாழ்க்கை முழுவதையும் கழித்ததாம்!

இப்படித்தான் பல குழந்தைகள் தங்களுக்குள் இருக்கக்கூடிய திறமைகளையும் சக்திகளையும் புரிந்து கொள்ள முடியாமல், ஒரு சாதாரண வாழ்க்கையை மேற்கொண்டு விடுகின்றனர். ஆனால் வேறு சில குழந்தைகள் வளரும்போதே, தங்களுடைய எண்ணங்களையும், ஆற்றல்களையும் வளர்த்துக் கொண்டு வளருகிறார்கள். உங்களுடைய குழந்தைகளைச் சற்றே உற்று நோக்குங்கள்.

நல்ல ஞாபக சக்தி கொண்ட குழந்தைகளாக இருந்தால், புத்திகூர்மையை வளருங்கள். ஞாபக சக்தி குறைந்த குழந்தைகளாக இருந்தால் நினைவாற்றலை நேர்ப்படுத்தி, ஆற்றல் மிக்கவராக மாற்றுங்கள். அத்தகைய பயிற்சிக்கு இந்தத் தொடர் உதவியிருக்குமென நம்புகிறேன்.

(முடிந்தது)




* உங்கள் குழந்தைகளிடம் படிக்கும் பழக்கத்தை உருவாக்குங்கள்.

* கோகுலம் அவர்களுக்கு அன்பளிப்பாகக் கிடைக்கச் செய்யுங்கள்.

* கல்கி வார இதழுக்கு ஓராண்டு சந்தா ரூ.275/- செலுத்தினால் போதும்; ரூ.36/- பெறுமானமுள்ள தமிழ் அல்லது ஆங்கில கோகுலம் ஆறு மாதங்களுக்கு (ஆறு இதழ்கள்) உங்கள் குழந்தை பெயருக்கு இலவசமாக வந்து சேரும்.

* கல்கி வார இதழுக்கு இரண்டு ஆண்டு சந்தா ரூ.550/- செலுத்தினால் ரூ.72/- பெறுமானமுள்ள தமிழ் அல்லது ஆங்கில கோகுலம் ஓராண்டுக்கு (12 இதழ்கள்) உங்கள் குழந்தை பெயருக்கு இலவசமாக அனுப்பப்படும்.

# கல்கி சந்தா செலுத்தினால் கோகுலம்/GOKULAM இலவசம்!

* ஏற்கெனவே சந்தாதாரர்களாக உள்ளவரும் தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொண்டு பயன்பெறலாம். சந்தா முடிவு தேதி நீடிக்கப்படும்.

* கல்கி என்ற பெயருக்கு மணி ஆர்டர் அல்லது டிமாண்ட் டிராஃப்ட் அனுப்பவும். வெளியூர் காசோலைகள் ஏற்பதற்கில்லை.

டி.டி. அல்லது எம்.ஓ. அனுப்ப முகவரி :
மானேஜர், கல்கி,
47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097.

என் பெயர் : ..............................

என் மகன் / மகள் பெயர் : ..............................

..............................

விலாசம் : ..............................

..............................

..............................

..............................

கல்கி வார இதழுக்கு ஓராண்டு / இரண்டு ஆண்டுகள் சந்தா ரூ. .............. அனுப்பியுள்ளேன். என் மகன் / மகள் பெயருக்கு கோகுலம் தமிழ் / ஆங்கிலம் 6/12 இதழ்கள் * அன்பளிப்பாக அனுப்பவும்.

* தேவையற்றதை அடித்து விடவும்.

கையொப்பம் : ..............................

**ஜூலை இறுதி வரை மட்டுமே இந்தச் சலுகை! முந்துங்கள்!**

சரவணன் பேருந்து நெரிசலில் கசங்கி... வியர்வையில் நசநசத்த சட்டையைக் கழற்றி ஹேங்கரில் மாட்டிவிட்டு கட்டிங் டேபிளுக்கு வந்தான். தயாராய் வைத்திருந்த பனியன் ரோலை உருட்டி விரித்து, டேமேஜ் மார்க் செய்து... மடித்து அளவு அட்டை வைத்து வரைந்து... ஒரு டஜன் பனியன் வெட்டியிருப்பான்.

போன் ஒலித்தது. எடுத்த சூப்பர்வைஸர் 'கட்டிங் செக்ஷன் சரவணன்' என்று குரல் கொடுக்க... அரக்க பறக்க ஓடினான்.

அக்கா மகன் சிவாதான்! அந்த இடிச்செய்தியை கூறினான்...

"மாமா! அபி, நம்மையெல்லாம் விட்டுட்டு போயிட்டா மாமா!"

ஒரே வரி செய்தி!

முகமும் தேகமும் வியர்த்து நெஞ்சுக்கூடு படபடத்து... மூச்சே நின்று விட்ட மாதிரியோர் உணர்வு. நெருப்புக்குழிக்குள் விழுந்துவிட்டது போல அந்தக் கட்டடமே தலைகீழாய்ச் சுழன்றது. மயக்கமாய் சுவரோடு சரிந்து அமர்ந்தான்.

கம்பெனி வேன் ஊருக்குள் நுழைந்து சரவணனை வீட்டருகே நின்றதும், எல்லோரும் எதிர்கொண்டு குழுமினார்கள். அக்காவின் கணவர் ஆதரவாய்ப் பிடித்துக் கொண்டார்.

"சரவணா! நீ வேலைக்குக் கிளம்பிப்போன கொஞ்ச நேரத்திருக்குள்ளேயே அபிக்கு பலமான மூச்சுத்திணறல். நெஞ்சுக்கூடே பிஞ்சு போறது போல... ஆஸ்பத்திரி எடுத்துட்டுப் போறதுக்குள்ளே முடிஞ்சு போச்சு..."

சொன்னவர், பிடித்தபிடி தளராமல் கூடத்திற்குக் கூட்டிப் போய் நிறுத்தினார்!

அபி என்கிற அபிராமி நடுக்கூடத்தில் கிடத்தப்பட்டு... சம்பங்கி மாலை சார்த்தி நெற்றிநிறைய விபூதி பூசி, குங்குமமிட்டு, தலைமாட்டில் அகல் விளக்கு சுடர்விட்டு ஜெகஜொலிப்பாய் இருக்க, அபி மட்டும் உயிரற்ற உடலாய்...

சரவணன் சிறிது நேரம் இமை சிமிட்டாது அன்பு மகள் அபியையே பார்த்தான்... கொக்கி போன்று வளைந்த பாதங்களையும் கை விரல்களையும் கோணிய வாயையும், ஆழத்தில் உள் வாங்கிய கண்களையும், அழகான கருணான அடர்த்தியான தலைக்கேசத்தையும், கண்களால் வருடினான். எல்லாவிதத்திலேயும் குறையுள்ள ஆசை மகள் அபிராமிக்கு, கூடுதலான ஒரேயொரு அழகென்று சொன்னால் அது இந்தத் தலைக் கேசம் மட்டும்தான்.

"கோசணத்திற்கு உங்கப்பா, அம்மாவுக்கும், அனுக்குளிக்கு வாசகியோட அண்ணனுக்கும் மொதல் ஆளாய் விட்டேன். முக்கியப்பட்டவங்க வந்தும் எடுத்திட வேண்டியதுதான்" மாமா சொன்னார்.

'இந்த ஒன்பது வருஷமாய் அபிக்கு எந்த சுபகாரி



யமும் சொந்த பந்தங்களின் முன்னிலையில் நடக்கவில்லை. பதினோறு மாதத்தில் வருஷம் முடியும் தருவாயில்... மொட்டை கூட அடிக்கவில்லை. இனி இந்த துக்க காரியத்திற்காக யார் வந்து என்ன ஆகப்போகிறது.'

அக்காவும், அம்மாவும் எத்தனையோ முறை சொல்லிப்பார்த்தார்கள். "சரவணா! பொண்ணுக்குப் பொறந்த முடி எடுடா. பொறந்த முடியிருந்தாக்க வளர்ச்சியிருக்காதும்பாங்க. அடிக்கடி உடம்புக்குச் சுகமில்லாமே போகுமாம்."

"பொறந்த முடி எடுத்துட்டாக்க மட்டும் அபி எழுந்து நடப்பாளா அம்மா? ஓடியாடி விளையாடுவாளா அக்கா? சோறும் தின்பண்டமும் பாலும், கேட்டு வாங்கிச் சாப்பிடுவாளா? எழில் கொஞ்சும் மழலை மொழி பேசித் திரிவாளா? வாய் நிறைய அப்பா, அம்மா, பாட்டி, தாத்தா அத்தை மாமா வென்று அழைப்பாளா? சுற்றங்கள் அழைத்துக் கூடி முடியெடுக்கிறேன் என்று பெயரளவு விசேஷத்தில்... என் மகளைக் கேலிப் பொருளாக்கவா? காட்சிப் பொருளாய்க் காட்டவா?"

பெற்றவளையும், கூடப்பிறந்தவளையும் பார்த்து கேள்வி கேட்க, அவர்கள் இருவரும் பதில் சொல்ல மறுவார்த்தையின்றி மனசுக்குள் மருகினார்கள்.

சரவணனின் பெற்றோருக்காகவும், வாகவியின் அண்ணனுக்காகவும் எல்லோரும் காத்திருக்கும் வேளையில்..வீட்டு வாசலின் ஓரத்தில் குடைபிடித்த பூவரச மர நிழலில் ஏற்கெனவே போடப்பட்டிருந்த கயிற்றுக் கட்டிலில் அமர்ந்து கொண்டு கடந்த கால நினைவுகளை அசை போட்டான்.

சரவணனுக்குச் சொந்த ஊர் நம்பியூர் பக்கம் கோசணம் கிராமம்தான். அக்கா வாழ்க்கைப்பட்ட அவினாசி அருகேயுள்ள இந்த கருணைபாளையத்தில், திருப்பூர் பனியன் கம்பெனியில் வேலை கிடைத்தவுடன் சரவணனுக்கு அக்கா வீட்டில் அடைக்கலம்!

ஆரம்பத்தில் பனியன்களை அடுக்கிக் கட்டி, கைமடித்து, ஆபீஸ் பாயாகி, பேக்கிங் செக்ஷன், அயர்ன் தேய்த்து... இப்பொழுது கட்டிங் மாஸ்டராக உயர்ந்து, கை நிறைய சம்பாதித்து, தனியாக இடம் வாங்கி, வீடு கட்டி மருதமலை முருகன் சந்நிதியில் வாகவியைக் கரம் பிடித்தான்.

"வாகவி, உனக்கு ஆண் குழந்தை இஷ்டமா? பெண் குழந்தையா?"

கல்யாணமான புதிதில் ஒரு பிரதோஷ தினத்தில்... அவினாசி லிங்கேஷ்வரர் கருணாம்

**"நம்ம தலைவருக்கு அமைச்சர் பதவி கிடைக்கப் போகுதுன்னு எப்படிச் சொல்றீங்க?"**

**"ராசி பலனிலே அவர் ராசிக்குக் 'குறுகிய கால அதிர்ஷ்டம்'னு போட்டிருக்குதே?"**

**– பெரியகுளம் ஆண்டாள் வேணுகோபால்**

பிகையைத் தரிசித்துவிட்டு, கோயில் பிராகாரத்தைச் சுற்றி வலம் வருகையில் வாகவியை சரவணன் வாஞ்சையோடு கேட்க...

"ஏதாயிருந்தாக்க என்னங்க? பிறக்கப் போறது எந்தக் குறையும் இல்லாமே அழகா, அறிவாயிருந்தாக்க அது போதுமே."

பதிலுக்குப் புன்னகை பூத்தபடியே வாகவி.

"எனக்கு அப்படியில்லை! ஆண் குழந்தையைக்காட்டிலும் பெண் குழந்தையின் பிறப்பு மகாலட்சுமியின் வருகை. இல்லறம், பூவனமாய்ப் பூத்துக்குலுங்கும்... மகிழ்ச்சி மணம் பரப்பும்..."

சரவணனுக்குப் பெண்கள் மட்டுமல்ல, அவர்களது வளர்ச்சியும் பிடிக்கும். ஒவ்வொரு துறைகளிலும் அவர்கள் சாதித்த சாதனைகளை நினைத்து மனசு குதூகலிக்கும்.

இந்திராகாந்தி, மதர்தெரஸா, கிரன்பேடி, எம்.எஸ். சுப்புலட்சுமி...

தனக்குப் பெண் குழந்தை பிறந்தால் இவர்களது வரிசையில் வளர்த்துக்காட்ட வேண்டுமென்ற வெறிபிடித்த ஆவல். அவனது பிரார்த்தனை பொய்க்கவில்லை. ஒரு வெள்ளிக்கிழமை சூரிய உதயத்தில் அவினாசி அரசு மருத்துவமனையில் அபிராமி ஜனித்தாள்... எந்தவித துடிப்போ அசைவோ, துளி கூட இல்லை. சிறுமுனகல் கூட இல்லவே யில்லை. போட்டது போட்டபடியே... வெறும் தசைப்பிண்டமாய்..

உறைந்து போய் உட்கார்ந்தவனை டாக்டர்தான் தேற்றினார்.

"கவலைப்படாதீங்க மிஸ்டர் சரவணன்! கோவை கே.ஜி.கே.எம்.சி. குப்புசாமி நாயுடு ஆஸ்பிடல் போனாக்க... குழந்தையின் முன்னேற்றத்திற்கான சாத்தியங்கள் இருக்கு. ஆனா நிறைய செலவாகும். மனசு தளரவிடாதீங்க. கடவுளை நம்புங்க."

எப்படியாவது கருணாம்பிகை அம்மன், தன் குழந்தையின் குறை தீர்ப்பாள். கைவிடமாட்டாள். நிரந்தர ஊனமாய் கிடக்கவிடமாட்டாள் என்ற திடமான நம்பிக்கையில் 'அபிராமி' என்று பெயரிட்டான்!

இங்கே போனால் நிவர்த்தியாகுமோ? அந்த




டாக்டர்கிட்டே காட்டினால் பலன் கிட்டுமா? ஒவ்வொரு ஆஸ்பத்திரியாய் ஓடி... ஓடி... பார்க்க... பணம் புளியாய் கரைந்தது... வீடு கடனில் மூழ்கியது.

நாள்பட... நாள்பட எந்த முன்னேற்றமுமில்லை. அபிக்கு வீட்டின் உள்ளறையில் மூலையோரமாய் ஒரு கட்டில். அதுவே அந்த தளிருக்கு நிரந்தர இருப்பிடம். அங்கேயே உண்டு, உறங்கி, படுத்தபடியேதான் சகலமும். மலமும், சிறுநீர் கழிப்பதென்றாலும் கூட...

சரவணன் சந்தோஷம் துறந்தான். சிரிக்க மறந்தான். ஆரம்பத்தில் வாசுகி ஏதோ பெற்றுவிட்டோமேயென்ற கடமைக்காக பணிவிடைகள் செய்தாள். நாளாக நாளாக அபியின் மேல் வெறுப்படைந்து விலகியே நின்றாள்.

''இந்தப் பிசாசு கர்மம் பொறந்து என் பிராணனை வாங்குதே. இது பொழச்சு யாருக்கென்ன லாபம்? எங்கப்பா, தாத்தா, ஈ எறும்புக்குக் கூட துரோகம் செஞ்சிருக்க மாட்டாங்க. யாரு செஞ்ச பாவத்துக்கு பலனா, இந்தக் கருமம் வந்து பிறந்ததோ?'' வெறுப்பை உமிழ்வாள்.

''பெத்த தாயாடி நீ. நாயிகூட தான் போட்ட குட்டிகள்லே ஒரு குட்டி ஊனமா விட்டாக்க, ஒரங்கட்டாது. ஒதுக்கி வைக்காது.'' கோபத்தின் வேகம் அதிகரித்ததில் வாசுகியை அடித்தே விட்டான்.

சரவணன் அதற்குப் பிறகு பெரும்பாலான நாட்கள் வாசுகியிடம் முகம் கொடுத்துப் பேசவில்லை. அப்புறம் அவனே அன்னையாய், அபிக்குச் சகல கடமைகளும். கண்ணும், கருத்துமாய், தன் அன்புமகளின் அசுத்தங்களையும், கழிவுகளையும், அமிர்தமென நினைத்துச் செய்தான்.

ஊரிலிருந்து வந்த அம்மா, சரவணனின் நிலைகண்டு பொங்கல் பானை பச்சரிசிப் பொங்கலாய்க் கொதித்துப்போனாள்.

''சரவணா! கிராமத்துலே காட்டையும் குத்தகைக்கு விட்டாச்சு. ஆடு குட்டிகளை உங்கப்பா மேய்க்கிறாரு... நான் வெறுமனாய்த் தானேயிருக்கேன். அப்பாவே கூழோ, கஞ்சியோ கொதிக்க வெச்சு கும்பியை நெறச்சுக்குவாரு. நான் இங்கேயே தங்கி... அபியை கவனிச்சுக்கறேனே.''

பாட்டி வரிந்து கட்டிக்கொண்டு பேத்தியின் கடமையேற்றாள்... சரவணனுக்கு மனசுக்குள் மகிழ்ச்சி ஊற்றெடுத்து இமையோரங்களில் ஈரம் சுரந்தது.

''கண்கலங்காதடா!! காய்ச்ச மரம் கண்டிப்பா காய்க்கும். எந்தப் பழுதுமில்லாமே மறுபடியும் ஒரு வாரிசு உனக்குப் பொறக்கும்...

அம்மாவின் வாய்ச்சொல் நீராய் வடிந்து... நிஜமாய் பலித்தது...! எந்தக் குறையுமின்றி அழகாய் வாசுகி, சபரியைப் பிரசவித்தாள்... அவன் தவழ்ந்ததும் தத்தி தத்தி நடந்து தன் அக்காவின் கட்டிலருகே போக...

வாசுகி அபியிடம் அண்ட விடாமல் ஓடிப்போய் எடுத்து ஒதுக்கினாள்... இவனுக்கும் ஏதாவது ஆகிவிடுமோயென்ற மூடத்தனமான எண்ணம்தான் மூலகாரணம்!

அம்மாவின் ஒப்பாரி பெருங்குரல் தூரத்திலிருந்து, துல்லியமாக ஒலிக்க... கடந்த கால நினைவுகளிலிருந்து விடுபட்டான். அம்மா இவனைப்பிடித்துக் கொண்டு கதறினாள். அப்பா அருகில் உட்கார்ந்து கொண்டு விசும்பினார்.

''தாய்மாமன் வந்தாச்சு. இனி எடுத்திட வேண்டியதுதான். என்ன சரவணா, முக்கியப் பட்டவங்க யாராவது வரணுமா?'' பெரியவரொருவர் கேட்க...

சரவணன் மன இறுக்கத்தோடு மௌனமாய் இல்லையென தலையசைத்தான்.

வாசுகியின் கரங்களில் எண்ணெய்க் கிண்ணம் தரப்பட்டது. தேய்த்தபடியே தேம்பினாள்.

'போலியாய் அழாதே வாசுகி! அது, இந்த பாவப்பட்ட ஜீவனுக்கு நீ செய்யும் பாவமும் கூட. இந்த இறுதிக் கடமைக்குக் கூட நீ முகம் சுளிப்பாயே? அருவெறுப்பு அடைவாயே? இனி திருப்திதானே? அபியின் மரணம் உனக்கு அளவில்லா ஆனந்தமல்லவா?'

கடைசியாக மண்ணு தள்ளுவதற்கு முன்பு அபியின் சுருளான அடர்ந்த தலைக் கேசத்தை வருடிவிட்டு வான் வெளியை வெறித்தான்.

''மண்ணை நல்லா இழுத்துப்போட்டு சப்பாத்திக்கள்ளியை சரியா வைங்கப்பா! அப்படியே ரெண்டு கொழை திருகுக்கள்ளியை வெட்டிட்டு வாங்க. நாலு கொத்து வேலி முள்ளை மேலே போட்டு, பெரிய பெரிய கல்லை வெச்சு அமுக்கி விடுங்க...''

ஆளாளுக்கு ஐடியா சொன்னார்கள். 'அபி

தாங்குவாளா? கல் கனக்கச் செய்யாதா? மூச்சுத் திணறாதா? முள் குத்தாதா?' பல வாறான யோசனைகளோடு... கிணற்றடியில் தலை முழுகி... வீடு வந்து அகல் விளக்கு தரிசித்து... சுற்றங்கள் முன்னால்... கருமாதி நாள் தெரிவித்து... ஓரமாய் ஒதுங்கி உட்கார்ந்தவனுக்கு, உறவுக்காரர்களின் கிசுகிசு விமர்சனங்கள் வீச்சரிவாளாய்ப் பாய்ந்தன.

"என்னப்பா! காலையிலிருந்து இவ்வளவு நேரம் வரைக்கும் ஒரு சொட்டுக் கண்ணீர் விடலை தகப்பன். சிணுங்கலாகக் கூட விசும்பலையே?"

"சரியான வரக்கண்ணன். பாறைமனுசன். இளகலையே? ஈரம் கரக்கலையே. இத்தனை நாளா கெடந்து சீரழிஞ்சதுக்கு, போனதே பெரிசுன்னு நெனைச்சிருப்பான் போல..."

"என்னமோ கேணமோ... பெத்த



## திடீர்ப் பரிசுப் போட்டி - 15

### பிடியுங்க பரிசை, மிஸ்டர் முஷ்ரப்!

இந்தியா வரும் பாக் ஜனாதிபதி முஷ்ரப், ராஜஸ்தானில் உள்ள ஆஜ்மீர் தர்காவுக்குப் போகிறார். இந்த தர்காவுக்கு வரும் வெளிநாட்டுத் தலைவர்களுக்கு வீரவாள் பரிசாகத் தரப்படுவது வழக்கம். 'இந்தியாவுக்கு எதிராகப் போரிட்ட முஷ்ரப்புக்கு வாள் பரிசளிக்க மாட்டோம்' என்று ஆஜ்மீர் தர்கா நிர்வாகி அறிவித்திருக்கிறார்.

ஆஜ்மீர் தர்கா தராவிட்டால் போகட்டும்! கல்கி வாசகர்களாகிய நீங்கள் முஷ்ரப்புக்கு ஏதாவது பரிசு கொடுங்கள். அதாவது பரிசு கொடுக்க ஐடியா கொடுங்கள். (கற்பனையில்தான்!)

வித்தியாசமான பரிசுக்கு ரூ. 100/- பரிசு!

ஆசிரியர் தீர்ப்புக்குத் தலை வணங்குவோம்!

போஸ்ட் கார்டில் எழுதி அனுப்ப கடைசித் தேதி : 22.7.01

பொண்ணுதானே?

அப்போ இத்தனை நாளைய பாசம். சனங்க மெச்சத்தானா? வெறும் பாசாங்கு. வாசுகி எவ்வளவோ மேல். இருந்தப்ப சிடுசிடுத்தாலும்... இப்பப்பாரு நொறுங்கி நொய்யல் தவிடாகறா? ஆயிரமே இருந்தாலும் தாய்ப் பாசமே தனி..."

சரவணன் உள்ளறைக்குச் சென்றான்... கட்டில் காலியாய்... வெறிச்சோடிப் போய்க் கிடந்தது. அபிக்கு உபயோகித்த எந்தப் பொருளுமின்றி...

"இனி அபி இந்தக் கட்டிலில் படுத்துக் கிடக்க மாட்டாளா? என் காலடிச் சத்தத்தையும் குரலோசையையும் எப்படியோ இனம் கண்டு... 'க்கீ...க்கீ...க்கா...க்கா...' என்று கிளிக்குரலாய்... அன்பின் வெளிப்பாடாய்... பாசத்தின் கூப்பாடாய்க் குரல் கொடுக்க மாட்டாளா?'

'அபிக்குஞ்சு சாப்பிட்டியாடா? என் செல்லம்!' என்று நான் வாரியெடுக்க... வாயில் உமிழ்நீர் வழிய... தலை நில்லாது திருதிருவென என்னைப் பார்க்க மாட்டாளா?'

'அபி இல்லவே இல்லையா? இனி வரச்சாத்தியமில்லையா?'

அந்த இடத்தில் ஒருவித வீச்சம், அதுவே சரவணனுக்கு ஜாதிமல்லிகை நறுமணமாய்...

"பண்டிகை தவறினாலும், தவறும். ஆனா பொண்ணுக்குத் துணி எடுக்காமலிருக்க மாட்டான். இதப்பாருங்க. ஆடி பதினெட்டுக்கு எட்டு நாள் இருக்கவே எப்பேர்ப்பட்ட துணியெடுத்து வந்திருக்கான்னு..."

அக்கா பீரோவைத் திறந்து உறவுப் பெண் ஒருத்தியிடம் எடுத்துக்காட்டி அங்கலாய்க்க...

கட்டிலில் அபி படுத்துக் கிடந்த இடத்தில்... விரல்களால் நேசமாய்த் தடவியபடி... பாசமாய் இதழ் பதித்து... அக்காவிடமிருந்த இளரோஸ் கலர், அடுக்கடுக்கான பிராக்கை வாங்கி கைகள் நடுங்க... உதடுகள் துடித்து... இதுவரை அடி மனத்தில் அழுந்தப் பதித்த சோகங்களும் பொங்கி வழிய தயாராய், தளும்பிக் கொண்டிருந்த கண்ணீரும் ஒரு சேர, மடை திறந்த வெள்ளமென வெளிப்பட்டு பாய...

"என் மயில் குஞ்சின் கிளிப்பேச்சை இனி நான் எப்ப கேட்பேன்?" புதுத்துணியில் முகம் புதைத்து... வாய்விட்டுக் கதறத் தொடங்கினான். ○



# மௌனப் புரட்சியில் பெண்கள்! 2

— மா

இந்தியாவில் இன்னமும் 70 சதவிகித மக்கள் கிராமங்களில்தான் வசிக்கிறார்கள்.

ராஜா காலம் ஆனாலும், ஆங்கிலேய ஆட்சி காலம் ஆனாலும், அதற்கும் முன்னாலும்கூட, கிராமங்களைப் பொறுத்த மட்டில் சர்க்கார் என்பது பஞ்சாயத்துதான்.

பண்டைக் காலத்தில் கிராமத்தில் பெரியவர்கள் ஒன்று கூடி நம்பிக்கைக்குப் பாத்திரமான நபர்களை, பஞ்சாயத்தாராகத் தேர்ந்தெடுத்து அவர்கள் மூலம் கிராம நிர்வாகத்தை நடத்தி வந்தார்கள். புகழ் பெற்ற உத்திரமேரூர் கல்வெட்டு சொல்லும் குடவாயில் ஓலை வோட்டுமுறை அன்றைய பஞ்சாயத்துக்கான தேர்தல் முறை பற்றியதுதான்.

கிராமம் அதனளவில் ஓரளவு ஒரு சுயேச்சையான குடியரசாக விளங்கியது. நீர்நிலைகளைப் பராமரிப்பது, வரி விதிப்பது போன்ற பல்வேறு பணிகளையும் இந்த பஞ்சாயத்து அமைப்பே நிர்வகித்து வந்தது. கிராமத்தில் வரக்கூடிய சச்சரவுகளைக்கூட பஞ்சாயத்தே தீர்த்து வைத்தது.

இந்த நிர்வாக முறையில் கோளாறுகள் இல்லாமல் இல்லை. நமது சமுதாயத்துக்கே உரிய ஜாதி அமைப்பும், நிலப் பிரபுத்துவ முறையும், பஞ்சாயத்து அதிகாரத்தைப் பணபலம், ஜாதி அந்தஸ்து உடையவர்கள் கையிலே வைத்திருந்தது. ஆனால் அதேசமயம், கிராமத்தின் தேவை என்ன, வாழ்க்கை முறை என்ன என்பதைத் தெரிந்தவர்களே கிராமத்துக்காக நிர்வாகம் செய்யும் வசதி இருந்தது.

ராஜாக்கள் ஆட்சி காலத்தில் தங்களுக்கு வர வேண்டிய வரி வந்து சேர்கிறதா என்ற அளவில் மட்டுமே மேலிட கெடுபிடி இருந்ததே தவிர, அன்றாட கிராம நிர்வாகம் சுயாட்சி கொண்டிருந்தது.

ஆனால் ஆங்கிலேயர்களின் வரவுக்குப் பிறகு இந்தப் பஞ்சாயத்து முறை, சீர்கேடு அடையத் தொடங்கியது.

பிரிட்டிஷ் அரசு தன் வசதிக்காக அதிகாரங்களை ஒரே இடத்தில் குவித்தது. சிறு சச்சரவுகளுக்குக்கூட நீதிமன்றங்கள் என்ற நிலை உருவானது. கிராமங்கள் கொஞ்சம் கொஞ்சமாக மாறி, சிறிய, பெரிய நகரங்கள் ஏற்பட ஆரம்பித்தன. மக்களும் கிராமங்களைக் கைவிட்டு, தொழில் மயமான நகரங்களில் குடியேறினார்கள். இத

லால் கிராமங்களுடைய பொருளாதாரம் சீர்குலைய ஆரம்பித்தது.

இந்தியாவைத் தொழில் மயமாக்குவதை ஆங்கிலேயர் விரும்பவில்லை. தங்கள் நாட்டில் நடக்கும் தொழில் புரட்சிக்கு வேண்டிய கச்சாப் பொருட்களை காமதேனு மாதிரி தரும் இந்திய கிராமங்கள் சீர்குலைவது அவர்களுக்கும் நல்லதல்ல.

எனவே தங்கள் அதிகாரத்தை நிலை நிறுத்திக் கொண்ட பிறகு பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் ஊராட்சி முறையைத் திரும்ப நிறுவுவதற்கு முனைந்தார்கள். 1884ல் லோக்கல் போர்டுகள் சட்டம் இயற்றி ஜில்லா, தாலுகா, யூனியன் போர்டு என்ற மூன்று அடுக்கிலான பஞ்சாயத்து அமைப்பை நிறுவினர். இதற்கான உறுப்பினர்கள் நியமன முறையிலேயே நியமனம் செய்யப்பட்டனர்.

இந்த அமைப்புகள் வரிகளை விதித்து கல்வி, சுகாதாரம், குடி தண்ணீர், தெரு விளக்கு போன்ற அடிப்படைத் தேவைகளை நிர்வகித்து வந்தன.

சுதந்தரப் போராட்டம் வலுக்கத் தொடங்கியதும், கிராமப் பஞ்சாயத்து பற்றிய நமது அன்றைய தலைவர்களின் பார்வை ஒரே மாதிரி இல்லை. நேரு, அம்பேத்கர் போன்றவர்கள் நிலப்பிரபுத்துவமும், ஜாதி அமைப்பும் கிராமங்களில் வேரூன்றி இருக்கும்வரை பஞ்சாயத்து முறையால் எல்லா மக்களுக்கும் நன்மை கிடைக்காது என்று கருதினார்கள். இவற்றை ஒழிக்க, கிராமத்துக்கு வெளியிலிருந்து அதிகாரம் செலுத்தினால்தான் முடியும் என்று அவர்கள் நம்பினார்கள்.

காந்தியின் கருத்து இதற்கு நேர் எதிர்!

விடுதலைப் போராட்டத்தில் மக்களின் ஆதரவைத் திரட்டுவதற்கே அவர் மக்கள் செல்வாக்குடன் இருந்த பஞ்சாயத்து, ஊர்த் தலைவர்களைத் தம் பக்கம் ஈர்த்துப் பயன்படுத்தினார். மக்களின் எதிர்பார்ப்புகளையும், பிரச்னைகளையும் சந்திக்க, ஒவ்வொரு கிராமமும் ஒரு குடியரசாகத் திகழ வேண்டும் என்று அவர் விரும்பினார். சுதந்தரம் என்பது அடி மட்டத்திலிருந்து துவங்க வேண்டும் என்பதே காந்தியின் கனவாக இருந்தது. ஜாதி, ஏழை - பணக்காரன் வேறுபாடுகளை மீறி கிராம அளவில் மக்களை ஒன்றிணைக்க முடியும் என்பது காந்தியின் நம்பிக்கையாக இருந்தது.

ஆனால் சுதந்தர இந்தியாவில் காந்தி நினைத்த கிராமக் குடியரசு ஆட்சிமுறைக்கான அம்சங்கள் அரசியல் சட்டத்தில் முக்கிய இடம் பெறவில்லை. இதற்குக் காரணம் காந்தியின் கருத்துக்கு நேரெதிர் கருத்துடைய நேருவும் இதர தலைவர்களும் ஆட்சிப் பொறுப்பை ஏற்றதுதான்.

முதலாவது ஐந்தாண்டு திட்டத்தில் கிராம மக்களுக்கு அடிப்படை வசதிகளைச் செய்து தர சமுதாய வளர்ச்சித் திட்டங்களும் பொருளாதார வளர்ச்சித் திட்டங்களும் தீட்டப்பட்டன.

ஆனால் திட்டக் காலத்தின் முடிவில் எதிர்பார்த்த அளவு மக்களின் வாழ்க்கை மேம்படவில்லை. மக்களிடையே சமூக பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் மறையவில்லை என்பது கண்டறியப்பட்டது. காரணத்தை ஆராய்ந்த போது மக்களுக்கான திட்டங்கள், தேவைகள் என்ன என்பது மக்கள் மத்தியிலிருந்து வராமல், பல்லாயிரம் மைல்களுக்கப்பால் எங்கோ ஓர் இடத்தில் அதிகாரிகள் அறைக்குள் உட்கார்ந்து கொண்டு திட்டங்கள் தீட்டியதுதான் என்று தெரிய வந்தது.

இதையடுத்து 1957ல், பல்வந்த்ராய் மேத்தா குழு நாடு முழுவதும் பயணம் செய்து ஆய்வு செய்தது. திரும்பவும் ஊராட்சி அமைப்பு முறையை மேம்படுத்தி வளர்ச்சிப் பணிகளைத் திட்டமிடுவதிலும், திட்டங்களைச் செயல்படுத்துவதிலும் மக்களை முழுமனத்தோடு பங்கேற்கச் செய்வதே சிறந்த வழி என்று இந்த குழு அரசுக்கு அறிக்கை சமர்ப்பித்தது.

> **''தாம்பரத்துல ரெண்டு மூணு இரயில் பெட்டி எரிஞ்சு சாம்பலானதுக்குக் காரணம் கண்டுபிடிச்சுட்டாங்க!''**
>
> **''என்னவாம்?''**
>
> **'''தீ' தானாம்!''**
>
> **— புளியரை கணேசன்**

ஆனால் அறிக்கைபடி எதுவும் நடந்துவிடவில்லை.

ஓரளவுக்குத் தங்களிடம் இருக்கும் அதிகாரங்களில் சிலவற்றை ஊராட்சி அமைப்புகளுக்கு வழங்க மாநில அரசுகள் சட்டங்கள் இயற்றின. தமிழ்நாட்டில் 1958ல் ஊராட்சி சட்டமும் மாவட்ட வளர்ச்சி மன்ற சட்டமும் இயற்றப்பட்டன. கிராம அளவில் ஊராட்சிகள் சேர்ந்த ஊராட்சி ஒன்றியமும் அமைக்கப்பட்டன. உணவு உற்பத்தியைப் பெருக்குவது, மக்கள் தொகையைக் கட்டுப்படுத்துவது, கிராமங்களில் வேலை வாய்ப்புகளைப் பெருக்குவது, கிராமப் பகுதிகளில், கேளிக்கை மற்றும் கலாசார வசதியை ஏற்படுத்துவது, கிராம சொத்துக்களைப் பராமரிப்பது போன்ற செயல்பாடுகளுக்காக சட்டம் இயற்றப்பட்டது. 2.10.1960 முதல் 2.10.1961க்குள் 3 கட்டங்களில் இச்சட்டம் தமிழ்நாடு முழுவதும் நிறைவேற்றப்பட்டது.

**ச**ட்டங்கள் போடப்பட்டாலும் அரசியல் மாற்றங்கள் காரணமாக இந்தப் பஞ்சாயத்து நிறு வனங்கள் உரிய முறையில் இயக்கப்பட வில்லை.

தவிர அரசியல் சாசனத்தில் இருந்த ஒரு ஷரத்து மாநில அரசுகளுக்கு வசதியாகி விட் டது.

அரசியல் சாசனத்தின் 40வது பிரிவில் மாநில அரசுகளின் விருப்பத்திற்கேற்றவாறு ஊராட்சிகளை அமைக்கலாம் என்று சொல் லப்பட்டு விட்டதால் பல இடங்களில் பஞ் சாயத்து தேர்தல்கள் கூட நடக்கவில்லை. (சென்னை மாநகராட்சித் தேர்தல் சுமார் 20 வருடங்கள் நடக்கவே இல்லை என்பது நினை விருக்கலாம்.)

இதையெல்லாம் பற்றி மத்திய அரசாலும் சட்டப்படி மாநில அரசுகளைத் தட்டிக் கேட்க முடியவில்லை. ஊராட்சி அமைப் புகள் தொடர்பான சட்டங்கள் திருத்தப்பட வேண்டும் என்ற எண்ணம் நிருபர்களும் மக்கள்



மத்தியிலும் அரசியல்வாதிகள் மத்தியிலும் தோன்ற ஆரம்பித்தது.

**நே**ரு 1947ல் சமூகக் காரணங்களுக்காகப் புறக்கணித்த பஞ்சாயத்துகளுக்கு வலிமை சேர்க்கும் ஒரு நடவடிக்கையை நேருவின் பேரன் ராஜீவ் காந்தி அரசியல் காரணங்களுக் காக 1989ல் மேற்கொண்டார். மத்திய அர சிடம் அதிக அதிகாரம் கேட்டு தகராறு செய் யும் மாநில அரசுகளைச் சமாளிக்கவும், பல வீனப்படுத்தவும் நேரடியாக மத்திய அரசு, மாவட்ட கலெக்டர்களுடன் வளர்ச்சிப் பணி களை மேற்கொள்ளும் என்று அவர் அறிவித் தார். அதற்கு எதிர்ப்பு வந்தது. அதன் பிறகே அவர் பஞ்சாயத்துகளை உயிர்ப்பிக்கும் அர சியல் சட்ட 64வது திருத்தத்தை 1989ல் ராஜீவ் காந்தி மேற்கொண்டார். அது தோற்கடிக்கப் பட்டது. பிறகு 1992ம் ஆண்டில் தான் 73வது அரசியல் அமைப்புத் திருத்தச் சட்டம் உரு வாகி பல்வேறு கட்சிகளின் ஒப்புதலோடு அம லுக்கு வந்தது. (அப்போது இந்தியா முழு வதிலும் இந்தத் திருத்தத்தை எதிர்த்த இரண்டே இரண்டு கட்சிகள் - மற்றபடி எதிலும் ஒத்த கருத்து இல்லாத தி.மு.கவும் அ.தி.மு.கவும்தான்!)

இந்தத் திருத்தம்தான் இனி ஜெய லலிதாவோ கருணாநிதியோ அல்லது வேறு யாரோ நினைத்தாலும்கூட உள்ளாட்சித் தேர் தல்களை நடத்தாமல் நிறுத்தி வைக்க முடியாது என்ற நிலையை ஏற்படுத்தியிருக்கிறது. இதை மாற்ற வேண்டுமானால், மறுபடியும் நாடாளு மன்றத்தில் இன்னொரு அரசியல் சட்டத் திருத்தம் கொண்டு வந்தால்தான் முடியும்.

73வது திருத்தத்தின் மூலம் மூன்றடுக்கு ஆட்சி முறை அதாவது கிராமப் பஞ்சாயத்து, பஞ்சாயத்து யூனியன், மாவட்டப் பஞ்சாயத்து என்பது ஏற்படுத்தப்பட்டது. ஊராட்சிகளின் ஆயுட்காலம் 5 ஆண்டுகள். ஆயுட்காலம் முடியுமுன் 6 மாதத்திற்குள் தேர்தல்கள் நடத் தப்பட வேண்டும். அதேபோல அமைப்புகள் கலைக்கப்பட்டாலும் கலைக்கப்பட்ட 6 மாதத் திற்குள் அவற்றுக்குத் தேர்தல்கள் நடத்தப் பட வேண்டும்.

இந்தச் சட்டத் திருத்தத்தின் மிக முக்கிய அம்சம் பெண்களுக்கும், ஆதி திராவிடப் பழங்குடியினருக்கும் இட ஒதுக்கீடு அளிக்கப் பட்டிருப்பதாகும்.

வார்டு மெம்பர், தலைவர், யூனியன் மெம் பர், மாவட்டப் பஞ்சாயத்து என எல்லா அடுக்குகளிலும் உறுப்பினர் மற்றும் தலைவர் பதவிகள் அப் பகுதியிலுள்ள தாழ்த்தப்பட்ட மற்றும் பழங்குடி மக்களின் தொகை விகிதாச் சார அடிப்படையிலும் பெண்களுக்கு மொத்த இடங்களில் மூன்றில் ஒரு பங்கு எனவும் ஒதுக் கப்பட வேண்டும். இந்த மூன்றில் ஒரு பங்கு என்பது உறுப்பினர் பொறுப்பில் மட்டு மல்லாது தலைவர் பொறுப்பிலும் பெண் களுக்கு அளிக்கப்பட வேண்டும் என்பது கட்டாயமாக்கப் பட்டுள்ளது.

இப்படி ஒரு சரித்திரப் புகழ் வாய்ந்த சட்டத்தால் இன்று தமிழ்நாட்டில் 30,000க் கும் மேற்பட்ட பெண்கள் பஞ்சாயத்து அமைப்பில் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

எல்லா மட்டங்களிலும் அதிகாரத்தில் பெண்களுக்கான இட ஒதுக்கீடு தேவை என்ற குரல் பஞ்சாயத்து அனுபவத்துக்குப் பிறகு இன்று மேலும் வலுவடைந்து வருகிறது.

ஜாதி ரீதியிலான வகுப்பு வாரி இட ஒதுக் கீடு சுமார் 70 ஆண்டுகளுக்கு முன்பே வந்து விட்டதே, ஏன் பெண்களுக்கான இட ஒதுக் கீடும் அப்போதே வரவில்லை? அதற்கான கோரிக்கை பெண்களால் எழுப்பப்படவில் லையா? இப்போது மட்டும் எழுவது ஏன்? இதையும் புரிந்துகொண்டால்தான், இன்று உள்ளாட்சிகளில் பெண்களின் பங்கேற்பின் தீவிரத்தைப் புரிந்து கொள்ள முடியும்.

(தொடரும்)

# விண்ணுக்கும் மண்ணுக்கும்

**“நீ**தான் முதல்லே பண்ணினே!”

“ஊ... ம்! நீதான். நீயே தான்!”

“இல்லே... நீதான்.”

“பொய் சொல்லாதே! நீதான்.”

“நீ... ஈ... ஈ... தான்.”

“அம்மா! இவனைப் பாரும்மா. தூங்கவிடாமே நச்சறான்!” என்று மிக மிக நல்ல பெண்ணாக, அம்மாவைத் துணைக்கு அழைத்தாள் அக்காக்காரி.

“இந்தாங்கடா! அப்பவே இருந்து பார்க்கிறேன். லூட்டி ஓயவே இல்லை. இரண்டு நிமிஷத்துலே தூங்கலைன்னா பின்னி எடுத்திடுவேன். ஆ... மா... ம்!” என்று அம்மா அடுத்த அறையிலிருந்து அதட்டல் போட்ட பிறகு ‘கப்சிப்.’

அம்மா உறங்கி விட்டாள் என்பது உறுதியானபிறகு தம்பியின் குரல் கிசுகிசுத்தது.

“அக்கா! தூங்கியாச்சா?”

“பேசாதேடா! ‘பத்து வயசு ஆகியும் விவரம் தெரியாது? எருமை மாடு!’ன்னு என்னைத்தான் அம்மா அடிப்பாங்க!”

“அதில்லே! இன்னிக்கு ‘குரோர்பதி ஜூனியர்’ பார்த்தியா? அடுத்த மாசம் நான் போகப் போறேன்.”

“பெரிய இவரு! பத்து வயசு ஆனா தான் சேர்த்துப்பாங்க. புரிஞ்சுக்கோ!”

“ஆ... அது வேறேயா! அப்போ நீ போ. துணைக்கு நான் வர்றேன். அமிதாப் அங்கிள் உன்னை இன்ட்ரடியூஸ் பண்ணிட்டு ‘உங்க கூட யார் வந்திருக்காங்க’ன்னு கேட்பார். ‘என் தம்பி’ன்னு சொல்லு. என்னைக் காமெராவிலே காட்டுவாங்க. நான் ஆடியன்ஸுக்குக் கையைக் காட்டுவேன்.”

“ஆசைதான். முதல்லே நெம்பர் கிடைச்சு போன் பண்ணணும். அப்புறம் அவங்க கேட்கிற கேள்விக்குப் பதில் சொல்லணும். அ...ப்... பு... ற... மா... செலக்‌ஷன். இதெல்லாம் நடக்கிற காரியமா?”

“நடக்கும். என்ன சொல்றே? அப்பா எஸ்.டி.டி. பண்ணி வாங்கித் தரேன்னு சொல்லியிருக்கார்.”

“அப்பாதானே? ஆபீஸ் போனவுடனே மறந்துடுவார். அப்பா கம்பெனியிலேருந்து ஆயிரம் ஆயிரமா ஐஸ்க்ரீம் பெட்டி போனாத்தான் ஊர்லே எல்லாருக்கும் ஐஸ்க்ரீம் கிடைக்கும். தெரியுமா?”

“நான்தான் விடமாட்டேனே! நச்சு நச்சுன்னு நச்சுவேன். ‘உன் தொல்லையே பெரிசாப் போச்சு’ன்னு எஸ்.டி.டி. பூத் அங்கிள் கிட்டே கூட்டிப் போவார். அவ்வளவுதான்.”

“எஸ்.டி.டி. பண்ணினா ரொம்ப காசாகும். தெரியுமா?”

“என் உண்டி நிறைய இருக்கு. கொடுத்துடறேன்.”

“பெரிய கோடீஸ்வரரு. நூறு ரூபா செலவாகும், தெரியுமா?”

“அய்யோ! அவ்வளவா? ஆனா ஒன் க்ரோர் கிடைக்குமே. அந்தப் பணத்துக்கு என்னென்ன வாங்கலாம்?”

“நிறைய வாங்கலாம். பங்களா, கார், ஏஸி...”

“என்னடா அங்கே தொணதொணப்பு? இன்னும் தூங்கலை?” என்ற அம்மாவின் குரல் கேட்டு மௌனமானார்கள்.

**கொ**ஞ்ச நேரத்தில் கிசுகிசுப்பு

தொடர்ந்தது.

"இந்த அம்மாவுக்கு 'ரிமோட் கண்ட்ரோல்' இருக்கு!" – இது தம்பி.

"அனாவசியமா உதை வாங்காதே! ஆனால் ஒரு க்ரோர் அப்படியே கிடைக்காது. பாதி கவர்மெண்டுக்குக் கொடுத்திடணும்."

"அஸ்கு... புஸ்கு... ஏன்?"

"கவர்ன்மெண்ட்டுக்கு நிறைய இனாம் வாங்கினா பிடிக்காது. அதனாலே 'டாக்ஸ்' பிடிச்சுப்பாங்க!"

"அது வேறேயா? அப்பக்கூட பங்களா, கார் வாங்கலாமில்லையா?"

"முதல்லே பதினைந்து கேள்விக்கும் ஒழுங்காய்ப் பதில் சொன்னாத்தான் 'க்ரோர்' கிடைக்கும். நெறையப் பேர் மூணு லட்சம் தான் வாங்கறாங்க!"

"ஊப்பூ! ஒரு கார் கூட வராது! அக்கா, பேசாம போர்ன்விடா க்விஸ்ஸுக்கே போயிட்டா என்ன? 'கிஃப்ட்' கொடுப்பாங்க போறுமே!"

"அப்போ நாளைக்கே நம்ம ஸ்கூல்லே சொல்லலாமா?"

"க்ளாரா மேடம் கிட்டே நானே சொல்றேன். 'தட் ஈஸ் வெரிகுட்'ம்பாங்க! அக்கா, மறுபடியும் பூகம்பம் வருது. என்னவோ 'டகடக'ன்னு சப்தம்!"

"நீதான் கட்டிலை உதைக்கிறே?"

"சரி, ப்ளேன்லேதானே போகணும்? 'வாமிட்' வரும் இல்லே?"

"அதெல்லாம் வராது. சாக்லேட் தருவாங்க!"

"ஹைய்யா...! ஜாலி...!"

"டேய் கண்ணை மூடு, அம்மா வராங்க."

விளையாட்டுக்குக் கண்ணை மூடிக் கொண்டவர்கள் உண்மையாகவே உறங்கிப் போனார்கள் – விண்ணையும் மண்ணையும் தொட்டு விட்ட மகிழ்வோடு!






# ரயில் கவிதை!

இரண்டு வாரமா எனக்கு கல்தா கொடுத்துட்டு அரசியல் மேட்டர்களைக் கோலோச்ச அனுமதிச்ச கல்கி ஆசிரியர் குழுவைக் கண்டிச்சு முதற்கண் தீர்மானம் நிறைவேத்தறேன்! வழிமொழிய விரும்பும் சூப்பர் மார்க்கெட் விசிறிகள் போஸ்ட் கார்டை வீணா வாங்கி எழுத்திட்டிருக்க வேண்டாம். இருக்கற இடத்திலேருந்தே 'ஆமாம்' போட்டால் போதும்!

தி ஹிண்டு மாகஜின் செக்ஷன்ல வந்த ஒரு ஆர்டிகள் பல பேர் பார்க்காம போயிருக்கக் கூடும்- லண்டன் பாதாள ரயிலோட சங்க கால கவிதை ஒண்ணு சேர்ந்து ஓடிக்கிட்டிருக்குன்றதுதான் அந்தக் கட்டுரைல முக்கிய நியூஸ். இருக்கறதலேயே ஓல்டஸ்ட் லவ் பொயம்கள்ள ஒண்ணு இந்த ரயில் கவிதை.

'யாயும் யாயும் யாரா கியரோ' ஞாபகமிருக்குமே... ஸ்கூல்ல படிச்சது... 'செம்புலப் பெயல்நீர் போல'ன்னு அதுல வர உவமையையே பெயராகக் கொண்ட செம்புலப்பெயல் நீரார் எழுதினது...!

பல இந்திய இலக்கியங்களை இங்க்லீஷுக்கு மொழி பெயர்த்திருக்கற ஏ.கே. ராமானுஜனுடைய டிரான்ஸ்லேஷனோடத் இந்த தமிழ்க் கவிதையும் பாதாள ரயில்ல இடம் பிடிச்சிருக்கு. (நம்ம எலக்ட்ரிக் டிரெய்ன்லயும் எம்.ஆர்.டி. எஸ்லயும் ஏன் இந்த ஐடியாவை ஃபாலோ பண்ணக் கூடாது?)

லண்டன் பாதாள ரயில்ல உலகத்தரத்துக் கவிதைகள் பல இருக்கறதைப் பார்த்துட்டு தமிழ்க் கவிதையையும் போடணும்னு ஒரு இந்திய டூரிஸ்ட் முயற்சி பண்ணி, இந்தக் கவிதையையும் டிரான்ஸ்லேஷனையும் 'லண்டன் அண்டர் கிரவுண்ட்' ஆபீசுக்கு அனுப்பியிருக்காங்க. அவங்களும் அதை டிசைன் ஆக்கி, பாதாள ரயில்கள் உள்ளே பக்கச் சுவர்கள்ள பொருத்தியிருக்காங்க!

இப்படி ரயில்ல கவிதை 'பொறிக்கிற' வழக்கம் நூறு வருஷத்துக்கு முந்தி ஆரம்பிச்சதாம். யுத்த காலத்தில் மக்களுக்கு மனோதிடம் தர்றதுக்காக கவிதை வாசகங்கள் போட ஆரம்பிச்சு, சர்வதேச கவிதைக்கான ஒரு பிரமாதமான ஷோகேஸா லண்டன் அண்டர்கிரவுண்ட் மாறிடுச்சு.

குறுந்தொகை கவிதை ஒண்ணு இந்த ஷோகேஸ்ல ஜொலிக்குதுன்றது நமக்கெல்லாம் பெருமைதானே... ஓரத்துல டிசைனை கவனியுங்க... அந்தக் கோலம் யாரோடதுன்னு நினைக்கறீங்க...? அமரர் கல்கியோட திருமதி. ருக்மிணி கிருஷ்ணமூர்த்தி வரைஞ்சது! (ஏ.கே. ராமானுஜனோட ஒரு கட்டுரைத் தொகுப்புலயும் இவங்க கோலம் அச்சாகியிருக்கு- சும்மா அழகுக்காகத்தான்!)

சரி, பாதாள ரயில்ல தமிழும் ஓடணும்னு பாடுபட்ட இந்திய டூரிஸ்ட் யாரு?...

அமரர் கல்கியோட பேத்தி கௌரி ராம்நாராயண்!

ஏ.கே. ராமானுஜனோட டிரான்ஸ்லேஷன் கூட செம்புலப்பெயல்நீர் ரகம்தான்.

• ராஜீவ் மேனன்



ஒரிஜனலோட உணர்வில் கலந்து வந்திருக்கிற இங்கிலீஷ் வார்த்தைகள்! இதோ ஒரிஜினலும் மொழிபெயர்ப்பும்:

யாயும் யாயும் யாரா
கியரோ
வெந்தையு நுந்தையு
மெம்முறைக் கேளிர்
யானு நீயு மெவ்வழி
யறிதுஞ்
செம்புலப் பெய்ந்நீர்
போல
வன்புடை நெஞ்சந்
தாங்கலந் தனவே.

## WHAT HE SAID

What could my mother be
to yours? What kin is my father
to yours anyway? And how
did you and I meet ever?
But in love



• ஏ.கே. ராமானுஜன்

Our hearts have mingled
like red earth and pouring rain.

'Red Earth and Pouring rain' வரி ரொம்ப பிடிச்சுப் போய் விக்ரம் சந்திரா அதைத் தன்னோட நாவலுக்குத் தலைப்பா வைச்சருக்கார்.

வேற ஒரு முக்கியமான 'மொழிமாற்ற' முயற்சி பத்தியும் சொல்லணும். பக்த துகாராம் பாடல்களையும் ஸமர்த்த ராமதாஸரோட பாட்டுகளையும் தனித் தனியா தொகுத்து தமிழில் விளக்கம் தந்திருக்கார் வெ. நாராயணராவ் பந்த் (2, குருபிரஸாத், 42ம் தெரு, நங்கநல்லூர், சென்னை-61). அதோட மராத்தி பாடல்களைத் தமிழ் லிபியில் கொடுத்திருக்கறது பாடறவங்களுக்கு ரொம்ப உதவியா இருக்கும். 'ஸத்குரு ஸ்ரீ ஸமர்த்த ராமதாஸ ஸ்வாமிகளின் உபதேச மொழிகள்' விலை: ரூ. 60. 'துகாராம் ஸ்வாமி மஹாராஜ் பக்திப் பாடல்கள்'ல விலையே மென்ஷன் பண்ணலை! (விலை மதிப்பில்லாததுன்னு முடிவு பண்ணிட்டாங்களோ என்னவோ..!)

### What He Said

What could my mother be
to yours? What kin is my father
to yours anyway? And how
did you and I meet ever?
But in love
Our hearts have mingled
like red earth and pouring rain.

40. யாயும் ஞாயும் யாரா கியரோ
எந்தையு நுந்தையு மெம்முறைக் கேளிர்
யானு நீயு மெவ்வழி யறிதும்
செம்புலப் பெயனீர் போல
அன்புடை நெஞ்சந் தாங்கலந் தனவே.

'Cempulappeyanirar'
translated by A.K. Ramanujan

Poems on the Underground | www.poetrysoc.com

புக்ஸ்ல மட்டும்தான் மொழிமாற்றமா...? சினிமாவுலயும் உண்டுன்றார் ராஜீவ் மேனன். இன் ஃபாக்ட் ஒரு இங்க்லீஷ் படத்தைத் தமிழுக்கு மாத்தறதே ஒரு தனி கலைன்றது அவர் கட்சி!

அகில உலக சினிமா விமர்சகர்கள் கூட்டமைப்பின் சென்னை பிரிவு பிரிட்டிஷ் கவுன்சில்ல ஒரு நிகழ்ச்சி ஏற்பாடு பண்ணியிருந்தது. அதிலே பேசினார் ராஜீவ் மேனன்.

'சென்ஸ் அன்ட் சென்சிபிலிடி' இங்க்லீஷ் படத்தை 'கண்டுகொண்டேன், கண்டுகொண்டேன்' சினிமாவா மாத்தின கதையைச் சொன்னார்.

அவர் சொன்ன பல பாயிண்டுகளுள் முக்கியமானது இங்க்லீஷ் சினிமாவுல இன்டர்வெல் கிடையாதுன்றது தான். ஆனால் இந்திய சினிமாவில் அது கம்பல்சரி! அந்த இடத்தில் ஒரு சஸ்பென்ஸ் வைச்சு திரும்பவும் கதை சொல்லி முடிச்சாகணும்ங்கற கட்டாயம் இந்திய திரைப்படங்களுக்கு. 'இன்டர்வெல் சமயத்தில் தியேட்டருக்கு வெளியே சந்திச்சுக்கற ரசிகர்கள் பரபரப்பா பேசிக்கணும். அப்படிப் பேச வைக்காத தமிழ்ப் படம் கிளிக் ஆகாது!' என்கிறது ராஜீவ் மேனனின் பட்டறிவு!

'கண்டுகொண்டேன், கண்டுகொண்டேன்' ரிலீசான போது ராஜீவ் அதை 'சென்ஸ் அன்ட் சென்சிபிலிடி'யோட மொழி மாற்றம்னு ஒத்துக்கலை. ஆனா படத்துக்கு ஃபிலிம் ஃபேர் அவார்ட் கிடைச்சப்போ மூலக்கதை ஆசிரியர் ஜேன் ஆஸ்டெனுக்கு மறக்காமல் நன்றி சொல்லியிருக்கார்!

— சுபி



## இரவின் நறுமணம் :

இந்த அழகிய அதிசய மலரின் பெயர் நிஷாகந்தி. இந்தப் பூவை பெரும்பாலும் எவரும் பார்த்திருக்க முடியாது. காரணம் இது ஒரே நாள், நள்ளிரவில் விரிந்து அன்றே வாடிவிடும். பெரிய வெண்தாமரை மலர் அளவில் பேரழகுத் தோற்றத்துடன் மயக்கும் வாசனையும் உடையது. மலையாள நாட்டில் இந்தப் பூவைச் சிறப்பித்துப் பாடாத கவிஞர்களே இல்லை.

இந்தச் செடியை வளர்ப்பதும் எளிது. ஒரே ஒரு இலையைப் பிய்த்து நட்டால் போதும். அதிலுள்ள நரம்புகளிலிருந்து வேர்களும் கிளைகளும் உருவாகிப் படர்ந்து வளரும். நன்கு படர்ந்த பெரிய செடியில் மழைக் காலத்தில் ஒரே சமயம் ஏராளமான மொட்டுகள் உருவாகி ஒரே நாளில் நள்ளிரவில் பூத்து மணம் வீசும். அப்போது அந்தச் செடியைக் காணக் கண் கோடி வேண்டும்!

இந்தப் புகைப்படம் நள்ளிரவு பன்னிரண்டு மணிக்கு எடுக்கப்பட்டது. நிஷாகந்தி என்ற பெயரின் பொருள் தான் இந்தச் செய்தியின் தலைப்பு!

- விக்டர் வாசன்

## மவுல்வியின் மனித நேயம்...

சமீபத்தில் மங்களூர் - சென்னை எக்ஸ்பிரஸ் ரயில் கேரளாவின் கடலூண்டி பாலத்தில் கவிழ்ந்தது தெரிந்த விஷயம்.

இதில் தப்பிப் பிழைத்து சென்னை வந்தவர்கள் கடலூண்டி மக்கள் செய்த உதவியை மனமார புகழ்ந்தனர்.

இந்த உதவி... எப்படி கிடைத்தது?

ரயில் கடலூண்டி பாலத்தில் செல்லும் சமயம், அருகில் உள்ள மசூதியில், தொழுகைக்காக ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. மசூதியின் தலைமைமவுல்வி, விபத்து பற்றி அறிந்ததும், மசூதி ஒலி பெருக்கியில், 'கடலூண்டி ஆற்றுப் பாலத்தில் ரயில் கவிழ்ந்து கிடக்கிறது. உடனே உயிருக்குப் போராடுபவர்களைக் காப்பாற்றுங்கள்...'' என திரும்பத் திரும்ப வேண்டுகோள் விடுத்துக் கொண்டேயிருந்தார். இந்த வேண்டுகோள் சுற்று வட்டாரத்தில் தெளிவாகக் கேட்டதால், ஏராளமானோர் ஓடி வந்தனர். அரசு அதிகாரிகள், போலீஸார் வருவதற்குப் பல நிமிடங்கள் முன்பாகவே முடிந்தவரை உதவி செய்து பலரைக் காப்பாற்றிவிட்டனர்.

- வி.ஆர். கிருத்திகா,
திருச்சி.



# தேன்

வேளச்சேரியில் ஓர் உணவகத்தில்



கண்ட வாசகம் :

'காலை நேரத்தில் தூங்குபவன்
தன்னை அழிக்கிறான்.
வேலை நேரத்தில் தூங்குபவன்
நாட்டை அழிக்கிறான்.'

- பாலு, சென்னை - 42

## நித்திய ஜீவ நூல்!

BIBLE என்ற வார்த்தைக்கு விரிவாக்கம்



என்ன தெரியுமா? 'BEHOLD I BEING LIFE ETERNAL' (இதோ, நான் நித்திய ஜீவனுமாக இருக்கிறேன்) என ஏசுநாதர் கூறிய ஆதார வாக்கியத்தில் உள்ள ஒவ்வொரு வார்த்தையின் முதல் எழுத்தை எடுத்துக் கோத்த வார்த்தையே BIBLE.

- ஏ. ராஜகோபால், கோவை - 30

# ஊசி

மதுரை திண்டுக்கல் ரோட்டில் வாட்ச் ரிப்பேர் செய்பவர் தம் கண்ணாடிக் கூண்டில் எழுதி வைத்திருக்கும் வாசகம்.

'பொழுது பார்க்கும் கருவிகளைப் பழுது பார்க்கும் நிபுணர்.'

என்னைக் கடந்து சென்ற லாரியின் பின்புற பம்பரில் காணப்பட்ட அறிவிப்பு.

'This is my end. Don't make it yours!'

- கமலா மாரியப்பன், கோவை



கே.எஸ்.ஆர்., கிண்டல்காரன், கிறுக்கன், கண்டெழுதுவோன், நாடோடி, அடுத்த வீட்டுக்காரன், சுயமரியாதைக்காரன், வழிப்போக்கன், உண்மை உரைப்போன். இதெல்லாம் என்ன?



பாரதிதாசனின் புனை பெயர்கள். அவர் புதுவை அரசு வேலையில் இருந்ததால் சொந்தப் பெயரில் எழுத முடியாத நிலை. அதனால் 'கே.எஸ்.பாரதிதாசன்' என்று புனை பெயர் வைத்துக் கொண்டார்.

- 'திண்ணை' கட்டுரையிலிருந்து
கு. ராஜவேணி, ஆற்காடு.

## ஆட்டோ கிராப்!

சிந்தனை தூண்டும் சில ஆட்டோ மொழிகள்:

'உள்ளங்கள் அழுதாலும் - மனிதா
உதடுகள் சிரிக்கட்டும்.'
'கடமைகள் நம்முடையவை
நிகழ்ச்சிகள் கடவுள் உடையவை.'
'கருவறை முதல் கல்லறை வரை
சில்லறை தேவை மனிதா.'

- ரசித்தவர் : என். சண்முகம், திருவண்ணாமலை



## ஔவைக்காய்!

'வரகரிசிச் சோறும் வழுதுணங்காய் வாட்டும்' என்று ஔவையின் பாடலில் வருகிறது. வழுதுணங்காய் என்றால் கத்திரிக்காய்.

— இரா. பார்த்திபன்

● வீ. முத்தையா, திருநெல்வேலி டவுன்.

*? கல்கியில் 'அபவ் ஆவரேஜ்' மதிப்பீடும் விகடனில் 44 மார்க்கும், குமுதத்தில் 'பிளாக் டிக்கெட்'டும் பெற்ற 'ஆனந்தம்' சன் டாப் டென்னில் இரண்டாவது இடம்; ஆவரெஜ் மதிப்பீடு, 39 மார்க் பெற்ற 'சிட்டிசன்' முதல் இடம்... இதற்கு என்ன சொல்கிறீர்கள்?*

! வசூலை அடிப்படையாக வைத்துக் கொடுக்கப்படும் ரேட்டிங் தொலைக்காட்சியினுடையது. படத்தின் நிறை - குறைகளைச் சுட்டிக்காட்டி கொடுக்கப்படும் ரேட்டிங் பத்திரிகைகளுடையது.

● டீ.எஸ்.டீ. ராயன், மயிலாடுதுறை.

*? எத்தனையோ மேல்நாட்டு நாகரிகங்களைக் கற்றுத் தேர்ந்த நாம், அரசியல்வாதிகளைத் தேர்ந்தெடுப்பதில் மட்டும் ஏன் தோற்றுக் கொண்டிருக்கிறோம்...?*

! 'அனைவருக்கும் கல்வி' என்ற அரசியல் சாசன உரிமை ஆட்சியாளரால் மதிக்கப்படாததால் விளையும் எத்தனையோ கேடுகளில் இது முக்கியமானது.

● ஆர்.பி. ப்ரியன், வேலூர். ❑

*நேரமின்றி வைத்துள்ள புத்தகம் உண்டா...?*

! நிறைய உண்டு; சமீபத்தில் இ.பா. தொகுத்து வெளியிட்டுள்ள ஆதவன் சிறுகதைகள்.

● பி. நடராஜன், அன்னூர்.

*? இந்தியாவுடன் பாகிஸ்தான் இனி நட்பு நிலையை வளர்க்கும் என்று நம்பலாமா...?*

! நம்பிக்கையின் அடிப்படையில்தான் உலகமே இயங்குகிறது. இந்த விஷயத்திலும் நம்பிக்கை வைக்க வேண்டும்தான். ஆனால், கடந்த கால ஏமாற்றங்களை மறவாமல் எச்சரிக்கையாகவும் இருக்க வேணும்.

● ஆர். வேணுகோபால், தென்கரை.

*? அமைச்சரின் செயல்பாடு சரியில்லையெனில் முதலமைச்சர் அவருடைய பதவியைப் பறிக்கலாம்.*



• அபகீர்த்தி ஆளுனர்!



• ஏற்றத்தாழ்வு...

# ஃபாத்திமா பீவி பற்றி..?

*? மதுரையில் மதுக்கடை ஏலத்தில் பெண்களும் போட்டி போட்டு விண்ணப்பங்கள் தந்தது குறித்து...?*

! நன்றாகப் பாருங்கள்... மகளிரணி மகாராணிகளாக இருக்கக்கூடும். கணவன் பெயரில் ஒன்று, மனைவி பெயரில் ஒன்று என்பதாகவும் இருக்கலாம்.

● வே. ஆறுமுகம், கள்ளக்குறிச்சி.

*? பத்திரிகையாளர்களின் கோரிக்கை மனுவை ஜெயலலிதா வாங்க மறுத்தது கடந்த காலத்தை நினைவுபடுத்துகிறதே...?*

! கடந்த காலம் என்று எதைக் குறிப்பிடுகிறீர்கள்? பிரிட்டிஷ் ஆட்சியையா அல்லது 'ஜெ'யின் கடந்த கால ஆட்சியையா? எதுவானாலும் கடந்த காலம் எவ்வளவோ மேல் என்றுதான் நிகழ்காலம் நிரூபித்துக் கொண்டிருக்கிறது!

● இரா. திலீப், திருச்சி – 14.

*? 'அடடா இதை இன்னொரு முறை படித்தால் தேவலையே' என நினைத்து, படிக்க*

*ஆனால் முதலமைச்சரின் செயல்பாடே சரியில்லையெனில்...? (நான் பொதுவாகத்தான் கேட்கிறேன்)*

! அதுக்குத்தான் 356 வது பிரிவு 355வது பிரிவு, குடியரசுத் தலைவர் ஆட்சி என்று பல சட்டங்கள் இருக்கின்றனவே... (பொதுவாகத்தான் சொல்கிறோம்!)

● அ. கென்னடி, நன்னிமங்கலம்.

*? கிருஷ்ணா நதி நீரால் சென்னைவாசிகளின் தண்ணீர்ப் பஞ்சம் தீர்ந்திடுமா?*

! தீராது. ஒன்று, செலவு பாராமல் கடல் நீரைக் குடிநீராக மாற்ற வேண்டும். அல்லது குறைந்தபட்சம் மழைநீர் வீணாகாமல் சேமிக்க புத்தி



• தனிக்கோர்ட்டு தந்திரம்!



• ஆனாலும் கூட...!

சாலித்தனமான திட்டங்கள் வகுக்க வேண்டும். இதற்கு அறிஞர்கள் அறிவுரை பெற அடக்கமும், அமுல்படுத்துவதில் நேர்மையும் வேண்டும்.

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி.

*? தனி கோர்ட்டு பதவிக் காலம் மேலும் ஓர் ஆண்டு காலம் நீடிக்க 'ஜெ' உத்தரவு பிறப்பித்துள்ளது பெருந்தன்மைதானே?*

! நாசமாய்ப் போச்சு! ஏற்கெனவே எல்லா வழக்குகளும் நீர்த்துப் போய்க் கிடக்கின்றன. எஞ்சியுள்ள நான்கு மாத பதவிக் காலத்தில் அவற்றை ஒன்றுமில்லாமல் அடித்து, தாம் 'நிரபராதி'என்று நிரூபிக்க தனி நீதிமன்றங்கள் இயங்கினால்தானே முடியும்...!

● என். சுப்பிரமணியன், சென்னை – 33.

*? 356 ஐ அரசியல் சாசனத்திலிருந்து நீக்க வேண்டும் என்று கூறி வந்தது தி.மு.க., இன்று அக் கட்சியின் மூத்த தலைவர் அன்பழகன், அதை உபயோகித்து குடியரசுத் தலைவர் ஆட்சியைக் கொண்டு வர வேண்டும் என்று கேட்கிறாரே?*



* மீண்டும் ஒருமுறை...!



* ...ஏன்...?



* பட்டதும் கெட்டதும்!

! '356 பொதுவாக ஏற்புடையது அல்லதான். ஆனாலும் 356 பிரயோகிப்பதானால் இன்றைய சூழ்நிலை அதற்கு இடமளிப்பதாக இருக்கிறது' என்று 'ரைடர்' வைத்துத்தான பேசியிருக்கிறார். இது ஒருபுறமிருக்க, 'டிஸ்மிஸ்' கேட்டதால்தானே எச்சரிக்கையாவது பிறந்தது!

● ரேவதி சங்கர், சென்னை – 13.

*? ஃபாத்திமா பீவி பற்றி...?*

! உச்சநீதிமன்ற (முன்னாள்) நீதிபதியாக இருந்தபோதிலும் ஒரு சட்டச் சிக்கலைச் சரியாகக் கையாளத் தவறி, அராஜகத்துக்குத் துணைபோய் விட்டார். திரும்ப அழைக்கப்படும் முன்னரே ராஜினாமா செய்ததால் அபகீர்த்தி துளியும் குறையப் போவதில்லை.

● கு. கணேசன், பனங்கோட்டூர்.

*? 'மந்திரிகளை மாற்றியதற்கான காரணங்களை வெளியே சொல்ல வேண்டிய அவசியமில்லை' என்கிறாரே ஜெயலலிதா?*

! அவரது கருத்து தவறானது. (எத்தனையோ தவறுகளில் இதுவும் ஒன்று) அமைச்சர்களை மாற்றும் பூரண உரிமை முதல்வருக்கு உண்டு. காரணங்கள் அறியும் அடிப்படை உரிமை மக்களுக்கு உண்டு. அது தான் ஜனநாயகம். ஜெ. நடத்துவது சர்வாதிகாரம்.

● வி. பரமசிவம், மதுரை – 10.

*? 'போலீஸ் துறைக்கு நல்ல இமேஜ் கொண்டு வர கண்டிப்பாகப் பாடுபடுவேன்' என தமிழக புதிய டி.ஜி.பி. ரவீந்திரநாத் சொன்னாரே...?*

! ரவீந்திரநாத் proposes; ஜெயலலிதா disposes!

● ஏ.கே. நாசர், லெட்சுமாங்குடி (அஞ்) *

*? பரீட்சைத் தோல்வி, தேர்தல் தோல்வி, காதல் தோல்வி – எதைத் தாங்கிக் கொள்ள முடியாது...?*

! இந்தத் தோல்விகளையெல்லாம் தாங்கிக் கொள்வது கஷ்டமில்லை. வெற்றியைத் தாங்கிக் கொண்டு நிலைகுலையாமல் இருப்பது தான் கஷ்டம்.

● த. சத்தியநாராயணன், அயன்புரம்.

*? குருவாயூர் கோயிலுக்கு 'ஜெ' யானையைக் காணிக்கை தந்ததைப் பற்றி...?*

! கல்கி 25.2.2001 இதழில் 75ம் பக்கத்தில் இடம்பெற்றுள்ள குருவாயூரப்பன் குட்டிக் கதையை மறுபடியும் படித்துப் பாருங்கள் – அந்த இதழ் கைவசம் இல்லையென்றால் எழுதிக் கேட்பவர்களுக்குக் குறிப்பிட்ட பக்கத்தை ஜெராக்ஸ் எடுத்து அனுப்ப தராசு தயார்!

* ரூ. 25 பரிசு பெறுபவர் : ஏ.கே. நாசர், 14 ஏ, கொடாச்சேரி ரோடு, லெட்சுமாங்குடி அஞ்சல், 614 102.

□ ரூ. 50 பரிசு பெறுபவர் : ஆர். பி. ப்ரியன், 37, சுப்ரமணிய சாமி கோயில் தெரு, கொசப்பேட்டை, வேலூர் - 632 001

**நீங்கள் கேட்டவை – தராசு**

# ஒரு பனிநிலவு

27

சிவப்ரகாசம் புன்னகையோடு இன்ஸ்பெக்டர் பால்பாண்டியனைப் பார்த்துக் கொண்டே பேசினார்.

''மிஸ்டர் பால்பாண்டியன்! 'சிவப்பு பனித்துளி'ன்னு தமிழ்ல சொல்லப்படுகிற வார்த்தைக்கு இங்கிலீஷ்ல 'ரெட் ட்யூ'ன்னு சொல்லுவாங்க. ரெண்டு வருஷத்துக்கு முன்னாடி இந்த 'ரெட் ட்யூ' வார்த்தை எல்லா நியூஸ் பேப்பர்லேயும் அடிபட்டது. உங்களுக்கு ஞாபகம் இருக்கா?''

''ஸாரி... ஸார்... ஞாபகம் இல்லை...''

''இந்த 'ரெட் ட்யூ' ஒரு வைரத்தோட பேர். பொதுவா வைரங்கள் வெண்மையாய் இருக்கும். ஆனா இந்த 'ரெட் ட்யூ' இலேசான சிவப்பு நிறத்தில் இருந்ததால இப்படி ஒரு பேர். கிட்டத்தட்ட பத்து லட்ச ரூபாய் மதிப்புள்ள இந்த வைரத்துக்கு சொந்தக்காரராக இருந்தவர் வேறு யாருமில்லை. தயானந்த் தான். ரெண்டு வருஷத்துக்கு முன்னால் அவருடைய வீட்டு லாக்கரில் இருந்த 'ரெட் ட்யூ' வைரம் காணாமல் போய்விட்டது. தயானந்த் போலீஸில் புகார் கொடுத்தார். போலீஸ் எவ்வளவு முயற்சி பண்ணியும் இருட்டுப் போன அந்த 'ரெட் ட்யூ' வைரத்தைக் கண்டுபிடிக்க முடியலை.... ரெண்டு வருஷத்துக்கு முன்னால் பேப்பர்ல பரபரப்பா அடிபட்ட நியூஸ் இது... அன்னிக்குக் காணாமல் போன ரெட் ட்யூ வைரம் தான்... இன்னிக்குச் சிவப்புப் பனித்துளியா மாறியிருக்கு..''

பால்பாண்டியன் வியர்த்துப் போயிருந்த தன் முகத்தை கர்ச்சிப்பால் ஒற்றிக் கொண்டே சிவப்ரகாசத்தை ஏறிட்டார்.

''ஸார்...! கடந்த சில நாட்களாக நடந்த சம்பவங்களை நினைக்கப் பார்க்கும்போது ஒரே குழப்பமாயிருக்கு. லீலாகிருஷ்ணன் கொலை, தயானந்த் கொலை, யமுனாவை லீலாகிருஷ்ணனோடு சம்பந்தப்படுத்தி போட்டோக்கள், கடிதங்கள், தயானந்த் வருணுக்குப் பணம் கொடுத்தது, கடைசியாய் இந்த சிவப்பு பனித்துளி விவகாரம்... இதெல்லாம் எதுக்குன்னு புரியலை ஸார்...''

''எனக்காக'' என்றார் சிவப்ரகாசம்.

''உங்களுக்காகவா...?''

''யெஸ்...! நீங்க சொன்ன எல்லாமே என்னை நோக்கி எய்யப்பட்ட அம்புகள்.

''எனக்குப் புரியலை ஸார்.''

''தயானந்த்தோட அப்பா நித்தியானந்தம் அரசியல் கட்சியில் ஓர் முக்கியப் புள்ளியாய் இருந்தவர். அந்தக் கட்சி ஆளும் கட்சியாய் இருந்தபோது ஒரு ஐந்து வருஷ காலம் நிதியமைச்சராகவும் இருந்தவர். ஒவ்வொரு வருஷமும் தமிழ்நாட்டுக்கு பட்ஜெட் போடும்போதே தன்னுடைய வீட்டுக்குச் சில கோடிகளை ஒதுக்கிக் கொண்டவர். எதிர்க்கட்சி ஆட்சிக்கு வந்ததும் நித்தியானந்தம் கைது செய்யப்பட்டார். தனிக்கோர்ட் அமைக்கப்பட்டு விசாரணை தொடங்கியது. அந்த தனிக்கோர்ட்டுக்கு நீதிபதியாய் என்னைப் போட்டார்கள். இரண்



டாயிரம் கோடி ரூபாய் ஊழல் செய்ததற்கான ஆதாரங்கள், சாட்சியங்கள், வலுவாய் இருந்ததால் ஏழு வருஷ சிறைத்தண்டனையை என் தீர்ப்பாய்க் கொடுத்தேன். தீர்ப்பைக் கேட்டு கூண்டுக்குள்ளேயே மயங்கி விழுந்த நித்தியானந்தம், ஹாஸ்பிடல் கொண்டு போகும் முன்னரே அடுத்தடுத்து இரண்டு தடவை ஹார்ட் அட்டாக் ஏற்பட்டு இறந்து போனார்... அவர் முறைகேடாகச் சேர்த்த கோடிக் கணக்கான சொத்துக்களை அரசு எடுத்துக் கொண்டது. இதனால் தயானந்துக்கு என்மேல் கோபம், ஆத்திரம். அந்தக் கோபத்தையும் ஆத்திரத்தையும் என்மேல் தைரியமாகக் காட்ட முடியாமல் யமுனாவின் மேல் காட்டி, என்னுடைய குடும்பத்தை வீதிக்கு இழுத்து அவமானப்படுத்த நினைத்தார் தயானந்த். அதுக்காக போட்ட திட்டம்தான் இத்தனையும்..."



பால்பாண்டியன் பிரமிப்பில் உறைந்துவிட்ட விழிகளோடு கேட்டார்.

"ஸார்... இதெல்லாம் உங்களுக்கு...?"

"எப்படி தெரியும்ன்னு கேட்கறீங்களா...? உபயம் ஃபாரன்ஸிக் டிப்பார்ட்மெண்டைச் சேர்ந்த கிராஃபாலஜிஸ்ட் வில்லியம்ஸ். அதுவும் ஒரு மணி நேரத்துக்கு முந்திதான் எல்லா உண்மைகளும் கடச் கடக் கிடைச்சது."

"வில்லியம்ஸ் எப்படி...?"



"எங்க கையில மாட்டினார்ன்னு கேக்கறீங்களா...? உபயம் ஜெனிஃபர்."

"ஜெ... ஜெனிபர்...?"

"எஸ்....! வருணின் புத்தம் புது மனைவி. இன்னிக்கு விடிகாலையில்தான் கல்யாணமே நடந்தது."

"ஜெனிஃபர்.... எப்படி வில்லியம்ஸை...'

பால்பாண்டியன் திகைத்து, திணறிக் கொண்டிருக்கும்போதே போர்டிகோவில் அந்த வெள்ளை நிற அம்பாசிடர் கார் மௌனமாய் வந்து நின்றது. முதல் நபராய் அகில் இறங்க, அவனைத் தொடர்ந்து வில்லியம்ஸ், இரண்டு பேரையும் தொடர்ந்து கடைசியாய் ஜெனிஃபர்.

உள்ளே வந்தார்கள்.

வில்லியம்ஸ் குற்ற உணர்வோடு தலை குனிந்து நிற்க, பால்பாண்டியன் கோபத்தில் இரைந்தார்.

"வில்லியம்ஸ்! என்ன இதெல்லாம்? லீலா கிருஷ்ணனுக்கு எழுதப்பட்ட கடிதங்களில் இருந்தது யமுனாவோட கையெழுத்துதான்னு சொன்னீங்க.. இப்போ இல்லைன்னு சொல்லியிருக்கீங்க... எது உண்மை...?"

"ஸாரி.... ஸார்... அது யமுனாவோட கையெழுத்து இல்லை."

"பின்னே அந்த லெட்டர்களில் இருக்கிற கையெழுத்து யாரோடது...?"

ராஜேஷ் குமார்

"எல்லாமே என்னோட கையெழுத்து தான் ஸார். லீலாகிருஷ்ணனுக்கு யமுனா எழுதின மாதிரி, யமுனாவுக்கு லீலாகிருஷ்ணன் எழுதின மாதிரி, லீலாகிருஷ்ணன் வருணுக்கு எழுதின மாதிரி...இப்படி எல்லா கடிதங்களுமே என்னால் எழுதப்பட்டது தான்... நான் ஒரு கிராஃபாலஜிஸ்ட்டாக இருந்ததால என்னால அப்படி துல்லியமா எழுத முடிந்தது. யமுனாவும் லீலாகிருஷ்ணனும் காதலர்களாக இருந்திருக்காங்கன்னு எல்லாரையும் நம்ப வைக்க வேண்டியது எனக்கிடப்பட்ட கட்டளை."

"கட்டளைக்குச் சொந்தக்காரர் தயானந்த்தானே...?"

"தயானந்த் மட்டும் கிடையாது."

"பின்னே...?"

வில்லியம்ஸ் தயங்க- அகில் கோபமாய் அவனுடைய தோளைத் தட்டினான். "ம்... சொல்லு...! முழுக்க நனைஞ்ச பிறகு இந்த முக்காடு போட்டுக்கற வேலையெல்லாம் வேண்டாம்..."

வில்லியம்ஸ் மறுபடியும் சில விநாடிகள் தயங்கிவிட்டு, மெல்லிய குரலில் தலை குனிந்தபடி சொன்னான்.

"மனோன்மணி..."

பால்பாண்டியனும் யமுனாவும் மட்டும் திடுக்கிட்டுப்போக மற்றவர்கள் முகத்தில் எந்த சலனமும் இல்லை. அதிர்ச்சி விலகாத குரலில் கேட்டார் பால்பாண்டியன்.

"லாயர் மனோன்மணியா?"

"எஸ்...! மனோன்மணி தயானந்த்துக்குத் தாலி கட்டாத மனைவி. லீகல் அட்வைஸர் என்கிற பெயரில் ரகசிய மனைவி. இந்த உண்மை என்னைத்தவிர வெளியுலகத்துல வேற யாருக்கும் தெரியாது. பிசினஸ் சம்பந்தப்பட்ட சில போலிச் சான்றிதழ்களைத் தயாரித்துக் கொடுத்ததன் மூலமா எனக்கும் தயானந்த்துக்கும் பழக்கம் ஏற்பட்டது. தனிக் கோர்ட் நீதிபதியாய் இருந்த சிவப்ரகாசத்தோட குடும்பத்தைத் தெருவுக்கு இழுத்து வந்து அசிங்கப்படுத்தணும்... யமுனா மேல கொலைப்பழி விழணும். அவங்க வீட்ல நடக்க இருக்கிற கல்யாணம் நிக்கணும். காலம் பூராவும் மன அமைதியிழந்து அந்தக் குடும்பம் தவிக்கணும். இதுதான் தயானந்த்-மனோன்மணி கூட்டணியின் எண்ணம். இதைச் செயல்படுத்தற பொறுப்பைப் போன மாசத்திலிருந்தே ஆரம்பிச்சிட்டோம்."

"லீலா கிருஷ்ணனைக் கொலை பண்ணினது யாரு...?"

வில்லியம்ஸ் சில விநாடிகள் மௌனித்து விட்டு பின் குரல் அடைத்துக் கொள்ளச் சொன்னான்.

"நானும் மனோன்மணியும்தான்..."

"தயானந்த்தைக் கொலை பண்ணினது?"

"நான் மட்டுந்தான். தயானந்த் கொலை பண்ணினது நான்தான்னு மனோன்மணிக்குத் தெரியாது."

"சரி... தயானந்தை எதுக்காக கொலை பண்ணினே...?"

"தயானந்த் என்னைத் தீர்த்துக்கட்ட திட்டம் போட்டிருந்தார். நான் முந்திக்கிட்டேன்."

"உன்னை அவர் ஏன் தீர்த்துக்கட்ட நினைச்சார்?"

"அவரோட எல்லா விஷயங்களும் எனக்குத் தெரியும். முக்கியமா தன்னோட மனைவி வைசாலியை அவரே கொலை பண்ணி, வீடியோ படம் எடுத்தது எனக்குத் தெரியும். அந்தக் கொலைப்பழியை தன்னுடைய பிசினஸ் எதிரியான கீர்த்திவாசனின் மேல் சுமத்த முயன்றதும் எனக்குத் தெரியும்."

"தயானந்த் தன்னோட மனைவியைக் கொலை செய்ய என்ன காரணம்...?"

"ரெண்டு காரணம்...! தயானந்துக்கும் மனோன்மணிக்கும் இருந்த உறவு வைசாலிக்குத் தெரியவந்தபோது அவ எரிமலையாவே மாறிட்டா. டைவோர்ஸ் கேட்டு கோர்ட்டுக்குப் போகப் போறதா சொன்னா. தயானந்துக்கு அது பிடிக்கலை. வைசாலியைத் தீர்த்துக்கட்ட திட்டம் போட்டார். மனோன்மணியிடம் அவர் ஆலோசனை கேட்டபோது வைசாலியோட மரணத்தை வீடியோ காஸட்ல பதிவு பண்ணச் சொன்னது அவள்தான். பிறகு அந்த கேஸட் தபாலில் வந்த மாதிரி போலீஸில் சொல்லி, கீர்த்திவாசனின் மேல் கொலைப்பழியைப் போட தயானந்தும் மனோன்மணியும் முயற்சி பண்ணினாங்க. தகுந்த ஆதாரம் இல்லாத காரணத்தால போலீஸ் கீர்த்திவாசனை நெருங்க முடியலை... அதனால தயானந்துக்கு இன்னமும் கோபம். கீர்த்திவாசனை

"கன்சல்டிங் ஃபீஸ் நூறு ரூபாய் தானே ஏன்? இருநூறு கேட்கறீங்க?"
"முதலில் நான் தந்த மருந்து சரியில்லேன்னு சொன்னீங்களே அந்த இன்சல்டிங் ஃபீஸ் நூறு."
- ம. ஜோசப் காமராஜ்.



பழிதீர்த்துக்க நேரம் பார்த்துக் கொண் டிருந்தபோதுதான் வருண் தயானந்த் கம்பெனியில் வேலைக்குச் சேர்ந்தான். ஏற்கெனவே மும்பையில் ரெண்டு வருஷம் ஜெயிலில் இருந்துட்டு வந்த வருணை, தயா னந்த் தன்னுடைய திட்டத்துக்குப் பயன் படுத்திக்கப் பார்த்தார். வருண் ஒத்துக்கலை. வருணைத் தன்னோட பிடிக்குள் மாட்டி வைக்க பத்து லட்ச ரூபாய் பணம் கொடுத்து தன்னுடைய மனைவி வைசாலியின் மரணத் திலுள்ள உண்மையையாவது கண்டுபிடித்து கொடுக்கச் சொன்னார். பணத்தை வாங் கிட்டு, வருணும் பர்வதாவும் புறப்பட்டுப் போனதும், என்னை மனோன்மணி டெலி போனில் கூப்பிட்டு, வருணோட வீட்டு அட்ரஸைச் சொல்லி அந்த பத்து லட்ச ரூபாய் பணத்தை, எப்படியாவது எடுத்துட்டு வந்துடுன்னு சொன்னாங்க. நான் வருணை ஃபாலோ பண்ண ஆரம்பிச்சேன். வருணும் பர்வதாவும் ஒரு ஹோட்டல்ல சாப்பிட்டுக் கிட்டு இருக்கும்போது அவனை பயமுறுத் தறதுக்காக ஒரு துண்டு சீட்டில் அசரீரி என்கிற பெயரில் பேரர் மூலமா ஒரு எச் சரிக்கை கடிதத்தைக் கொடுத்து விட்டேன்."

பால்பாண்டியன் குறுக்கிட்டுக் கேட் டார். "அப்படீன்னா வருண் தன்னோட வீட்ல வெச்சிருந்த பத்து லட்ச ரூபாய் பணத்தை எடுத்தது நீதான்."

"ஆமா... ஸார். அந்தப் பணத்தை தயானந்த்கிட்டே கொண்டு போய் மறுபடி யும் குடுத்துட்டு வர புறப்பட்டேன். நான் அவரைப் பார்க்கப் போனபோது டெலி போன்ல மனோன்மணிகிட்டே என்னைத் தீர்த்துக்கட்டறதைப் பத்தி பேசிட்டிருந்தார். மனோன்மணி மறுத்துப் பேசியும் அவர் கேட்கலை. அதுக்கப்புறம்தான் அவரைத் தீர்த்துக்கட்ட கத்தியைக் கையில் எடுத்தேன். எப்படியும் இந்தக் கொலைப்பழி வருணின் தலையில்தான் விடியும்னு நினைச் சேன். அதே மாதிரி நடந்தது. ஆனா ஜெனிஃபர் மூலமா போலீஸ்ல மாட்டிக்கிட் டேன்."

இன்ஸ்பெக்டர் பால்பாண்டியனின் பார்வை இப்போது ஜெனிஃபரின் மேல் விழ அவள் ஒரு சின்ன புன்னகையோடு தொடர்ந்தாள்.

"நேத்து ராத்திரி அவசர கல்யாண விஷய மாய் வருணைப் பார்த்துப் பேசறதுக்காக சிந்தாதிரிப்பேட்டையில் இருக்கிற வருணின் வீட்டுக்குப் போனேன். வருணின் வீடு பூட்டிக் கிடக்கவே வெயிட் பண்ணினேன். இருட்டில் ஒரு ஓரமாய் நான் நின்னுட்டு இருந்தது தெரியாமல் வில்லியம்ஸ் நான் கைந்து தடவை பைக்கில், அந்த வழியே, மெதுவாய் ஓட்டிப் போனார். அப்போது அவரோட பேர் வில்லியம்ஸ்னு எனக்குத் தெரியாது. வருண் வர லேட்டாகவே, நான் ஹாஸ்டலுக்கு ஃபோன் பண்ணி விஷயத் தைச் சொல்றதுக்காக தெருமுனையில் இருந்த டெலிபோன் பூத்தை நோக்கிப் போனேன். நாணயம் போட்டுப் பேசுகிற டெலிபோன் பூத் அது. பூத்துக்கு வெளியே பைக் ஸ்டாண்ட் போட்டு நிறுத்தியிருக்க பூத்துக்கு உள்ளே வில்லியம்ஸ் பேசிக் கொண்டிருப்பது தெரிந்தது. கண்ணாடிக் கதவு சரியாய்ச் சாத்தாத காரணத்தால் வில் லியம்ஸ் பேசியதில் சில வார்த்தைகள் என் காதில் விழுந்தன. 'ஜட்ஜ் வீட்டு மருமகள் யமுனா நாளைக்கு இந் நேரம் போலீஸ் லாக்கப்பில் இருப்பா. வீட்டு மானம் தெரு வுல இருக்கும். என்னிக்கோ காணாமே போயிட்ட சிவப்புப் பனித்துளியை எங் கேன்னு கேட்டு யமுனாவைப் படாதபாடு படுத்தப் போறாங்க...' இது மாதிரியான வார்த்தைகள் என் காதுகளைத் தொட்டா லும் நான் வருணைப் பற்றிய ஞாபகத்தில் இருந்ததால் மனசுக்குள் அந்த வார்த்தைகள் இறங்கலை. ஆனால் நான் வருணைச் சந்தித்து கல்யாண விஷயமாய்ப் பேசிவிட்டு பஸ்ஸில் ஹாஸ்டலுக்குத் திரும்பிப் போய்க் கொண் டிருந்தபோது பஸ்ஸை வேகமாய்க் கடந்து வில்லியம்ஸின் பைக் போயிற்று. அப்போது தான் என் மனசுக்குள் ஒரு சின்ன சந்தேகம் முளைத்தது. டெலிபோனில் பேசிய வார்த் தைகள் மறுபடியும் என் மூளைக்குள் ஓடி யது. எனக்கு உடனடியாய் ஞாபகத்துக்கு வந்தவர் அகில்.

"அகில் நான் வேலை பார்க்கும் ஆபீஸில் என் உயர் அதிகாரியாய் இருப்பவர். அவரு டைய மனைவி பெயர் யமுனாங்கிறதும் அகிலோட ஃபாதர் ஒரு ஜட்ஜாயிருந்து ரிடையரானவர்ங்கிறதும் எனக்குத் தெரியும். வில்லியம்ஸ் டெலிபோனில் குறிப்பிட்டது

அந்தக் குடும்பமாக இருக்குமோன்னு மனசுக்குப்படவே பஸ்ஸுக்கு முன்னாடி போயிட்டிருந்த வில்லியம்ஸின் பைக் நெம்பரை நோட் பண்ணினேன். பஸ்ஸை விட்டு இறங்கி ஹாஸ்டல் போய்ச் சேர்ந்ததும் முதல் வேலையாய் அகிலுக்கு ஃபோன் பண்ணி விஷயத்தைச் சொல்லி பைக் நெம்பரைக் கொடுத்தேன்."

ஜெனிஃபர் பேச்சை நிறுத்த அகில் பேச்சைத் தொடர்ந்தான்.

"என் ஆபீஸில் வேலை பார்க்கும் ஜெனிஃபர் மூலமா எனக்கு தகவல் கிடைச்சதும் யமுனாவுக்குத் தெரியாமல் அப்பாவை சந்திச்சுப் பேசினேன். அப்பா தனிக் கோர்ட் நீதிபதியாய் இருந்தபோதே இது மாதிரியான பிரச்னைகள் வரும் என்று எதிர்பார்த்தவர். எனவே அவர் அலட்டிக் கொள்ளாமல் போலீஸ் ஐ.ஜி.க்கு ஃபோன் செய்து விவரம் சொல்ல, பைக் நெம்பரை வைத்து, காலை எட்டு மணிக்குள் வில்லியம்ஸை மடக்கி விட்டோம். வெளியே விஷயத்தை விடாமல் ஒரு தனியறையில் வில்லியம்ஸை அடைத்து வைத்து தேர்ட் டிகிரி ட்ரீட்மெண்ட் கொடுத்து விசாரித்ததில் எல்லா உண்மையும் வெளிவந்து விட்டது. லாயர் மனோன்மணி இப்போது போலீஸ் கஸ்டடியில்...."

பால்பாண்டியன் வில்லியம்ஸிடம் திரும்பினார். "யமுனா கோவிலிலிருந்து வீட்டுக்குத் திரும்பும் போது பின்தொடர்ந்து வந்த தாடிக்காரன் யார்?"

"அது நான்தான் ஸார்...! யமுனாவைக் கலவரப்படுத்தறதுக்காக தாடியை ஒட்ட வெச்சுக்கிட்டு ஃபாலோ பண்ணும்படி மனோன்மணி சொல்லியிருந்தா. அதே மாதிரி யமுனாகிட்டே சிவப்புப் பனித்துளி கேட்டு ஃபோன் பண்ணினதும் நான்தான்."

"அந்த பத்து லட்ச ரூபாய் இப்போ யார்கிட்டே இருக்கு...?"

"மனோன்மணிகிட்ட ஸார்."

பால்பாண்டியன் ஒரு பெருமூச்சை வெளியேற்றி விட்டு சிவப்ரகாசத்தை ஏறிட்டார்.

"ஸாரி... ஸார்...! உங்க வீட்டு மருமகள் யமுனா மேலே தேவையில்லாமே சந்தேகப்பட்டு பிரச்னைகளை உண்டுபண்ணிட்டேன். யமுனாகிட்டே நான் மன்னிப்புக் கேட்கணும். கொஞ்சம் கூப்பிடறீங்களா ஸார்...?"

"அம்மா யமுனா...!" சிவப்ரகாசம் உள்ளே பார்த்துக் குரல் கொடுக்க யமுனா வெளிப்பட்டாள்.

பால்பாண்டியன் மன்னிப்புக் கேட்கும் தொனியில் ஏதோ பேச முயல யமுனா கையமர்த்தினாள்.

"வேண்டாம் ஸார்... வயசுல பெரியவரான நீங்க என்கிட்ட மன்னிப்புக் கேட்கக் கூடாது. கேட்டேயாகணும்னு மனசுக்குத் தோணினா, போற வழியில் பஞ்சமுக ஆஞ்சநேயர் கோயில் இருக்கு. ஒரு நிமிஷம் உள்ளே போய்ட்டு போங்க. போதும்..."

"ஷ்யூர்" என்று சிரித்தபடியே பால்பாண்டியன் எழுந்து கொள்ள ஜெனிஃபர் தயக்கக் குரலோடு சிவப்ரகாசத்திடம் நிமிர்ந்தாள்.

"ஸார்...! என்னோட கணவர் வருண்?"

சிவப்ரகாசம் சிரித்தார். "வருணை ரிலீஸ் பண்ணியாச்சும்மா! இப்போ இங்கேதான் வந்துட்டிருக்கார். புதுசா கல்யாணம் பண்ணிக்கிட்ட உங்க ரெண்டு பேருக்கும் மத்தியான விருந்து இங்கேதான்."

அகில் யமுனாவை ஏறிட்டான்.

"யமுனா! இன்னிக்கு உன்னோட சமையல் அமர்க்களமாய் இருக்கணும்... போய் சமையல் வேலையைக் கவனி."

"எக்ஸ்க்யூஸ்மீ..." என்றாள் ஜெனிஃபர்.

யமுனா நின்றாள். "என்ன...?"

"கிச்சன்ல ஹெல்ப் பண்ண நானும் வரலாமா?"

"தாராளமாய்..." ஜெனிஃபரை கட்டிப் பிடித்து உள்ளே கூட்டிப் போனாள் யமுனா. சமையலறை மணக்க ஆரம்பித்தது.

(முற்றும்)

---

**"டூவீலரை வாங்கின வேகத்தில் வித்துட்டியே... ஏன்?"**

**"டூவீலர் கடன்ல கிடைத்த மாதிரி, பெட்ரோல் கடனில் கிடைக்கலையே!"**

**- எஸ். வீமராஜன்.**



# நடக்குமென்பார், நடக்கும்!

## ஜூலை 11 முதல் 17 வரை



**மேஷம் :** இந்த வாரம் அசத்தல் வாரம். உங்க பேச்சாற்றல், முகவசிகரம் அதிகரிக்கும். குடும்பத்துல இருந்து வந்த சலசலப்பு எஸ்கேப்பாகி மகிழ்ச்சி நிலவும், அரசியல்வாதிகளுக்கு அடிக்குது லக்கி பிரைஸ். புதுசா பதவி தேடி வரலாம். பார்ட்னர்ஷிப்ல தொழில் பண்ற வங்களுக்கு லாபம் கொட்டும். இருந்தாலும் வேலையாட்கள் மூலம் சின்ன சின்னப் பிரச்னைகள் வர வாய்ப்பிருக்கு. பேச்சில நிதானம் அவசியம். பயணத்துல பாதுகாப்பு முக்கியம். ஏதாவது விபரீதம் ஏற்பட வாய்ப்பிருக்கு. ஜாக்கிரதை.



**ரிஷபம் :** தூள் கிளப்புற 'லகானா'ல மகிழ்ச்சியில துள்ளற அமீர்கான் மாதிரி சந்தோஷத்துல திக்கு முக்காடப் போறீங்க. பணம் பல வழிகள்ல பாக்கெட்டை நிரப்பும். சிலருக்குத் திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளுக்குச் சான்ஸ் இருக்கு. அதுக்காக லாட்டரி கடை வாசல்ல தவம் கிடக்காதீங்க. பெண்கள் தாங்கள் நினைச்சதை இந்த வாரம் நிறைவேற்றிடுவாங்க. உஷ்ண சம்பந்தமான நோய்கள் வர வாய்ப்பிருக்கு. கவனம் தேவை. அரசியல்வாதிகள் அடக்கி வாசிக்கறது நல்லது. சோதனை காலம் சாமியோவ்!



**மிதுனம் :** ஸாரி... கலைஞர் கைது மாதிரி இந்த வாரம் துன்பப் படலம்தான். மனசுல குழப்பம், சஞ்சலம், அலைச்சல் உடல் நலக்குறைவு எல்லாம் வந்து இம்சை பண்ணும். பணம் பஞ்சாகப் பறக்கும். வீண் செலவுகளைத் தவிர்க்கறது நல்லது. கொடுக்கல் வாங்கல்ல எச்சரிக்கையா இருக்கறது நல்லது. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குச் சொல்லிக் கொள்ளும்படியான நிலை இல்லை. இருந்தாலும் மனசுல துணிச்சலும், தன்னம்பிக்கையும் அதிகரிக்கும். எதிலேயும் நிதானம் அவசியம்.



**கடகம் :** உங்க எதிரிகள் எல்லாம் அப்ருவரா மாறி, உங்களுக்கு உதவி செய்வாங்க. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் உயரும். பெண்கள் புதிய ஆடைகள், நகைகள் வாங்க வாய்ப்பிருக்கு. (கணவர்களே பர்ஸ் உஷார்!) போட்டிப் பந்தயங்களில் வெற்றி தேடி வரப் போகுது. ஜமாயுங்க. செலவுகள் எகிறும். தந்தை நலன்ல கவனம் அவசியம். ஆஸ்பத்திரி செலவுகள் வந்து எரிச்சல் தரலாம். ஜாக்கிரதை.



**சிம்மம் :** மத்திய அமைச்சர்களைக் கைது செய்து வாங்கிக் கொண்ட தமிழக அரசு மாதிரி உங்களை எதிர்த்தவங்க வாயடைச்சுப் போவாங்க. பண நடமாட்டத்துக்குப் பஞ்சமில்லை. எந்தக் காரியத்தையும் தலைகீழா நின்னாவது முடிச்சுடுவீங்க. குடும்பத்துல மகிழ்ச்சி பாண்டி ஆடும். அரசியல்வாதிகளுக்கு மதிப்பு மரியாதை எவரெஸ்டா உயரும். வெளிநாட்டுல இருந்து நல்ல செய்தி வந்து கதவைத் தட்டும். வேலை இல்லாம ஊர் சுத்திட்டு இருந்தவங்களுக்கு நல்லதொரு வாய்ப்பு வரப் போகுது. ஜமாயுங்க.



**கன்னி :** உங்களையே அறியாமல் இந்த வாரம் புனிதமான காரியங்களுக்கு மனசு இழுக்கும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு 'அடேங்கப்பா' வாரம். வாய்ப்புகள் வந்து குவியும். சின்ன சின்னப் பிரச்னைக்கெல்லாம் கோதாவில இறங்கின கணவன் மனைவிக்குள்ள இப்ப அமைதி நிலவும். மனசில துணிச்சலும், தன்னம்பிக்கையும் தானாகப் புகுந்து ஆட்டுவிக்கும். வழக்கு விவகாரங்கள்ல வெற்றிதான்.

பெரியவங்களை மதிச்சு அவங்க சொல்றபடி நடந்தா சங்கடங்கள் ஜூட்.



**துலாம் :** குரு, புதன், சந்திரன், கேது எல்லா கிரகமும் உங்களையே லுக் விடறதால அறிவாற்றல், சாமர்த்தியமெல்லாம் அதிகரிக்கும். வெளிநாட்டுல இருந்து நல்ல தகவல் வந்து சேரும். கலைத் துறையைச் சேர்ந்தவங்க முன்னணிக்கு உயருவாங்க. சிலருக்குத் திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகள் காத்திருக்கு. குடும்பத்துல 'டும்டும்' மாதிரியான சுபகாரியம் நடக்க வாய்ப்பிருக்கு. பேச்சிலயும் செயல்லயும் பதற்றம் கூடாது. வாரப் பின் பகுதியில பண வரவுக்கு சான்ஸ் இருக்கு.



**சென்னை அண்ணா மேம்பாலத்தில் வைக்கப்பட்டுள்ள 'ஃபாண்டா', 'எஸ்.எஸ்.ஐ. கம்ப்யூட்டர்ஸ்', 'நாயுடு ஹால்' மூன்று விளம்பரப் பலகைகளிலும் மின்னிக் கொண்டிருக்கும் த்ரிஷாவின் மகர ராசிக்கு சிவப்பு நிறம் லாபம் கொண்டு வருமாம்!**



**விருச்சிகம் :** தமிழக அரசியல் நிலைமை மாதிரிதான் உங்க நிலையும் தவிப்புல இருக்குது. எந்தக் காரியத்தையும் ஒரு முறைக்குப் பலமுறை யோசிச்சு செயல்படுங்க. வீண் வாக்குவாதம் சண்டை சச்சரவுகள்ல தலை காட்ட வேண்டாம். 'துஷ்டனைக் கண்டால் தூர விலகு'ங்கற மாதிரி இந்த மாதிரி விவகாரங்கள் நடந்தா நிமிர்ந்து பார்க்காம போறது நல்லது. செலவுகள் கட்டுக்கடங்காம எகிறும், அடக்கி வாசிங்க.



**தனுசு :** உங்க மதிப்பு செல்வாக்கெல்லாம் உயரப் போகுது. அதிர்ஷ்ட வாய்ப்புகளுக்கும் வாய்ப்பிருக்கு. பதவி உயர்வு, இடமாற்றம் சம்பள உயர்வுன்னு பெறவும் வாய்ப்பிருக்கு. டாக்டர்களுக்குப் பாராட்டு குவியும். இரும்பு, எஃகு, எண்ணெய் உலோக பிசினஸ் லாபம் தரும். பெண்களுக்குச் சிறு சிறு பிரச்னைகள் வரும். சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவங்க எச்சரிக்கையோட இருக்கறது நல்லது. மின்சாரம், நெருப்பு பக்கம் போகும்போது கவனமா இருங்க.



**மகரம் :** உங்க மதிப்பும் செல்வாக்கும் ஜெட் வேகத்துல உயரப் போகுது. உங்க நிர்வாகத் திறமையைப் பார்த்து எல்லாரும் மூக்கு மேல கை வைக்கப் போறாங்க. அரசியல்வாதிகளுக்கு ஆதரவு கூடும். சிவப்பு நிறப் பொருட்கள் லாபம் கொண்டு வரும். சட்டம் இராணுவம் காவல் போன்ற துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு பட்டம், பாராட்டு கிடைக்கும். இதனால மகிழ்ச்சியில திளைக்கப் போறீங்க. வார இறுதியில மனசுக்கினிய சம்பவங்கள் நடக்கும்.



**கும்பம் :** குடும்பத்துல குதூகலத்துக்குப் பஞ்சமிருக்காது. மனசுக்கு இனிமையான சந்தர்ப்பங்கள் நிகழும். ஜாலி டூர் அடிக்க வாய்ப்பிருக்கு. வேலை தேடிட்டு இருந்தவங்களுக்கு வேலை வந்து கதவைத் தட்டும். சிலருக்குப் பதவி உயர்வு, இடமாற்றம் கிடைக்கும். சிலருக்கு விருது, பட்டம் தேடி வரும். கணவன் மனைவிக்குள்ள உறவு நிலை சீரா இருக்கும். கூடப் பிறந்தவங்க மூலமா சில நல்ல காரியங்கள் நடக்கப் போகுது. வியாபாரிகளுக்கு ஓகோன்னு லாபம் வரப் போகுது.



**மீனம் :** உங்க செயல் திறமை சாமர்த்தியம், முக அழகு எல்லாம் வெளிப்படப் போகுது. மனசு இதனால மகிழ்ச்சியில் துள்ளப் போகுது. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குப் பாராட்டுக்குப் பஞ்சமிருக்காது. வியாபாரிகள் அகல கால் வைக்க வேண்டாம். அலைச்சல் தவிர்க்க முடியாது. இதனால உடல் நலமில்லாம போக வாய்ப்பிருக்கு. எந்த வேலை செய்தாலும் அதுல முழுக் கவனத்தோட செஞ்சா நல்ல வளர்ச்சி காணலாம். பயணத்தைத் தவிர்ப்பது நல்லது. செலவு எகிறும். பர்ஸ் பத்திரம். தொழிலாளர்களுக்கு அதிர்ஷ்ட வாய்ப்புகள் இருக்கு.

## அக்னிசர்மா பக்கம்

# "எனக்குத் தார்மீகக் கோபம் வருகிறது!"



• அரவிந்தன்

"நான் பிறந்து, வளர்ந்தது சிங்கப்பூரில். அங்கே சட்டத்தின் மீது மக்கள் அனைவருக்கும் மதிப்பும், மரியாதையும் உண்டு. தெரு கூட்டுபவர், ஒரு புகார் கொடுத்தால்கூட, உடனடியாக, போலீஸ் சட்டப்படி நடவடிக்கை எடுக்கும். அதேபோல, நாட்டின் ஜனாதிபதி தவறு செய்தாலும், சட்டம் வளைந்து கொடுக்காது. அவருக்கும் சட்டப்படி தண்டனை நிச்சயம். ஆனால், இங்கே, போலீஸ் நடந்துகொண்ட முறை என்னைப் பெரும் அதிர்ச்சிக்குள்ளாக்கியிருக்கிறது. இதுபோல்கூட நடக்குமா?" என்று கேட்கிறார் அரவிந்தன். கலைஞர் கருணாநிதியின் மாப்பிள்ளை; கனிமொழியின் கணவர்.

"என் உருவம் என்ன இலேசில் தூக்கி விடக்கூடிய ஒன்றா? என்னையே தூக்கி, கவரில் மோதினார்கள் போலீஸ்காரர்கள். இதைக் காண்கிறபோது, இங்குள்ள அரசாங்கம், சட்டம், காவல்துறை என அனைவரது மீதும் எனக்குத் தார்மீகக் கோபம் வருகிறது" என்று கூறும் அரவிந்தன், சிங்கப்பூரிலிருந்து இரண்டாண்டு ஒப்பந்தத்தில் சென்னைக்கு வந்தார். அண்மையில், அந்தக் கம்பெனியின் சிங்கப்பூர் அலுவலகத்துக்கு மாற்றப்பட்டிருக்கிறார். 'தமிழ்நாட்டில் செட்டில் ஆகும் எண்ணம் இவருக்கு இல்லை.

அரவிந்தனுக்கு இலக்கிய ஆர்வம் அதிகம். நிறைய படிக்கிற பழக்கம் உண்டு. கர்நாடக இசை பிடிக்கும். எழுத்தாளர் சுஜாதா நெருங்கிய நண்பர். பிரபஞ்சன், சா. கந்தசாமி, மனுஷ்ய புத்ரன் என்று இலக்கிய வட்டாரத்தில் பலரும் இவருடைய நண்பர்கள்தான்.

"எனக்கு எழுத்தில் ஆர்வமில்லை. சில புத்தக விமர்சனங்கள் எழுதியிருக்கிறேன். அவ்வளவுதான்" என்கிறார் அரவிந்தன்.

"சிங்கப்பூரில் பொது வாழ்க்கையில் இருப்பவர்கள் மீதுதான் மீடியாவின் கவனம் இருக்கும். சிங்கப்பூரின் பிரதமர் குடும்பத்தினர் பற்றி, பத்திரிகைகளில் செய்தி வராது. ஆனால் இங்கே, பொதுவாழ்வில் இருந்தால், அவரது தனிப்பட்ட வாழ்க்கைகூட பொதுவாழ்க்கையின் அங்கமாகவே பார்க்கப்படுகிறது. இது எனக்கு விசித்திரமாக உள்ளது."

***"மாமனார் கலைஞர் பற்றி?"***

"அவர், இந்நாட்டு மக்களுக்கு மட்டு



அடைக்கப்பட்டு, உடல் தளர்ந்து வெளியில் வந்த பின், நடந்த பத்திரிகையாளர் சந்திப்பில்கூட அது வெளிப்பட்டபோது, நாடே ரசித்தது!"

"இரண்டு பேரும் சந்தித்துக் கொள்ளும்போது, எதைப் பற்றிப் பேசுவீர்கள்?"

"இருவரும் மணிக் கணக்கில் அமர்ந்து பேச, அவருக்கு ஏது நேரம்? பேசிக் கொள்ளக் கிடைக்கிற சிறிது நேரத்தில், அரசியல் - குறிப்பாக தமிழ்நாடு அரசியல்- பற்றிப் பேசுவோம். அவர் கம்ப்யூட்டர், இன்டர்நெட் சம்பந்தமாக லேட்டஸ்ட் என்ன என்று விசாரிப்பார்."

மில்லை; வீட்டிலுள்ள அனைவருக்கும்கூட 'தலைவர்'தான். அப்படித்தான் அழைக்கிறார்கள். எனக்கு இது புதுசு. நான் அவரைப் பற்றிப் பேசுகிற போது, 'மாமா' என்று குறிப்பிட்டால், கேட்பவர்களுக்குச் சட்டென்று புரிவதில்லை. அவரது கடுமையான உழைப்பும், தோல்விகள், நடங்கல்கள் கண்டு சோர்ந்து போகாத மனோதைரியமும் வியப்பூட்டும் விஷயங்கள். நான் மட்டுமின்றி, இந்த நாடே அவரிடம் ரசிக்கிற இன்னொரு விஷயம். அவரது நகைச்சுவை உணர்வு. பாருங்களேன்! இத்தனை அமர்க்களம் நடந்து, சிறையில்

"நீங்கள் சிங்கப்பூரில் இருந்த சமயம், முதலமைச்சராக இருந்த கலைஞர் உங்கள் வீட்டுக்கு வந்தாரே!"

"அது ஒரு சந்தோஷமான சந்திப்பு. அப்போது கனி(மொழி)யின் பிறந்த நாள் வந்தது. ஆனால், அப்பா, மகளுக்குப் பிறந்த நாள் பரிசு ஏதும் வாங்கி வரவில்லை. இதைச் சுட்டிக் காட்டி, கனியை நான் கிண்டலடிப்பது உண்டு" என்று சிரித்தார் அரவிந்தன்.

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**

படம்: **யோகா**

## கல்கி வைர விழா வாசகர் திட்டம் – 1

**வா**சக வைரங்களே!

அமரர் கல்கியின் எழுத்துக்களால் ஈர்க்கப்பட்டு, தங்கள் குழந்தைகளுக்கு கல்கி புனைந்த கதாபாத்திரங்களின் பெயர்கள் சூட்டி மகிழ்ந்தவர்கள் பலர்!

வானதி, குந்தவை, பூங்குழலி, வந்தியத்தேவன், தாரிணி, சிவகாமி... போன்ற பெயர்களை நீங்கள் சூடியிருந்தாலும், உங்களுக்குத் தெரிந்தவர்கள் வைத்துக் கொண்டிருந்தாலும், தகுந்த ஆதாரங்களோடு எங்களுக்கு அனுப்பி வைத்தால், அந்த 'வாழும்' கல்கி கதாபாத்திரங்களை 'கல்கி'யில் அறிமுகப்படுத்த ஆவலாக இருக்கிறோம்.





நன்றாகவே தெரிந்தன.

கலைஞர் மிக மகிழ்ச்சியாக குடும்பத்தினருடன் நடந்து வருவது போன்ற காட்சிகளை முதலில் காட்டினார்கள். போலீஸ் பிடியில் சிக்கித் தவிக்கும் கலைஞர் 'சன்' தொலைக்காட்சியில் காட்டப்படும்போது



• பி. சந்திரசேகரன்

# போலீஸ் வீடியோ ஒட்டு வேலை!

**– தடய அறிவியல் நிபுணர் டாக்டர் பி. சந்திரசேகரன்**

"கலைஞர் கருணாநிதி கைதானபோது நடந்த சம்பவங்கள் குறித்து போலீஸ் வெளியிட்டுள்ள வீடியோ படங்களில் உள்ள சில காட்சிகள் சரியான ஒட்டு வேலை'' என்கிறார் தடய அறிவியல் நிபுணர் டாக்டர் பி. சந்திரசேகரன். தற்போது ராஜஸ்தான் மாநில சட்டப் பல்கலைக்கழகத்தில் தடய அறிவியல் துறை தலைவராக இருக்கும் சந்திரசேகரனை இது பற்றி கொஞ்சம் விளக்கமாகச் சொல்லும்படி கேட்டோம்.

"கருணாநிதி அவர்கள் கைது செய்யப்படும்போது நடந்தவற்றை நான் முதலில் ஸ்டார் தொலைக் காட்சியில்தான் பார்த்தேன். 'சன்' தொலைக்காட்சியில் இருந்து பெறப்பட்ட அவை உலகமெங்கும் உள்ள தமிழர்களை அதிர்ச்சி கொள்ளச் செய்தது. இரண்டு நாட்கள் கழித்து ஜெயா தொலைக்காட்சியில் சில காட்சிகளைப் போட்டுக் காண்பிப்பதாக நண்பர்கள் சொன்னார்கள். அவற்றையும் பார்த்தேன். திருப்பிப் போட்டுக் கொண்டே இருந்ததால் பார்க்க, பார்க்க, அதிலிருந்த ஒட்டைகள் போட்டிருக்கும் வெள்ளை சட்டைக்கும் போலீஸ் வீடியோவில் கலைஞர் போட்டிருக்கும் சட்டைக்கும் சில வித்தியாசங்கள் இருக்கின்றன. எவ்வளவு உறுதியான மனிதராக இருந்தாலும் அர்த ராத்திரியில் கைது என்றால் அதன்பாதிப்பு முகத்தில் இருக்கத்தான் செய்யும். போலீஸ் வீடியோவில் வருவது ஏதோ சந்தோஷமான சூழலில் பகலில் எடுத்த காட்சிதான். ஒட்டு வேலையில் திணிக்கப்பட்டிருக்கிறது. அந்தப் படம் எடுக்கப்பட்ட நேரம் மற்றும் படத்திலுள்ள வெளிச்சம் ஆகியவற்றை ஒப்பிட்டுப் பார்க்கும்போது, ஒட்டு வேலை மிகத் தெளிவாகத் தெரிகிறது.

இரண்டாவதாக முரசொலி மாறன் போலீஸ் அதிகாரி முகமது அலி முகத்தில் குத்துவது போன்ற காட்சி. இதுவும் பல முறை காட்டப்படுகிறது. அந்தக் காட்சியில் காட்டப்படும் கை ஒட்டு வேலை (அனிமேட்). ஒருவரை அடிக்கும்போது அடிப்பவரின் கையில் 'V' வடிவம் உருவாகும். அந்தச் செயலை செய்யும் போது, கையின் இயற்கையான அசைவு அப்படித்தான் இருக்கும். ஆனால் அந்த அனிமேடட்

கரங்கள் இயங்குவது, மிகவும் இயந்திரத்தன மாகவும், இயற்கைக்கு முரணாகவும் இருப்பது பளிச்சென்று தெரிகிறது. அந்தக் கையில் உள்ள வெளிச்சமும், சுற்றியிருப்பவர்களின் முகத்தில் விழும் வெளிச்சமும் அந்தக் காட்சி இரண்டு வேறுபட்ட காட்சிகளைக் கொண்டு உருவாக்கப்பட்டது என்பதைக் காட்டிக் கொடுக்கிறது. இது தவிர அடி வாங்குவதாகச் சொல்லப்படும் போலீஸ் அதிகாரி, எந்தவிதமான அசைவும் இல்லாமல் நின்றிருப்பது அந்தக் காட்சி ஒரு இரண்டு டைமென்ஷன் அனிமேடட் காட்சி என்பதை உறுதி செய்கிறது. அப்போது வரும் சப்தம் சரியான டப்பிங் வேலை.

அது போலவே மாறனைக் குண்டு கட்டாகத் தூக்கிச் செல்லும்போது போலீஸ்காரர் தலையில் அடிக்கும் காட்சி. எந்த ஒரு மனிதனும் இயற்கையாகவே தன்னை விடுவித்துக் கொள்ள விரும்பும்போது அப்படி கை, கால்களை இயக்குவது இயல்பு. திறமையான எடிட்டிங் மூலம், பல முறை போலீஸ் தலையில் அடிப்பது போல காட்டப்படுகிறது. போலீஸ் அதிகாரி கலைஞர் கையைப் பிடித்து அழைத்து வருவது அவரது வீடல்ல; அது ஓர் அலுவலகம்.

**ரா**ஜீவ் காந்தி கொலை வழக்கு விசாரணையின் போது பல வீடியோ படங்களைப் போட்டு அலசிப் பார்க்கும் வாய்ப்பு கிடைத்தது. ஒரு வீடியோ காட்சியில் வெளிப்படுத்தப்படும் லைட்டிங், ஒளி, ஆகியவற்றைக் கொண்டு எதாவது மோசடி வேலை செய்திருந்தால் சுலபமாகக் கண்டுபிடிக்க முடியும் என்பது அப்போது எங்களுக்குப் புரிந்து போயிற்று.

கலைஞர் பற்றிய வீடியோ படம் 40 மணி நேரம் தாமதமாகப் போடப் பட்டது என்பதும் குறிப்பிடத்தக்கது. இப் போது விஞ்ஞானம் இன்னமும் முன்னேறி இருப்பதால் மோசடிகளும் அதிகமாகி இருக்கின்றன. கலைஞர் கைது விவகாரத்தில் போலீஸ் தரப்பில் வெளியாகியுள்ள மொத்த வீடியோ தொகுப்பையும் ஒரு நிபுணரின் பரிசோதனைக்கு அனுப்பினால் இன்னும் விளக்கமாகவே சொல்ல முடியும்.

— தில்லப்பா

# ஆர்டர்! ஆர்டர்!!

**இ**ந்திய கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த ஸ்டாலின் குணசேகரன், 'விடுதலை வேள்வியில் தமிழகம்' என்ற நூலை எழுதியிருக்கிறார். இதற்கு முன்னுரை எழுதியதோடு, 'இந்தப் புத்தகத்தை என் தலைமையில் தான் வெளியிட வேண்டும்' என்று அன்புக் கோரிக்கையும் வைத்தார் கலைஞர். ஆனால் ஆட்சி மாறி, அணியும் மாறிவிட்டதால், கலைஞரின் முன்னுரையை எடுத்தால் தான் தமிழக அரசின் லைப்ரரி ஆர்டர் இந்தப் புத்தகத்துக்குக் கிடைக்குமென்று சிலர் சொல்ல, கலைஞரின் முன்னுரையை எடுக்க முடியாது என்று மறுத்து விட்டாராம் ஸ்டாலின் குணசேகரன்! சமீபத்தில் இந்தப் புத்தகம் மூப்பனார் முன்னிலையில் வெளியிடப்பட்டது.



• கேப்டன் லட்சுமி நூலை வெளியிட, தியாகி மாயாண்டிபாரதி பெற்றுக் கொள்கிறார்.

– கௌசி

படம்: ராஜன்

# கர்நாடக இ-சை!

ஈ-மெயில், ஈ-காமர்ஸ், ஈ-மேகஸின் என்ற வரிசையில் இப்போது இன்னொரு புதுமை. இசைக்கு முன்னாலும் ஈ ஒட்டிக் கொண்டு விட்டது. ஆம், இன்டர்நெட்டில் இசை. இசை பற்றிய விவரங்கள் வலைத்தளத்தில் கிடைப்பதை இங்கு குறிப்பிடவில்லை. வலை மூலமாகவே இசையைக் கற்றுக் கொள்ள வழி செய்யப்பட்டிருக்கிறது! 'சைபர் (Cyber) வித்யாலயா' என்ற பெயரில் இந்த முயற்சிக்குப் பிள்ளையார் சுழி போடப்பட்டிருக்கிறது. சமீபத்தில் நாரத கான சபாவில் விஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் இதைத் துவக்கி வைத்திருக்கிறார்.



● சைபர் வித்யாலயா துவக்க விழா

'சரித்திரத்திலேயே முதல் முதலான' இந்த முயற்சியை மேற்கொண்டிருப்பவர்கள் இசைக் கலைஞர்கள் சசிகிரணும் சௌம்யாவும் (பிற இசை வகைகளில்கூட இது போன்ற முயற்சி நடைமுறைப் படுத்தப்படவில்லையாம்) தங்கள் 'கர்னாடிகா' அமைப்பின் மூலம், கர்நாடக இசையில் இன்டராக்டிவ் ஸி.டி. ரோம் ஒன்றைத் தயாரித்த இவர்கள், இப்போது வலையை வலைவீசிப் பிடித்திருக்கிறார்கள். மாணவர்களும் தூண்டிலில் சிக்கியிருப்பதாகத் தெரிகிறது.





மூன்று கட்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது பாடத் திட்டம். இதை உருவாக்கியதில் செம்மங்குடி, டி.என். கிருஷ்ணன் போன்ற பல மூத்த கலைஞர்கள் அடங்கிய ஆலோசனைக் குழுவுக்குப் பங்கு உண்டு. உலக இசையைப் பொருத்தவரை டாக்டர் துர்கா இந்தத் திட்டத்தில் தம்மை இணைத்துக் கொண்டிருக்கிறார்.

இந்த சைபர் வித்யாலயாவில் ஏற்கனவே சேர்ந்துள்ள

சிலரைத் தொடர்பு கொண்டோம். (வலைத்தளம் மூலமாகத்தான்!)

"காலை ஆறு மணிக்கு எழுந்துதான் பாட்டு வகுப்புகளுக்குப் போக வேண்டுமென்ற கட்டாயமில்லாமல் எங்களுக்கு வசதியான நேரத்தைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள முடிகிறது. தவிர அதிக ஆர்வம் இருக்கும்போது தொடர்ந்து எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் கற்றுக் கொள்ள முடிகிறதே" என்பது திவ்யாவின் கருத்து. "அதுவும் வசிக்குமிடத்திற்கருகே தகுந்த இசை ஆசிரியர்கள் இல்லாதவர்களுக்கு ஈ-மெயில் மிகச் சௌகரியம்" என்கிறார்.

"நான் கோயமுத்தூரில் வசிக்கிறவள். தலைசிறந்த இசைக் கலைஞர்களில் பெரும்பாலானவர்கள் சென்னையில் வசிக்கிறார்கள். அங்கே போய்த்தான் கற்றுக் கொள்வது என்பது எந்த அளவுக்கு அனைவருக்கும் சாத்தியம்? இந்த கோர்ஸில் சேருவதற்கு முன், சசிகிரணின் சகோதரர் கணேஷ், சுமார் ஒரு மணி நேரத்திற்கு நேர்முகத் தேர்வு வைத்தார். கர்நாடக இசையில் உண்மையாகவே ஆழ்ந்த ஈடுபாடு எனக்கு இருக்கிறதா என்பது உள்பட பல கேள்விகள் கேட்டார். இப்போது இந்தப் பயிற்சியில் சேர்ந்து தினமும் இரண்டு மணி நேரம் கற்றுக் கொள்கிறேன். சௌம்யாவை என் வழிகாட்டியாகப் பெற்றிருப்பது மிக சந்தோஷமான விஷயம்'' என்கிறார் ஒன்பதாவது வகுப்பு படிக்கும் கிருத்திகா ராஜகோபால்.

வேறு சில சாதகங்களும் உள்ளன இந்தப் பயிற்சிமுறையில். முதல் கட்டத்தை




• துவக்க விழாவில் இசை நிகழ்ச்சி... முன்னணி கலைஞர்கள் 'சாந்தி நிலவ வேண்டும்' பாடினர்.

(ஒரு வருடத்திற்கானது) ஆறே மாதங்களில் முடிக்க முடிந்தால் உடனடியாக அடுத்த கட்டத்திற்கு அனுமதி உண்டு. தேர்வு நாட்களில் கூட மாணவர்களுக்கு சாய்ஸ் உண்டு. "நாங்கள் முன்பு சென்னை பல்கலைக் கழகத்தில் இசையைத் தொலை தூரக் கல்வி மூலம் பயின்றோம். ஒலி நாடாக்களை அனுப்புவார்கள். அது ஒருவழிப்பாதைதான். ஆனால் வலைத்தளம் என்பது இருவழிப்பாதையாயிற்றே. தவிர, பல்கலைக்கழகம் குறிப்பிடும் ஐந்து நாட்களில் ஒருநாள்தான் தேர்வில் நாம் கலந்து கொள்ளலாம். எங்கள் திட்டத்தில் சந்தேகங்களைத் தொலைபேசி மூலமும் தீர்த்துக் கொள்ளலாம். ஆடியோ மற்றும் வலைத்தளத்தின் மூலமும் நிவர்த்தி செய்து கொள்ளலாம்'' என்கிறார் சசிகிரண்.

வேறு சில வருங்கால திட்டங்களும் இருக்கின்றன இவர்களுக்கு. 'இப்போது கர்நாடக சங்கீதத்தைத்தான் வலைத்தளத்தின் மூலம் கற்றுக் கொடுக்கிறோம் என்றாலும் வருங்காலத்தில் சமஸ்கிருத மொழியைக் கற்றுத் தரும் எண்ணமும் உண்டு. கர்நாடக இசை வகுப்புகளுக்கு மூன்றிலிருந்து பன்னிரண்டு வயதிலுள்ள குழந்தைகளுக்காக தனியான வகுப்புகளையும் வலையில் அறிமுகப் படுத்த உள்ளோம். "ஒரே ஒரு பாடலை மட்டுமே கற்றுக் கொள்ள வேண்டுமானால் அதற்கான வசதிகூட இப்போதே உண்டு"

உலக அளவில் கர்நாடக இசை புதிய ஊடகத்தின் மூலம் பரவுவது ஆனந்த

''படத்தின் பெயர் 'வீடு'ன்னு ஏன் வெச்சீங்க?''

''எல்லாருக்கும் நல்ல 'போர்ஷன்' கிடைச்சிருக்கு.''

- சாயம் வெ. ராஜாராமன்



மான விஷயம் என்றாலும் சில சந்தேகங்கள் அரித்தெடுத்தன. அவற்றை சசிகிரணிடம் வெளிப்படுத்தினோம்.

''இசையை வலைத்தளத்தின் மூலம் கற்றுக் கொடுக்கும்போது கூடவே வி.ஸி.டி., ஆடியோ ஆகியவற்றையும் அளிக்கத் தயார் என்று கூறுவது தொழில்நுட்ப பயன்பாடு என்கிற கோணத்தில் ஒருவித பின்னடைவு இல்லையா?''

''எங்கள் நோக்கம் 'டாட் காமா'க உருவாக வேண்டுமென்பதல்ல. பலரையும் கர்நாடக சங்கீதம் சென்றடைய வேண்டுமென்பதுதான். அந்த விதத்தில் இவற்றையும் அளிப்பதில் தவறில்லை. சிலர் காரில் சென்று கொண்டே பாடல்களைக் கேட்டுப் பயில வேண்டுமென விருப்பம் தெரிவித்தார்கள். அதனால்தான் அந்த வசதிகளையும் அளிக்கிறோம்'' என்றார் சசிகிரண்.

பாண்ட்விட்த் (bandwidth) என்ற பெரிய சிக்கலை எப்படி சமாளிக்கப் போகிறார்கள்?

''மேலைநாடுகளில் மிக எளிதாக வேண்டிய வலைத்தளங்கள் கிடைத்து விடுகின்றன. அவை மிகத் துல்லியமாகவும் உள்ளன. நம் நாட்டில் இந்த விஷயத்தில் சில பிரச்னைகள் உள்ளது உண்மைதான். ஆன்லைனில் வரும் பாடங்களை 'டவுன்லோடு' செய்துகொள்ள சில சமயம் முடியாமல் போகலாம். இவையெல்லாம் தொழில்நுட்ப முன்னேற்றத்தில் தீர்க்கப்பட்டு விடும் என்று நம்புகிறேன்.''

இப்போதைய அவசர வாழ்வில் குருகுல முறைக்கு இடமில்லாமல் போகலாம். தவிர, இசை மட்டுமே வாழ்க்கை என்று தீர்மானிப்பவர்களின் எண்ணிக்கை அதிகமல்லதான். என்றாலும் இப்படி குருவும் மாணவரும் சந்தித்துக் கொள்ளாமலேயே இசையைக் கற்றுக் கொள்வதென்பது எந்த அளவுக்கு ஏற்புடையது?

பெங்களூரிலிருந்து லட்சுமி என்ற பெண் அளித்திருந்த தகவலையே பதிலாகத் தந்தார் சசிகிரண் : ''பாடங்களைப் பயிலும்போது ஆசிரியருக்கெதிரே உட்கார்ந்து கற்றுக் கொள்வது போலிருக்கிறது. தலைசிறந்த ஆசிரியர்கள் என்பதால் உற்சாகமும் ஏற்படுகிறது.''

நியாயம்தான். ஆனால் ஆசிரியரால் மாணவரைப் பார்க்க முடியாது அல்லவா? முகபாவத்தாலேயே மாணவனின் குறைநிறைகளைக் கண்டுபிடிப்பது, அதேபோல் ஆசிரியரின் ஒரு முகச் சுளிப்பிலேயே மாணவன் தனது தவறை உணர்ந்து திருத்திக் கொள்வது போன்ற மனித நுணுக்கங்கள் இந்த முறையில் இருக்க வாய்ப்பில்லை.

கிரைண்டர் வந்துவிட்ட பிறகு 'என்னதான் இருந்தாலும் ஆட்டுக்கல்லில் அரைக்கும் மாவில் கைமணமும் உண்டு' என்று சொல்லிக் கொண்டிருப்பது அசட்டுத்தனம்தான். ஆனால் இந்த வாதம் கர்நாடக இசைக்குப் பொருந்துமா?

பலரையும் இசைக்கல்வியை அடைய வைப்பது என்று சந்தேகமில்லாமல் உயரிய முயற்சி. அதில் சில இனிய சங்கீத மரபுகளும் கரைந்து போவது கொஞ்சம் இடிக்கத்தான் செய்கிறது.

- ஜி.எஸ்.எஸ்.



''வியாபாரத்தில் இருபது லட்சம் நஷ்டமானதும் என் கணவர் சாமியாராப் போயிட்டார்!''

''அவ்வளவு விரக்தியா?''

''ஊஹூம். அந்த பிஸினசில் விட்டதை இந்தப் பிஸினசில் பிடிச்சுடலாம்னுதான்!''

- உ. ராஜாஜி

# எஸ்.வி.எஸ்.

கல்கி காரியாலயத்தில் நான் சேர்ந்த புதிதில், ஒரு நாள் ராஜாஜியின் இல்லத்துக்கு ஏதோ காரியமாகப் போனேன். அப்போது துணை ஆசிரியர் எஸ்.வி.எஸ்., ராஜாஜியுடன் பலமான வாக்குவாதத்தில் ஈடுபட்டிருந்தார். எனக்கு அதிர்ச்சியாக இருந்தது. 'ராஜாஜியுடன் இப்படி வாதாடுவதற்காகவா இவருக்கு கல்கி காரியாலயம் சம்பளம் தருகிறது?' என்று திகைப்புடன் எண்ணினேன்.

என் வேலை முடிந்து திரும்பும் போது எஸ்.வி.எஸ். உடன் வந்தார். அவரிடம் என் வருத்தத்தை வெளியிட்டபோது அவர் சிரித்துக் கொண்டே, "அந்த ரகசியம் உனக்குத் தெரியாதா? ராஜாஜிக்கு விவாதம் என்றால் ரொம்பப் பிடிக்கும்! ஆரோக்கியமான விவாதத்தால் தான் எந்தப் பிரச்னையிலும் தெளிவு பிறக்கும் என்று உறுதி யாக நம்புகிறவர் அவர். அதனால் தர்க்கத்தை வரவேற்பார். தமது கருத்து சரி என்று நிலை நாட்டு வார். அவர் தமது கருத்தை மாற்றிக் கொண்ட சில தருணங் களும் உண்டு. பதவியில் இருந்த போதும் இப்படித்தான். அதிகாரி கள் தங்கள் கருத்தை, தயக்கமின்றியும் அச்சமின்றியும் தமக்கு எடுத்துரைக்க ஊக்குவிப்பார்" என்றார்.



இன்னொரு சமயம் ஒரு பிரமுகரைப் பாராட்டுவதற்காக டீ பார்ட்டி நடந்தது. சாப்பிட்டு முடிந்ததும் அன்றைய விழா நாயகரைச் சிலர் வாழ்த்திப் பேசினார் கள். ராஜாஜி, பேச்சுக்களின் இடை இடையே மேஜையைத் தட்டினார். இதில் ஓரிரு பேச்சாளர்கள் கலவர மடைந்து அவசரம் அவசரமாகத் தங்கள் பேச்சை முடித்துக் கொண்டனர். "என்ன ஸார் இது, ராஜாஜி இப்படி பண்ணுகிறார்?" என்று நான் எஸ்.வி.எஸ்.ஸிடம் கேட்டேன். அவர் புன்னகையுடன், "ராஜாஜி மேஜையைத் தட்டு கிறார் என்றால், பேச்சை மகிழ்ச்சியுடன் ஆமோதிக்கிறார் என்று அர்த்தம். இது சட்டமன்றத்திலும் நாடாளுமன்றத்திலும் அவ ருக்கு ஏற்பட்ட பழக்கம்" என்று விளக்கினார்.

இப்படி ராஜாஜி பற்றிய பல நுணுக்க மான விஷயங்களை, எஸ்.வி.எஸ். என்று பிரபலமடைந்த எஸ்.வேங்கடசுப்பிரமணியம் மட்டுமே அறிந்திருக்க முடியும். காரணம், அவர் டி.கே.சி.யின் இலக்கியத் தொண்டராக ஆரம்பித்து ராஜாஜியின் அணுக்கத் தொண்ட ராக உருமாறியவர். டி.கே.சி. அவருக்கு இலக்கியத்தில் ஈடுபாட்டை உருவாக்கி, பண்படுத்தி கல்கி காரியாலயத்தில் பணி யாற்றுமாறு அனுப்பி வைத்தார். கல்கி அவர்களிடம் பயின்று, துணுக்குகள் முதல் தொடர்கதைகள் வரை பத்திரிகைக்குத் தேவையான பலவற்றையும் ரசமாக எழுதும் ஆற்றலை வளர்த்துக் கொண்டு, துணை ஆசிரியர் நிலைக்கு உயர்ந்தார். பின்னாட்களில் ராஜாஜி அவர்களுடைய கருத்துக்களை அறிந்து கொண்டு, அதற்கேற்ப தலை யங்கங்கள், அரசியல் செய்திகள், கட்டுரை கள் எல்லாம் எழுதி அரசியல் விமர் சகராகவும் விளங்கினார்.

என்றாலும் ராஜாஜிக்கு சேவை செய்வதையே அனைத்திலும் பெரிய பாக்கியமாகக் கரு தினார். ராஜாஜி வெளியூர் செல்லும் நேரங்களில் எஸ். வி.எஸ். உடன் சென்று, அவ ருக்குக் கைக்குட்டை எடுத் துக் கொடுப்பது முதல், அவ ருடைய ருசிக்கு ஏற்ப காப்பி யும், ரவா உப்புமாவும் ஏற் பாடு செய்து தருவது வரை பல காரியங்களையும் தயங்காமலும் பெரு மிதத்தோடும் செய்து வந்தார்.

பத்திரிகைத் துறையில் ஓய்வு பெற்ற பிறகும், ராஜாஜியின் வழிகாட்டலைப் பின் பற்றி ஒரு வினாடிகூட வீணாக்காமல் பல பொது நலப் பணிகளில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டார். அவகாசம் கிடைத்த போதெல் லாம் இலக்கியக் கூட்டங்களுக்குப் போவார். நல்ல நூல்களைத் தேர்ந்தெடுத்துப் படித்துக் கொண்டிருப்பார்.

டி.கே.சி., கல்கி, ராஜாஜி ஆகிய மும்மூர்த்தி களிடம் பயிலும் பாக்கியம் பெற்ற எஸ்.வி.எஸ்., பண்பாளராக விளங்கியதில் வியப்பொன்று மில்லை. அவர் மறைவினையொட்டி நான் சந்தித்த ஒரு சிலர் "என்னை வாழ வைத்த தெய்வம்" என்று நெகிழ்ச்சியுடன் அவரைப் பற்றிக் குறிப்பிட்டனர்.

எஸ்.வி.எஸ்.ஸின் வாழ்க்கை நிறைவானது, உன்னதமானது என்பதற்கு இந்தச் சொற்கள் போதாதா, என்ன?

- கி. ராஜேந்திரன்

# முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

# தடையொன்றுமில்லை 20

அனுஷ்டானம் என்பது ஒரு இறக்கை; ஞானம் என்பது ஒரு இறக்கை. இரண்டு இறக்கை இருந்தால்தான் பறவை பறக்கும். நமக்கும் ஞானம், அனுஷ்டானம் ஆகிய இரண்டு இறக்கைகளும் இருந்தால்தான் பகவானைப் போய் அடைய முடியும்.

அதனால்தான் உயர்ந்ததான காயத்ரியை அனுஷ்டிக்க வேண்டும்; நித்யம் அனுசந்தானம் பண்ணவேண்டும் என்றது. பலம், தேஜஸ், ஓஜஸ் எல்லாம் காயத்ரியினாலே நமக்குக் கிடைக்கிறது.

நன்றாக கவனித்துப் பார்த்தோமானால், சஹஸ்ரநாமத்தின் முதல் சுலோகத்திலே ஒன்பது திருநாமங்கள், இரண்டாவது சுலோகத்திலே எட்டு திருநாமங்கள், மூன்றாவது சுலோகத்திலே ஏழு திருநாமங்கள் இருக்கின்றன.

வரிசையைக் கவனித்தால், ஒவ்வொரு சுலோகத்திலும் ஒவ்வொரு நாமாவாகக் குறைந்து கொண்டே வருவதைப் பார்ப்போம். 9,8,7 என்ற மூன்று எண்களையும் கூட்ட வேண்டும் – மொத்த 24 திருநாமங்கள் முதல் மூன்று சுலோகங்களிலே இருக்கின்றன.

இந்த 24 திருநாமங்களும் எதைக் காட்டுகின்றன என்றால், காயத்ரியின் அக்ஷரங்களைக் காட்டுகின்றன!

காயத்ரிக்கு எத்தனை அக்ஷரங்கள் என்பதை வேதமே நமக்குக் காட்டுகிறது. எத்தனையோ மந்திரங்கள் காயத்ரி சந்தஸ்ஸில் அமைந்திருக்கின்றன.

அந்த காயத்ரி சந்தஸ்தான் எல்லா சந்தஸைக் காட்டிலும் உயர்ந்தது. (சந்தஸ் என்பது ஓசை அமைப்பு–அக்ஷர கூட்டங்களின் அமைப்பு.)

காயத்ரியை இரண்டாம் காண்டத்தில் ஸ்தோத்திரம் பண்ணுகிறது வேதம்–

ஓஜஸ்வதி காயத்ரி

பலஸ்வதி காயத்ரி

– தேஜஸ்வினியாய், பலம் பொருந்தியவளாய் இருக்கிறாள் என்கிறது வேதம்.

இப்போதும் இந்த ஸ்லோகத்தைச் சொல்லிவிட்டுத்தான் காயத்ரியை ஜபிக்க வேண்டும். இல்லையென்றால் காயத்ரி பலனைக் கொடுக்காது.

அதனால்தான் காயத்ரி சந்தஸ்ஸுக்கு அத்தனை சிறப்பு.

எத்தனையே சந்தஸ் பற்றிச் சொல்கிறது வேதம். 32 அக்ஷரம் இருந்தால் அது அனுஷ்டுப் சந்தஸ். பத்து அக்ஷரங்கள் ஒரு சந்தஸ்ஸில் இருந்தால் அது விராட் சந்தஸ்... ஆனால், அனைத்து சந்தஸ்ஸுக்கும் தாயானவள், மூலம்– இந்த காயத்ரிதான்.

ஆகவே காயத்ரியை ஜபம் பண்ணுங்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

சாஸ்திரம் மூன்று விதமான ஜபங்களைச் சொல்கிறது.

முதலாவது– பெரிதாக, எல்லோருக்கும் கேட்கும்படியாகச் சொல்வது.

சமகத்திலே ஈச்வரனைக் கொண்டாடுகிறபோது, 'பரமசிவன் மந்திரங்களை ரொம்ப உயர்ந்த சப்தத்திலே சொல்கிறார்' என்கிறது.

அந்த மாதிரி, ஜபத்திலேயும் சிலவற்றை உயர்ந்த கோஷமாகச் சொல்ல வேண்டும். தூரத்தில் இருக்கிறவர்களுக்குக் கூட கேட்கிற மாதிரி, அவர்களும் பயனடைகிற மாதிரி சொல்லவேண்டும்.

உபாகுஞ்ச: என்றொரு ஜப விதானம். அந்த முறையிலே சொல்கிறபோது, சொல்கிறவருக்குக் கேட்கும். பக்கத்தில் இருக்கிறவர்களுக்குக் கேட்கும்; அவ்வளவுதான்.

இதற்கு மேல் மூன்றாவதான மந்திர

உச்சாரண முறை என்னவென்று கேட்டால் மௌனம்.

மௌனம் என்றால் சப்தம் வெளியில் கேட்காது.

காயத்ரியை ஜபிப்பதற்கு எது விசேஷம் என்றால், கடைசியிலே சொன்னோமே அதுதான் உத்தமம். பலமாகச் சொல்லக் கூடாது. ரொம்ப சிரமப்பட்டு, ரொம்ப ஜாக்கிரதையாக அதை ரக்ஷிக்க வேண்டும்.

ஒருத்தர் சொல்கிறார்– 'புத்தகத்திலே இந்த மந்திரம் படித்திருக்கிறேன்' என்று ! 'எந்த மந்திரம்...?' என்று கேட்டால், 'படித் திருக்கேன், தெரியும்' என்கிறார்! தானாகப் புத்தகம் பார்த்து மனப்பாடம் பண்ணி ஒரு மந்திரம் ஜபித்தால் அது பலனைக் கொடுக் கவே கொடுக்காது. ஆகையினால் சாஸ்திர விஹிதம் ஆசார்யரிடத்திலே, மந்திர உபதே சம் பெற்றுக் கொள்ள வேண்டும் . அப்படி உபதேசிக்கிற ஆசார்யரும் அந்த மந்திரத் திலே சித்தி உடையவராக இருக்க வேண் டும்.

உபனயனத்தன்று காயத்ரி மந்திரம் சொல்லிக் கொடுக்கப்படுகிறது. பிரும்மோப தேசம் என்றுதான் அந்த நிகழ்ச்சியைச் சொல்கிறார்கள். பிரும்மோபதேச சுப முகூர்த்த பத்திரிகை என்றுதானே எழுது கிறோம்.

பிரும்மோபதேசம் என்பது இரண்டாவது பிறப்பு. காயத்ரியினாலே இன்னொரு மாதா அவனுக்குக் கிடைக்கிறாள். உத்தமமான பிறப்பு காயத்ரியினாலே ஏற்படுகிறது. உபதேசத்தைப் பண்ணுகிறவர் அப்பாவா கவோ, தாய்மாமனாகவோ இருப்பார்.

இந்த உபதேசத்தைப் பண்ணுகிறவர் கூட 48 நாள் – ஒரு மண்டலம்– முன்னதாகவே காயத்ரியை ஒவ்வொரு நாளும் ஆயிரம் தடவை ஜபித்து வைக்க வேண்டும். அப்போதுதான் அந்தப் பையனுக்கு அவர் உபதேசம் பண்ண முடியும்.

இவர் ஒன்றுமே பண்ணாமல், பையனுக்கு உபதேசம் மட்டும் பண்ணினால் அவனுக்கு அந்த மந்திரம் சித்திக்குமா!

நாளைக்கு நல்ல முறையில் அவன் சந்தியாவந்தனம் பண்ணி, பெருமையை அடைய வேண்டுமானால், உபதேசம் பண்ணுகிறவர் அதை நன்கு ஜபித்து வைத்து சித்தியை அடைந்தவராக இருக்க வேண்டும். பூரணமாக, நித்ய ஜபம் பண்ணக் கூடியவர் கள்தான் உபதேசம் பண்ணலாம் என்கிறது சாஸ்திரம்.

இப்படிப்பட்ட நியமங்களில் கட் டுண்டு உபதேசிக்கப்பட்டு வருகிற காயத்ரி யானது மூன்று பாதங்களுடையது. ஒவ் வொரு பாதத்துக்கும் எட்டு அக்ஷரங்கள் உள்ளன என்று வேதமே விவரித்திருக் கிறது.

சஹஸ்ரநாமத்தின் முதல் சுலோகம் காயத்ரியினுடைய முதல் வாக்கியத்தின் பொருளைச் சொல்கிறது. இரண்டாவது சுலோகம், இரண்டாவது வாக்கியத்தின் பொருளைச் சொல்கிறது; மூன்றாவது சுலோகம் மூன்றாவது வாக்கியத்தின் பொருளைச் சொல்கிறது.

ஆகையினாலே, சஹஸ்ரநாமம் என்பதே காயத்ரியிலேதான் ஆரம்பிக்கிறது. காயத்ரியை ஆரம்பிக்கும் முன்னால் 'ஓம்' என்று பிரணவத்தைச் சொல்லித்தான் ஆரம் பிக்க வேண்டும். வேதமனைத்துக்கும் வித்தா னது, மூல பீஜமானது பிரணவம் என்று ஏற் கெனவே சொல்லியிருக்கிறேன்.

வேதமனைத்தையும் சுருக்கினால் கிடைப்பதுதான் பிரணவம். பூர்வ காலத்தில் மஹரிஷிகளெல்லாம் அப்படித்தான் பண்ணினார்கள். பரந்து, விரிந்து எத் தனையோ மண்டலங்களாக இருப்பது ரிக் வேதம். அதையெல்லாம் போட்டு அவர்கள் சுருக்கினார்கள். அத்தனை மண்டலமும், அத்தனை யாகமும் எட்டு எழுத்தாகச் சுருங்கிப் போய்விட்டது. அதனால் விசேஷ மானவன் எம்பெருமான். எட்டெழுத்தை உடையவன் எம்பெருமான்.

எட்டு எழுத்து என்றால் என்ன அர்த் தம்? காயத்ரியின் முதல் பாகத்தில் இருக்

## அருள்வாக்கு

பாலிடிக்ஸ், ஸினிமா, பத்திரிகை, ஸ்போர்ட்ஸ் என்று நான் சொன்னதில் பாலிடிக்ஸ் என்பது மாணவர்களுக்கு வேண்டவே வேண்டாம். தேச நடப்பு அதில் தானே இருக்கிறது என்று கேட்கலாம். தேச நடப்பு அதில்தான் இருந்தாலும் அந்த நடப்பை நல்ல கூர்மையான அறிவுடன் நடத்தித் தரவும் கல்வியில் தேர்ச்சி பெறு வதுதானே உதவும்? இப்போது கல்விக்கு இடையூறு செய்து கொண்டு பொலிடிகல் பிரச்னைகளில் இறங்குவது அதை மேலும் உணர்ச்சி வேகத்தால் கெடுத்து, தங்களை

கும்படியான எட்டு எழுத்தில் அவன் இருக்கிறான் என்றாகிறது. யஜுர் வேதத்தில் ரொம்ப கஷ்டமான சப்தங்கள் உண்டு. யஜுர் வேதத்தைப் போட்டுக் கடைந்த போதும் அதிலிருந்து எட்டு எழுத்துக்கள் வந்தன.

அதே மாதிரி ஸாம வேதத்தையும் போட்டுக் கடைந்தார்கள். அதிலேயிருந்தும் எட்டு எழுத்துக்கள் வந்தன.

மூன்று வேதங்களைச் சொன்னாலே அதிலே அதர்வண வேதம் அடங்கிவிடும். நான் மறையின் சாரமாக இவ்வாறு மூன்று வாக்கியங்கள் தோன்றின. அந்த மூன்று வாக்கியங்கள்தான் காயத்ரி.

அப்படியானால் என்ன அர்த்தம்...? எல்லா மந்திரங்களும் காயத்ரியாக மாறிப் போய்விட்டன!

ரிஷிகள் அதையும் விடவில்லை... மேலும் சுருக்கினார்கள்! முதல் பாகத்திலேயிருந்து பூ: இரண்டாவது பாகத்திலேருந்து புவ: மூன்றாவது வாக்கியத்திலிருந்து சுவ: என்ற மூன்றையும் எடுத்து மேலும் சுருக்கினார்கள். அப்படிச் சுருக்குகிறபோது அ.உ.ம என்று மூன்று அக்ஷரங்கள் தோன்றின. அதைச் சேர்த்து இழைத்தார்கள்.

'மூலமாகிற ஒற்றை எழுத்தை மூன்று மாத்திரை உள்ளெழ வாங்கி' என்கிறார் ஆழ்வார்.

– அவ்வாறு இழைத்து, உள்ளெழ வாங்கிய போது ஓம்காரம் தோன்றியது.

ஓம்காரத்தை மேலும் சுருக்க முடியாது. அதுதான் முழு பீஜம். அணுவாய்ச் சுருங்கி நிற்கிறது அதனால் அதை சர்வ ஜாக்கிரதையுடன் உச்சரிக்க வேண்டும்.

ரொம்ப இழுக்கக் கூடாது. ரொம்ப சுருக்கவும் கூடாது. அதற்குக் கால நிர்ணயம் இருக்கிறது சாஸ்திரத்தில்.

மூன்று மாத்திரை காலத்துக்கு உச்சரித்தால் நல்ல ஞானம் வரும். இரண்டரை மாத்திரை உச்சாரணம் பண்ணினால் ஐச்வர்யம் கிடைக்கும். அதனால்தான் ஆழ்வார் பிரணவத்தைப் பற்றிச் சொல்கிற போது மூன்று மாத்திரை உள்ளெழ வாங்கி என்று சொல்கிறார்; இரண்டரை மாத்திரை என்று சொல்லாமல், மூன்று மாத்திரையைத்தான் சொல்கிறார். ஐச்வர்யத்தைவிட ஞானத்தை முக்கியமாகக் கருதிச் சொல்கிறார்.

பிரணவத்தை விவரித்தால் வியாக்ருதி; வியாக்ருதியை விவரித்தால் காயத்ரி; காயத்ரியை விவரித்தால் எல்லா வேத மந்திரங்களும்!

எல்லா மந்திரங்களையும் ரொம்ப விரிவாய் இல்லாமல், பிரணவத்தைப் போல் ரொம்ப சுருக்கமாகவும் இல்லாமல் நடுவிலே பிரகாசிக்கிறது இந்த காயத்ரி. சர்வ சந்தஸ், சர்வ மந்திரங்கள், சர்வ தேவதைகள் இதற்குள்ளே அடக்கம்.

சஹஸ்ரநாமத்தின் முதல் மூன்று சுலோகங்களும் இந்த காயத்ரியின் அக்ஷர எண்ணிக்கையை ஒத்த எண்ணிக்கையில் திருநாமங்களைக் கொண்டு பிரகாசிக்கின்றன என்பது மிகுந்த விசேஷம்.

(வளரும்)



யும் கெடுத்துக் கொள்வதில்தான் முடியும். 'மேலும்' கெடுத்து என்று சொன்னேன். ஏனென்றால் தற்போது அரசியலில் யோக்யர்களும், யோக்யமான கொள்கைகளும் அபூர்வமாகிக் கொண்டே வந்து அது ஸ்வய நலத்துக்கும், ஆத்திர-க்ஷாத்திரங்களுக்குமே வளப்பமான விளை நிலமாகியிருக்கிறது. இந்த நிலையில் பக்குவ தசைக்கு வராத இளவயஸு மாணவர்கள் அதில் போய் விழுந்தால்?

இப்போது போலில்லாமல் பாலிடிக்ஸ்-அரசியல்-ஒழுங்காக, தார்மிகமாக இருந்தாலும், எதற்கும் உரிய பருவம் என்று ஒன்று உண்டாகையால், படித்துத் தேர்ச்சி பெற்று உத்யோகத்துக்குப் போய் வாழ்க்கை பொறுப்பு எடுத்துக் கொள்ளவே கடமைப்பட்டுள்ள மாணவ ஸமூஹம் அரசியலில் இறங்கவே கூடாது.

கல்வி கற்கிற காலத்தில் ஆற்ற வேண்டிய கடமை கல்வி கற்பதுதான். அதற்குக் குந்தகமாக அரசியலில் ஈடுபாடு காட்டுவது இன்றைக்கும், என்றைக்குமாக தனக்கும் ஹானி பண்ணி, தேச நடப்புக்கும் குந்தகந்தான் உண்டாக்கும்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**




Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

வீட்டின் அழகு **கதவில்** தெரியும் !

Now Flat Buyers insist on

# MAYURAM

## TIMBER DOORS



because




Contact:

**MAYURAM TIMBER & GENERAL TRADING CORPN.**

H.O.: 83, G.S.T.Road, Chennai - 45. ☎:236 8297/238 1281.

Showroom: 13, Rameswaram Road, T.Nagar, Chennai - 600 017. ☎: 434 5207

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2001 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka

# எக்ஸோ ஆன்ட்டி-பாக்டீரியல் டிஷ் வாஷ் பார்




முன்பெல்லாம் பாத்திரங்கள் தேய்க்கும்பொழுது சாம்பல் பயன்படுத்திவந்தனர் அந்த நாட்களில் டிஷ்வாஷ் பார்களோ, பவுடரோ இருந்ததில்லை. காலம் மாறியபோது, விஞ்ஞான அறிவு வளர்ந்தது. இப்போது ஆரோக்கிய பாதுகாப்பு விழிப்புணர்வும் கூட அதிகரித்துள்ளது. முன்பு பாத்திரங்கள் சுத்தமாகத் தோன்றினாலே திருப்தி வந்துவிடும். ஆனால் இன்றோ கிருமிகளையும் ஒழிக்க வேண்டும் என்று அனைவரும் அறிந்துள்ளனர்.

**தற்போது பயன்படுத்தப்படும் டிஷ் வாஷ்பார்கள், பவுடர்களில் :**

- கிருமிகள் ஏதும் இல்லை என்று உங்களுக்குத் தெரியுமா ?
- கையில் ஒரு வறட்சியான உணர்வு மற்றும் சொரசொரப்பு ஏற்படுகிறதல்லவா ?
- நாளடைவில் கையில் தோலில் வறட்சியும் வெடிப்புகளும் ஏற்படுத்துகிறது அல்லவா ?
- நகக் கண்ணை சுற்றியுள்ள பகுதிகளில் எரிச்சல் ஏற்பட்டு வேதனை ஏற்படுகிறது அல்லவா ?
- மணல்துகள்களாலும், அதன் காரத்தன்மையாலும் அழுத்தி தேய்க்கும்போது பாத்திரங்களின் தரம் குறைகிறது அல்லவா ?
- அதிகமான சோப் பயன்படுத்த வேண்டி வருகிறது அல்லவா ?

**எக்ஸோ ஆன்ட்டி பாக்டீரியல் டிஷ் வாஷ் பாரின் தன்மைகள் :**

- கிருமிகளை அழிப்பதோடு உடனடி செயல்திறன் அளிப்பது இது. கடினமாக அழுக்குகளையும் பிசுக்கையும் துரிதமாக போக்குகிறது.
- வேலைப் பளு குறைவதுடன் பாத்திரங்களின் பளபளப்பும் மெருகும் அதிகரிக்கும் அதுமட்டுமல்ல கிருமிகளை அழிக்கவும் செய்கிறது.
- கையில் உள்ள சருமத்தை மென்மையாக பாதுகாக்கிறது.
- எக்ஸோ (EXO) சிறிதளவு பயன்படுத்தினாலே போதும். ஒரு எக்ஸோ மூலம் அதிகமான பாத்திரங்களுக்கு பளபளப்பு அளிக்க முடியும். கிருமிகளை ஒழித்திடவும் முடியும். குறைந்த விலையில் கிடைக்கும் மற்றவைகளைக் காட்டிலும் இது இலாபகரமானது. நீங்கள் அளிக்கும் பணத்தை விட அதிக மதிப்பு அளிக்கிறது.

இக்குறைகளையெல்லாம் போக்கி, மிக நவீன விஞ்ஞான முறைப்படி உங்களின் ஜோதி லேபோரெட்டரீஸ் தயாரித்துள்ளது எக்ஸோ ஆன்ட்டி பாக்டீரியல் டிஷ்-வாஷ் பார்.




இப்போது
இலவசம்
ரூ. 3.50
விலையுள்ள
30 மிலி
உஜாலா
சுப்ரீம்




A product of Jyothy Laboratories Ltd.